ஸ்ரீ

பின்பழகியபெருமாள்ஜீயர்

அருளிச்செய்த

ஆறாயிரப்படி

# குருபரம்பராப்ரபாவம்.

குருபரம்பராவிவரண மென்கிற

அருமையான கிரந்தத்துடன்

திருத்தமான புதிய பதிப்பு.

ஸ்ரீ. உ. வே.

திருவல்லிக்கேணி

வைத்தமாநிதி - முடும்பை

ஸ்ரீநிவாஸஅப்பங்கார்ஸ்வாமி முன்னிலையில்

சே. கிருஷ்ணமாசாரியராலும்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியராலும்

அநேக ஸ்ரீகோஸங்களைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு,

சென்னை

கணேச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது

பராபவஸு கார்த்திகைமீ.

விலை ரூபா - உ. -

[ரிஜிஸ்டெர்ட் காபிரைட்.]

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பதிப்புரை.



ஸம்ப்ரதாயம் அறிந்த ஆரியர்களே!

பிராசீநகிரந்தங்கள்பலவற்றில் ஆங்காங்குப்பொருந்திய வடமொழித் தொடர்களும், ஆழ்வார்க ளருளிச்செயல்களில் அமைந்த தமிழ்மொழித் தொடர்களும் இடையிடையே கலந்துவரும்படி மணிப்ரவாளநடைக்கு ஒருவழிகாட்டி யாகுமாறு பரமகாருணிகரான ஸ்ரீபின்பழகியபெருமாள்சீயர் அருளிச்செய்த குருபரம்பராப்ரபாவ மென்னும் இந்தக்கிரந்தம் இதற்கு முன்னே அச்சிடப்பட்டிருந்தாலும் அநேகஸ்ரீகோஸங்களைக்கொண்டு ஒப்பிட்டுப்பார்க்கும்போது பலபடியாக மாறுபாடுகள் நேர்ந்திருந்தமையால், நாங்கள் எங்களுடைய புத்திஸக்திக்கு அநுகுணமாக ஏட்டுப்புஸ்தகங்களைக்கொண்டு பரிஸீலித்து, முன்பதிப்புக்களில் விடுபட்டுள்ள விஷயங்களைச் சேர்த்தும் மாறியுள்ள விஷயங்களை நேராக்கியும் பரிசோதித்துப் பதிப்பிக்கலானோம்.

குருபரம்பரைக்கு ஸம்பந்தமாயும், அபூர்வமாயுமுள்ள சிறந்தவிஷயங்களைத் தெரிவிப்பதனால், **குருபரம்பராவிவரணம்** என்கிற அருமையான கிரந்தமும் இதனுடன் சேர்த்து அச்சிடப்பட்டது. இந்தக்கிரந்தம் ஸ்ரீமணவாளமாமுனிகளுக்குமுற்பட்ட பெரியோரால் அருளிச்செய்யப்பட்டதென்று ஊஹிக்கப்படுகிறது:

இப்பதிப்பில் ஸ்லோகங்களைத் தமிழிலும்,கீழே(புட்நோட்டுக்களாகத்) தெலுங்கிலும் அச்சிட்டிருக்கிறோம். ஸம்ஸ்கிருதபதங்களில் அழுத்தி உச்சரிக்கவேண்டிய எழுத்துக்கள் தடித்த எழுத்தாக இருக்கும்.

இந்தப்பதிப்பில் நேர்ந்த தவறுகளையாயினும் சீர்திருத்தக்குறைவுகளையாயினும் எவரேனும் எமக்குத் தெரிவிப்பாராயின், அவரைப் பேருதவி செய்தவராகப் பாராட்டச் சித்தராயிருக்கிறோம்.

பராபவஸூ கார்த்திகைமீ }

சே. கி.
வை. மு. கோ.

## விஷயஸூசிகை.



### குருபரம்பராப்ரபாவம்.



### குருபரம்பராவிவரணம்.



ஸ்ரீ:

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# குருபரம்பராப்ரபாவத்தனியன்கள்.



ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవం।
యతీన్ద్రప్రవణంవన్దే రమ్యజామాతరంమునిం॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் -
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

లక్ష్మీనాథసమారమ్భాం నాథయామునమధ్యమాం।
అస్మదాచార్యపర్యన్తాం వన్దేగురుపరమ్పరాం॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே -
அஸ்மத்குரோர்பகவதோ஽ஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே.

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణితృణాయమేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్యదయైకసిన్ధో రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம் -
ஆத்யஸ்யந:குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

మాతాపితాయువతయస్తనయావిభూతిస్సర్వంయదేవనియమేనమదన్వయానాం।
ఆద్యస్యనఃకులపతేర్వకుళాభిరామం శ్రీమత్తదఙ్ఘ్రియుగళంప్రణమామిమూర్ధ్నా॥

பூதம்ஸரஸ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந் -
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம்ப்ரணதோ஽ஸ்மிநித்யம்.

భూతంసరస్యమహదాహ్వయభట్టనాథ శ్రీభక్తిసారకులశేఖరయోగివాహాన్।
భక్తాఙ్ఘ్రిరేణుపరకాలయతీన్ద్రమిశ్రాన్ శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోఽస్మినిత్యం॥

நாதம்பங்கஜநேத்ரராமயமுநாவாஸ்தவ்யமாலாதராந்
யோகீந்த்ரம்குருகேஶசந்த்ரஜலதிம்கோவிந்தகூராதிபௌ -
பட்டார்யம்நிகமாந்தயோகிஜகதாசார்யௌஸக்ருஷ்ணத்வயௌ
வந்தேமாதவபத்மநாபஸுமந:கோலேஶதேவாதிபாந்.

నాథంపఙ్కజనేత్రరామయమునావాస్తవ్యమాలాధరాన్
యోగీన్ద్రంగురుకేశచన్ద్రజలధింగోవిన్దకూరాధిపౌ।
భట్టార్యంనిగమాన్తయోగిజగదాచార్యౌసకృష్ణద్వయౌ
వన్దేమాధవపద్మనాభసుమనఃకోలేశదేవాధిపాన్॥

நமோவேதாந்தவேத்யாய ஜகந்மங்களஹேதவே -
யஸ்யவாகம்ருதாஸாரபூரிதம்புவநத்ரயம்.

నమోవేదాన్తవేద్యాయ జగన్మఙ్గళహేతవే।
యస్యవాగమృతాసారపూరితంభువనత్రయం॥

வேதாந்தவேத்யாம்ருதவாரிராஶே:
வேதார்த்தஸாராம்ருதபூரமக்ர்யம் -
ஆதாயவர்ஷந்தமஹம்ப்ரபத்யே
காருண்யபூர்ணம்கலிவைரிதாஸம்.

వేదాన్తవేద్యామృతవారిరాశే ర్వేదార్థసారామృతపూరమగ్ర్యం।
ఆదాయవర్షన్తమహంప్రపద్యే కారుణ్యపూర్ణంకలివైరిదాసం॥

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோயாமுநஸூநவே -
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபஶ்ஶ்ரீதரஸ்ஸதா.

శ్రీమత్కృష్ణసమాహ్వాయ నమోయామునసూనవే।
యత్కటాక్షైకలక్ష్యాణాం సులభశ్శ్రీధరస్సదా॥

ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமிஶிரஸாஸதா -
யத்ப்ரஸாதப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம.

శ్రీకృష్ణపాదపాదాబ్జే నమామిశిరసాసదా।
యత్ప్రసాదప్రభావేన సర్వసిద్ధిరభూన్మమ॥

லோகாசார்யாயகுரவே க்ருஷ்ணபாதஸ்யஸூநவே -
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவேநம:.

లోకాచార్యాయగురవే కృష్ణపాదస్యసూనవే।
సంసారభోగిసన్దష్టజీవజీవాతవేనమః॥

நமஶ்ஶ்ரீஶைலநாதாய குந்தீநகரஜந்மநே -
ப்ரஸாதலப்தபரம ப்ராப்யகைங்கர்யஶாலிநே.

నమశ్శ్రీశైలనాథాయ కున్తీనగరజన్మనే।
ప్రసాదలబ్ధపరమప్రాప్యకైఙ్కర్యశాలినే॥

ஸ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

## ஸ்வாசார்யபரம்பரைத் தனியன்களை அநுஸந்தித்துப் பின்பு அநுஸந்திக்கவேண்டிய

## பின்பழகியபெருமாள்சீயர் தனியன்கள்:—

வாத்ஸல்யஸௌஶீல்யகுணாம்புராஶிம்
வக்தாரமர்த்தந்த்ரவிடஶ்ருதீநாம் -
ஸ்ரீதேவராட்புத்ரபதைகநிஷ்டம்
யஜ்ஞேஶஸூரிம்முநிமாஶ்ரயாமஃ.

వాత్సల్యసౌశీల్యగుణాంబురాశిం వక్తారమర్థద్రవిడశ్రుతీనాం।
శ్రీదేవరాట్పుత్రపదైకనిష్ఠం యజ్ఞేశసూరింమునిమాశ్రయామః॥

கலித்வம்ஸிதயாபாத்ரம் பஶ்சாத்ஸுந்தரஸம்ஜ்ஞகம் -
அஜ்ஞாதஜ்ஞாபகம்பும்ஸாம் அஸ்மத்தேஶிகமாஶ்ரயே.

కలిధ్వంసిదయాపాత్రంపశ్చాత్సున్దరసంజ్ఞకం।
అజ్ఞాతజ్ఞాపకంపుంసాం అస్మద్దేశికమాశ్రయే॥

ஶடாரிமுகநிஸ்ஸ்ருதத்ரவிடவேதநிர்வாஹகம்
ஸ்வபக்தஜநரக்ஷணக்ஷம†க்ருபாத்தஸத்வீக்ஷணம் -
ஸ்வஸூக்திரசநோஜ்ஜ்வலத்குருபரம்பராவைபவம்
யதீந்த்ரபதஶேகரந்தமபராங்கரம்யம்பஜே.

శఠారిముఖనిస్సృతద్రవిడవేదనిర్వాహకం
స్వభక్తజనరక్షణక్షమకృపాత్తసద్వీక్షణం।
స్వసూక్తిరచనోజ్జ్వలద్గురుపరమ్పరావైభవం
యతీన్ద్రపదశేఖరంతమపరాఙ్గరమ్యంభజే॥

---

† 'க்ருபாலஸத்வீக்ஷணம்' என்றும் பாடம்.

## பாயிரம்.

" அருள்பிரம்பும் புட்குழிவாழ் பின்பழக ரென்பார்
குருபரம் பராவிபவங் கூறத்—திருவார்
திருச்சங் குடையவன்றாள் சேவிப்போ நெஞ்சே
திருமால் பதஞ்சேர் திறத்து."

ஸ்ரீ

பின்பழகராம்பெருமாள்சீயர் †

அருளிச்செய்த

# குருபரம்பரா ப்ரபாவம்.

## ப்ரவேசம்.

ஸ்ரிய:பதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதநனாய், ஸ்ரீமதநந்தமுகநித்யஸூரிபரிஷந்நிஷேவ்யமாணனாய், அவாப்தஸமஸ்தகாமனாய், அகிலமங்களகுணஸ்வரூபனான ஸர்வேஶ்வரன், (௧) "க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே" என்றும், (௨) "த்ரிபாதஸ்யாம்ருதந்திவி" என்றும், (௩) "ததக்ஷரேபரமேவ்யோமந்" என்றும், (௪) "யோஅஸ்யாத்யக்ஷ:பரமேவ்யோமந்" என்றும், (௫) "தத்விஷ்ணோ:பரமம்பதம் ஸதாபஶ்யந்திஸூரய:" என்றும் ஸகலஜகத்திதாநுஶாஸந ப்ரவ்ருத்தங்களான நிகிலநிகமாந்தஸஹஸ்ரங்களிலும்; (௬) "வைகுண்டேது பரேலோகே ஶ்ரியாஸார்த்தஞ்ஜகத்பதி: - ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" என்றும், (௭) "வைகுண்டேதுபரேலோகே ஶ்ரீஸஹாயோஜநார்த்தந: - உபாப்யாம்பூமிநீளாப்யாம் ஸேவித:பரமேஶ்வர:" என்றும், (௮) "அத்யர்க்காநலதீப்தந்தத் ஸ்தாநம்விஷ்ணோர்மஹாத்மந: - ஸ்வயைவப்ரபயாராஜந் துஷ்ப்ரேக்ஷந்தேவதாநவை:" என்றும், (௯) "ஆக்ரீடாவிவிதா ராஜந் பத்மிந்யஶ்சாமலோதகா: - ஏதேவைநிரயாஸ்தாத ஸ்தாநஸ்யபரமாத்மந:" என்றும், (௧௦) "காலம்ஸபசதேயத்ர நகாலஸ்தத்ரவைப்ரபு:" என்றும், (௧௧) "கலாமுஹூர்த்தாதிமயஶ்சகாலோ நயத்விபூதே:பரிணாமஹேது:" என்றும், (௧௨) "அண்டகோஶாத்ஸாவரணாத் அமுஷ்மாத்பரத:ப்ரபோ - ஸ்தி

---

(௧) "క్షయన్తమస్య రజసః పరాకే." (௨) "త్రిపాదస్యామృతందివి." (௩) "తదక్షరే పరమేవ్యోమన్." (௪) "యో అస్యాధ్యక్షః పరమేవ్యోమన్." (௫) "తద్విష్ణోః పరమంపదంసదా పశ్యన్తి సూరయః." (௬) "వైకుణ్ఠేతు పరేలోకే శ్రియాసార్ధంజగత్పతిః। ఆస్తేవిష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ." (௭) "వైకుణ్ఠేతుపరేలోకే శ్రీసహాయోజనార్దనః। ఉభాభ్యాంభూమినీళాభ్యాం సేవితఃపరమేశ్వరః." (௮) "అత్యర్కానలదీప్తంతత్ స్థానంవిష్ణోర్మహాత్మనః। స్వయైవప్రభయారాజన్ దుష్ప్రేక్షందేవదానవైః." (௯) "ఆక్రీడావివిధారాజన్ పద్మిన్యశ్చామలోదకాః। ఏతేవైనిరయాస్తాత స్థానస్యపరమాత్మనః." (௧௦) "కాలంసపచతేయత్ర నకాలస్తత్రవైప్రభుః." (௧௧) "కలాముహూర్తాదిమయశ్చకాలో నయద్విభూతేఃపరిణామహేతుః." (௧௨) "అణ్డకోశాత్సావరణాత్ అముష్మాత్ పరతఃప్రభో। స్థితోఽహంపరమేవ్యోమన్యప్రాకృతశరీరవాన్."

† 'பின்பழகிய பெருமாள் சீயர்' என்றும் வழங்குவர்.

தோऽஹம்பரமேவ்யோமந்யப்ராக்ருதஶரீரவாந்” என்றும், (க) “யத்தத்புராணமாகாஶம் ஸர்வஸ்மாத்பரமந்த்ருவம் - யத்பதம்ப்ராப்யதத்வஜ்ஞா: முச்யந்தே ஸர்வகில்பிஷை:” என்றும், (உ) “அண்டேப்ய:பரதோநித்யம் த்ரிபாதேந விராஜதே- இதரேணதுபாதேந ப்ராக்ருதேऽண்டேவிராஜதே” என்றும் இத்யாதியான யோகயாஜ்ஞவல்க்ய பஞ்சமவேத புராணரத்ந ஸமுதஞ்சித ப்ராமாண்ய பாஞ்சராத்ராதி வசநஸஞ்சயங்களிலும்; * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களாலே “நலமந்தமில்லதோர்நாடு” என்றும், “சுடரொளியாய் நின்ற தன்னுடைச்சோதி” என்றும், “தெளிவிசும்புதிருநாடு” என்றும், “மாகவைகுந்தம்” என்றும், “தெளிதாகிய சேண்விசும்பு” என்றும் இத்யாதி வாக்யசதங்களிலும் அறுதியிடப்பட்ட அளவிறந்த ஏற்றத்தையுடைத்தாய், (௩) “குண:ப்ரதாநம்புருஷ:பரம்பதம் பராத்பரம்ப்ரஹ்மசதேவிபூதய:” என்றும், (௪) “பரமயோகிவாங்மநஸாऽபரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவ” என்றுதொடங்கி (௫) “நிரதிஶயவைகுண்டநாத” என்றும், (௬) “காலாதிகாதவபராமஹதீவிபூதி:” என்றும், (௭) “யத்தூரேமநஸோ யதேவதமஸ:பாரே யதத்யத்புதம்” என்றும் ஸர்வபூர்வதேசிகஸ்தோமப்ரஶஸ்தமாய், இப்படி வேதாந்தங்களாலும் ருஷிகளாலும் ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் ஏககண்டமாக ப்ரதிபாதிக்கப்பட்ட ப்ரஹாவாதிஶயத்தையுடைய பரமபதத்திலே,—(௮) “ப்ராகாரைஶ்சவிமாநைஶ்ச ஸௌதைரத்நமயைர்வ்ருதா” என்றும், (௯) “மணிதோரணசித்ராட்யா விசித்ரத்வஜ†ஶாலிநீ” என்றும், (க0) “கோடிவைஶ்வாநரப்ரக்யக்ருஹபங்க்திபிராவ்ருதா” என்றுஞ் சொல்லுகிறபடியே *கொடியணிநெடுமதிள்களையும் கோபுரங்களையுமுடைத்தான திருப்படைவீட்டிலே; மணிமாட மாளிகைகளாலே சூழப்பட்ட * செம்பொன்செய்கோயிலிலே; (கக) “ஸஹஸ்ரஸ்தூணேவிசித்ரேத்ருட உக்ரேயத்ரதேவாநாமதிதேவஆஸ்தே” என்றும், (கஉ) “மத்யேதுமண்டபேதிவ்யே ராஜாஸ்தாநம் மஹோச்ச்ரயம்- மாணிக்யஸ்தம்பஸாஹஸ்ரஜுஷ்டம்ரத்நமயம்ஶுபம்-நித்யமுக்தைஸ்ஸமாகீர்ணம் ஸாமகாநோபஶோபிதம் - ‡அதீவதத்ஸதாபூர்ணம்” என்றும், “மாமணிமண்டபத்தந்தமில்பேரின்பத்து” என்றுஞ் சொல்லப்பட்ட ஆநந்தைகார்ணவமான திருமாமணிமண்டபத்திலே; பர்யங்கவித்யாதிப்ரத்யோதித அநவத்ய

(க) “యత్తత్పురాణమాకాశం సర్వస్మాత్పరమంధ్రువం । యత్పదంప్రాప్యతత్వజ్ఞాః ముచ్యన్తేసర్వకిల్బిషైః.” (உ) “అణ్డేభ్యఃపరతోనిత్యం త్రిపాదేనవిరాజతే । ఇతరేణతుపాదేన ప్రాకృతేఽణ్డేవిరాజతే.” (௩) “గుణాఃప్రధానంపురుషఃపరంపదం పరాత్పరంబ్రహ్మచతేవిభూతయః.” (௪) “పరమయోగివాఙ్మనసాఽపరిచ్ఛేద్యస్వరూపస్వభావ.” (௫) “నిరతిశయవైకుణ్ఠనాథ.” (௬) “కాలాతిగాతవపరామహతీవిభూతిః.” (௭) “యద్దూరేమనసోయదేవతమసఃపారేయదత్యద్భుతం.” (௮) “ప్రాకారైశ్చవిమానైశ్చ సౌధైరత్నమయైర్వృతా.” (௯) “మణితోరణచిత్రాఢ్యా విచిత్రధ్వజశాలినీ.” (க0) “కోటివైశ్వానరప్రఖ్యగృహపఙ్క్తిభిరావృతా.” (கக) “సహస్రస్థూణేవిచిత్రేదృఢఉగ్రేయత్రదేవానామధిదేవఆస్తే.” (கஉ) “మధ్యేతుమణ్టపేదివ్యే రాజాస్థానం మహోచ్ఛ్రయం । మాణిక్యస్తమ్భసాహస్రజుష్టంరత్నమయంశుభం । నిత్యముక్తైస్సమాకీర్ణం సామగానోపశోభితం । అతీవతత్సదాపూర్ణం.”

† ‘மாலிநீ’ என்றும் பாடம். ‡ ‘அதீவதத்பதம்புண்யம்’ என்றும் பாடம்.

மாஹாத்ம்யத்தையுடைய திவ்யாஸ்தாநமண்டபத்திலே; உபயவிபூதியுந் தொழிலாக வகுப்புண்டு * கோப்புடைய சீரிய சிங்காசநத்திலே; (௧) "ஹிரண்மயே பரே கோஶே விரஜம்ப்ரஹ்ம நிஷ்களம் - தச்சுப்ரம் ஜ்யோதிஷாஞ்ஜ்யோதிஸ் தத்யதாத்மவிதோ விது:" என்றும், (௨) "நதத்ர ஸூர்யோ பாதி நசந்த்ரதாரகம் நேமாவித்யுதோ பாந்தி குதோऽயமக்நி: - தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" என்றும், (௩) "திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா - யதி பாஸ்ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந:" என்றும், (௪) "ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: - சிந்மயைஸ்ஸ்வப்ரகாஶைஸ்சாந்யோந்யருசிரஞ்ஜிதை:" என்றும், "சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளம்" என்றும், "சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்றும்சொல்லுகிறபடியே நிரவதிகதேஜோரூபமாய் ஸதைகரூபமாய் நித்யஸித்தபரமேஷ்ட்யாதி பஞ்சோபநிஷந்மயமாய் ஸ்வாநுரூபமாய்ச் சிந்மயமாய் விளங்குகிற கிரீடாதி நூபுராந்தமான திவ்யஸ்ரக்வஸ்த்ராபரணபூஷிதனாய், ஆபரணகோடியிலும் ஆயுதகோடியிலும் மெய்க்காட்டுகிற திவ்யாயுதங்களாலே தீப்யமாநனாய், நிரதிஶய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமிதோதாரகுணகணநிதியான திவ்யமங்களவிக்ரஹ விஶிஷ்டனாய், இவ்வடிவழகடங்கக் காட்டிலெரித்த நிலாவாகாமே (௫) "ப்ருஹச்சரீரோபி விமாநதேஹோ யுவாகுமாரத்வமுபேயிவாந்ஹரி: - ரேமே ஶ்ரியா உஸௌ ஜகதாஞ்ஜநந்யா ஸூஜ்யோத்ஸ்நயா சந்த்ர இவாம்ருதாம்ஶு:" என்றும், "உடனமர்காதல்மகளிர் திருமகள் மண்மகளாயர்மடமகள்" என்றும் சொல்லுகிறபடியே இரண்டட்டத்திலுமிருந்து அநுபவிக்கிற * கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்குங் குலவாயர்கொழுந்துக்குங் கேள்வனாய்க்கொண்டு ஸ்ரீபூமிநீளைகளோடே வீற்றிருந்து; இப்படி * கண்ணன்விண்ணூரான * வைகுந்தமாநகரிலே திவ்யபோகம் நடவாநிற்க; அச்சேர்த்தியழகைத் தலைநீர்ப்பாட்டிலே கண்டநுபவித்து நிர்ப்பரஸ்துதிபண்ணி (௬) "நம:" என்பது (௭) "ஜிதம்" என்பது "பல்லாண்டு" என்பதாய் அக்ரமமாகப் * பிணங்கியமரர்பிதற்றுமதுகண்டு, "ஆங்காரவாரமதுகேட்டழலுமிழும் பூங்காரரவணை" என்கிறபடியே அஸ்தாநரக்ஷாவ்யஸநிகளாய், தாஸ்யத்ருஷ்ணைகலிதபரிகரராய், (௮) "ஸூரயோ நித்யஸம்ஸித்தாஸ் ஸர்வதா ஸர்வதர்ஶிந:" என்கிறபடி

---

(௧) "హిరణ్మయే పరే కోశే విరజం బ్రహ్మ నిష్కళం। తచ్ఛుభ్రం జ్యోతిషాం జ్యోతి స్తద్యదాత్మవిదో విదుః." (௨) "నతత్ర సూర్యోభాతి న చన్ద్రతారకం నేమావిద్యుతో భాన్తి కుతోऽయమగ్నిః। తమేవభాన్తమనుభాతి సర్వం తస్యభాసా సర్వమిదం విభాతి". (௩) "దివిసూర్యసహస్రస్య భవేద్యుగపదుత్థితా । యదిభాస్సదృశీ సాస్యాత్ భాసస్తస్య మహాత్మనః." (௪) "స్రగ్వస్త్రాభరణైర్యుక్తం స్వానురూపైరనూపమైః । చిన్మయైస్స్వప్రకాశైశ్చాన్యోన్యరుచిరఞ్జితైః." (௫) "బృహచ్ఛరీరోపి విమానదేహో యువాకుమారత్వముపేయివాన్ హరిః। రేమే శ్రియాऽసౌ జగతాం జనన్యా సుజ్యోత్స్నయా చన్ద్ర ఇవామృతాంశుః." (௬) "నమః." (௭) "జితం." (௮) "సూరయో నిత్యసంసిద్ధా స్సర్వదా సర్వదర్శినః."

யே * முடியுடைவானவரான* அயர்வறுமமரர்களாலும், (க) "ஸூர்யகோடி ப்ரதீகாஶாঃ பூர்ணேந்த்வயுதஸந்நிபாঃ - யஸ்மிந்பதேவிராஜந்தே முக்தாஸ்ஸம்ஸாரபந்தநாத்" என்னும்படி * கரைகண்டோராய் அநந்தவைநதேயாதிவத் அத்யந்தரங்கரான அநந்தமுக்தப்ருந்தங்களாலும் அநவரதபரிசர்யமாண சரண நளிநனாய்க் கொண்டு, (உ) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் விஷ்ணுர்ப்ரஹ்மமயோமஹாந் - ஈஶ்வரந் தம் விஜாநீமஸ் ஸபிதாஸ் ஸப்ரஜாபதிঃ" என்கிற வேண்டற்பாடு தோன்ற "ஏழுலகுந்தனிக்கோல்செல்ல - வீற்றிருந்து" என்றும், "பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ் சோராமேயாள்கின்ற - செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதிநிர்வாஹகனாய், "கண்டவாற்றாற் றனதேயுலகெனநின்றான்" என்கிறபடியே கண்டகாட்சியிலே தான் உபயவிபூதிநிர்வாஹகனானமை தோற்ற எழுந்தருளியிருந்து; (௩) "ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷணாநந்தஜ்ஞாநாநந்தைகஸ்வரூப" என்கிறபடியே தானும் நிரதிஶயாநந்தயுக்தனாய், "அயர் வறுமமரர்கள்" என்கிறபடியே நித்யாஸங்குசிதஜ்ஞாநராயிருந்துள்ள அநந்தகருடவிஷ்வக்ஸேநப்ரமுகரான நித்யஸூரிகளையும், "இயக்கெலாமறுத்து" என்கிறபடியே நிவ்ருத்தஸம்ஸாரருமாய் அஸங்குசிதஜ்ஞாநருமாய் அந்த நித்யரோபாதி லப்தகைங்கர்யருமான முக்தரையும் "அந்தமில்பேரின்பத்துஅடியர்" என்னும்படி ஆநந்திப்பித்துக்கொண்டு போராநிற்க; 'இவர்களோபாதி ஸம்ஸாரிகளும் நம்மையநுபவித்து அநுபவஜநித ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோசிதாஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய நிரவத்யநிரதிஶயாநந்தரூப மத்கைங்கர்யமாகிற மஹாஸம்பத்தைப் பெற்றுவாழுகைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, இவர்கள் இத்தையிழந்திருப்பதே!' என்று மிகவும் வ்யாகுலாந்தঃகரணனாய், அங்குத்தை யநுபவங்களொன்றும் உண்டதுருக்காட்டாதே (௪) "ஸஏகாகீநரமேத" என்கிறபடியே அவன் தனியரைப்போலே போரநொந்து, இவர்கள் கரணகளேபர ஶூந்யராய் (௫) "லூநபக்ஷஇவாண்டஜঃ" என்கிறபடியே இறகொடிந்த பக்ஷிபோலே யிருக்கிறபடியைக் கண்டு, (௬) "கரணகளேபரைர்கடயிதுந்தயமாநமநாঃ" என்றும், "பல்லுயிர்க்கு மாக்கைகொடுத்தளித்த கோனே" என்றுஞ் சொல்லுகிறபடியே பரமதயாளுவாய்க்கொண்டு அகிலாத்மாக்களுக்கும் கரணகளேபரப்ரதாநம் பண்ணியருள; இவர்களும் (௭) "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும் - பூர்வமேவக்ருதாப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்றும், "நாடாத மலர்நாடி நாடோறும் நாரணன்றன், வாடாதமலரடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று" என்றும், "மாயவன்றன்னைவணங்கவைத்த கரணமிவை" என்றும்,

(க) "సూర్యకోటిప్రతీకాశాః పూర్ణేన్ద్వయుతసన్నిభాః । యస్మిన్నదేవిరాజన్తే ముక్తాస్సంసారబన్ధనాత్." (உ) "రాజాధిరాజస్సర్వేషాం విష్ణుర్బ్రహ్మమయోమహాన్ । ఈశ్వరన్తంవిజానీమ స్సపితాస్సప్రజాపతిః." (௩) "స్వేతరసమస్తవస్తువిలక్షణానన్తజ్ఞానానన్దైకస్వరూప." (௪) "సఏకాకీనరమేత." (௫) "లూనపక్షఇవాణ్డజః." (௬) "కరణకళేబరైర్ఘటయితుందయమానమనాః." (௭) "విచిత్రాదేహసమ్పత్తి రీశ్వరాయనివేదితుం । పూర్వమేవ కృతాబ్రహ్మన్ హస్తపాదాదిసంయుతా."

"தேனேய்மலருந்திருப்பாதம்" என்றும், "துயரறுசுடரடி" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வசரணகமலஸமாஶ்ரயணத்துக்கு உறுப்பாகக் கொடுத்த கரசரணாத்யவயவஸங்காதாத்மகமான சரீரத்தைக்கொண்டு அவன்நினைவின்படி செய்யாதே, ஸமிதைதறிக்கக் கொடுத்த கத்தியைக்கொண்டு பசுவின்வாலைத் தறிப்பாரைப்போலேயும் களையெடுக்கக்கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கலக்கிக்கொள்வாரைப்போலேயும் ஆறுநீந்தக்கொடுத்த தெப்பத்தைக்கொண்டு அக்கரையேறலாயிருக்க அதுசெய்யாதே நீர்வாக்காலேயொழுகிக் கடலிலே புகுவாரைப்போலேயும் * ஆக்கையின்வழியுழன்று ஶப்தாதிவிஷயப்ராவண்யத்துக்கு உறுப்பாக்கிக் கர்மப்ரவாஹத்தாலே * பிறவியென்னும் பெருங்கடலிலே புக்கு அநர்த்தப்படுகிறபடியைக் கண்டு; நல்வழிகண்டுநடக்கைக்கு உடலாக (க) "ஶாஸநாச்சாஸ்த்ரம்" என்றும், (உ) "ஹர்த்துந்தமஸ்ஸதஸதீச விவேக்துமீஶோ மாநம்ப்ரதீபமிவகாருணிகோ ததாதி" என்றும், "கலைகளும் வேதமும்நீதிநூலும்கற்பமுஞ்சொற்பொருள்தானும் மற்றைநிலைகளும்வானவர்க்கும்பிறர்க்குநீர்மையினாலருள்செய்து" என்றும், "தொண்டேசெய்தென்றுந்தொழுது வழியொழுகப், பண்டேபரமன்பணித்தபணிவகை" என்றுஞ் சொல்லுகிறபடியே தன்க்ருபையாலே சாஸ்த்ரப்ரதாநம் பண்ணினவிடத்திலும்; அதன்படி செய்யாதே (ங) "ஈஶ்வரோ஽ஹமஹம்போகீ ஸித்தோ஽ஹம்பலவாந்ஸுகீ - ஆட்யோ஽பிஜநவாநஸ்மி கோ஽ந்யோ஽ஸ்திஸத்ருஶோமயா" என்றும், (ச) "யோ஽ந்யதாஸந்தமாத்மாநமந்யதாப்ரதிபத்யதே - கிந்தேநநக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும், "கொல்வன முதலா வல்லன முயலும்" என்றும் சொல்லுகிறபடியே அகிலபாபஹேதுவாய் ஸ்வஸ்வாதந்த்ர்யரூபமான ஆத்மாபஹாரத்தைப் பண்ணி அநாதிகர்மவாஸநாதோஷதூஷிதாந்தஃகரணராய் அபதேப்ரவ்ருத்தராயிருக்கிறபடியைக் கண்டு; ஓலைப்புறத்துச்செல்லாதநாட்டை எடுத்துவிட்டுக் குறும்பறுக்கும் ராஜாக்களைப்போலே ஸர்வேஶ்வரனும் 'நாமேபோய் இவர்களை வாரிப்பிடியாகப்பிடித்துக்கொண்டு வரவேணும்' என்று ராமக்ருஷ்ணாத்யவதாரமாக அவதரித்துப் *படாதனபட்டுத் திருத்தப்பார்த்தவிடத்திலும்; (ரு) "ஆஸுரீம்யோநிமாபந்நா மூடாஜந்மநி ஜந்மநி - மாமப்ராப்யதகௌந்தேய ததோயாந்த்யதமாங்கதிம்" என்றும், (சா) "அவஜாநந்திமாம்மூடாமாநுஷீந்தநுமாஶ்ரிதம் - பரம்பாவமஜாநந்தோ மமபூதமஹேஶ்வரம்" என்றும்சொல்லுகிறபடியே ஸஜாதீயப்ரதிபத்தியாலே அவஜ்ஞைபண்ணி எதிரம்புகோப்பாராய்ப் * பலபலநாழஞ்சொல்லிக் * கேட்பார்செவிசுடுகீழ்மை வசவுகளேவைது *வல்லவாபழித்து வாக்துருக்தங்கள் பண்ணுவாராய் ஆஸுரப்ரக்ருதிகளாய்த் தன்னை வந்து கிட்டாமையன்றிக்கே

---

(க) "శాసనాచ్ఛాస్త్రిమ్." (உ) "హర్తుం తమస్సదసతీ చ వివేక్తుమీశో మానం ప్రదీపమివ కారుణికో దదాతి." (ங) "ఈశ్వరోఽహమహం భోగీ సిద్ధోఽహం బలవాన్సుఖీ। ఆఢ్యోఽభిజనవానస్మి కోఽన్యోఽస్తి సదృశో మయా." (ச) "యోఽన్యథా సన్తమాత్మానమన్యథా ప్రతిపద్యతే। కిం తేన న కృతం పాపం చోరేణాత్మాపహారిణా." (ரு) "ఆసురీం యోనిమాపన్నా మూఢా జన్మని జన్మని। మామప్రాప్యైవ కౌన్తేయ తతో యాన్త్యధమాఙ్గతిం." (சா) "అవజానన్తి మాం మూఢా మానుషీం తనుమాశ్రితం। పరం భావమజానన్తో మమ భూతమహేశ్వరం."

(க)"அஹம்மே" என்று எதிரிட்டுக்கொண்டு அதமமான கதிகளிலே விழுகிறபடியைக் கண்டு, * மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த தனியனாகையாலே விஸஜாதீயரான நமக்கு இது ஸாத்யமன்றென்று பார்த்து, பார்வை வைத்து ம்ருகம்பிடிப்பாரைப்போலே மநுஷ்ய ஸஜாதீயரான ஆழ்வார்களை யிடுவித்து ஜகத்தைத்திருத்தியருளவேணுமென்று பார்த்தருளி, ஸ்ரீவத்ஸகௌஸ்துபவைஜயந்தீவநமாலைகளையும், ஸ்ரீபூமிநீளைகளையும், ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களையும், அநந்தகருடவிஷ்வக்ஸேநப்ரப்ருதிகளையும் பார்த்து, 'நீங்கள் போய் லீலாவிபூதியிலே நாநாவர்ணங்களிலும் அவதரித்து, அகிலாத்மோத்தாரணம்பண்ணுங்கோள்' என்று நியமித்தருள, அவர்களும் (உ)"கலௌகலு பவிஷ்யந்தி நாராயணபராயணா: - க்வசித்க்வசிந்மஹாபாகா த்ரமிடேஷுச பூரிஶ:" என்றும், (ங)"தாம்ரபர்ணீநதீயத்ர க்ருதமாலாபயஸ்விநீ - காவேரீச மஹாபாகா ப்ரதீசீசஸரஸ்வதீ" என்றும் சொல்லுகிறபடியே இந்நதிகளின் ஸமீபங்களான த்ரமிடபூபாகத்திலே நிமக்நரை உயர்த்த நாநாவர்ணங்களிலே வந்தவதரிக்க, ஸர்வேஶ்வரனும் அவர்களுக்கு * மயர்வறமதிநலமருளி, அவர்கள் முகேந ஸர்வாதிகாரமான த்ரவிடவேதரூபதிவ்யப்ரபந்தங்களை ப்ரகாசிப்பித்தருளினான்.

எங்ஙனேயென்னில்:—

ப்ரவேசம் முற்றிற்று.

---

(க) "అహంమే." (உ) "కలౌఖలు భవిష్యన్తి నారాయణపరాయణాః। క్వచిత్ క్వచిన్మహాభాగాః ద్రమిడేషుచ భూరిశః." (ங) "తామ్రపర్ణీనదీయత్ర కృతమాలాపయస్వినీ। కావేరీచమహాభాగా ప్రతీచీచసరస్వతీ."

## போய்கையாழ்வார் வைபவம்.

(க) "காஞ்ச்யாம்ஸரஸிஹேமாப்ஜே ஜாதங்காஸாரயோகிநம் -
கலயேயஶ்ஶ்ரியஃபத்யே ரவிந்தீபமகல்பயத்."

(உ) "முகுந்தஸ்யமுகோல்லாஸமூலவாக்ஜாலமூர்ச்சிதம் -
முநிமுக்யம்ஸரோஜாதம் முக்திமூலமுபாஸ்மஹே."

(ங) † "ஆஜ்ஞாதிஶ்ரீசந்தநேத்வாபராக்யே ஸித்தார்த்யாக்யேவத்ஸரே மாஸிசேஷே - ஶுக்லாஷ்டம்யாம்பௌமவாரேஶுபர்க்ஷே விஷ்ணோர்ஜந்ம ப்ராபகாஸாரயோகீ."

முதலாழ்வார்கள்மூவரிலும்வைத்துக்கொண்டு ப்ரதமம் பொய்கையாழ்வார், (ச) "கஇதிப்ரஹ்மணோநாமதேநதத்ராஞ்சிதோஹரிஃ - ததஃகாஞ்சீதிவிக்யாதாபுரீபுண்யவிவர்த்தநீ" என்கிறபடியே ககாரவாச்யனான ப்ரஹ்மாவினாலே ஸர்வேஶ்வரன் அஶ்வமேதத்தாலே ஆராதிதனான ஸ்தலமாகையாலே காஞ்சீபுரமென்று ப்ரக்யாதமாய்ப் புண்யவிவர்த்தகமுமான *கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ் கச்சியிலே *கால்நிலந்தோய்ந்துவிண்ணோர்தொழுங் கண்ணன்வெஃகாவில் பொற்றாமரைப்பொய்கையிலே காஞ்சநபத்மகர்ப்பத்திலே ஐப்பசிமாஸத்திலே விஷ்ணுநக்ஷத்ரமான ஶ்ரவணநக்ஷத்ரத்திலே ஸ்ரீபாஞ்சஜந்யாம்ஶராய் அவதரித்தருளினார். (ரு) "ஹேமாப்ஜிநீஹேமஸரோஜகர்பாத் ஸ்ரீபாஞ்சஜந்யோ஽ஜநி‡தத்ரயோகீ - தாரேஹரேராஶ்வயுஜாக்யமாஸே ஸமஸ்தஜீவாவநகர்மஹேதோஃ" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

---

## பூதத்தாழ்வார் வைபவம்.

(சா) "மல்லாபுரவராதீஶம் மாதவீகுஸுமோத்பவம் -
பூதந்நமாமியோவிஷ்ணோஃ ஜ்ஞாநதீபமகல்பயத்."

(எ) "வந்தேபூதாக்யயோகீந்த்ரம் வரேண்யகுணஸம்பதம் -
லக்ஷ்மீஸஹாயகருணாப்ராப்தப்ரமிதிவைபவம்."

அநந்தரம் "மாதவன்பூதங்கள்" என்று சொல்லலாம்படியான பூதத்தாழ்வார், "கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத்தலசயநம்" என்று அநுஸந்தேயமான திருக்கடல்மல்லையிலே பரிமளப்ரசுரமாய் திவ்யமாயிருப்ப

---

(க) "కాఞ్చ్యాంసరసిహేమాబ్జే జాతంకాసారయోగినం। కలయేయశ్శ్రియఃపత్యే రవిందీపమకల్పయత్." (உ) "ముకున్దస్యముఖోల్లాస మూలవాగ్జాలమూర్ఛితం। మునిముఖ్యం సరోజాతంముక్తిమూలముపాస్మహే." (ங) "ఆజ్ఞాధిశ్రీచన్దనేద్వాపరాఖ్యేసిద్ధార్థాఖ్యేవత్సరే మాసిచేషే। శుక్లాష్టమ్యాంభౌమవారేశుభర్క్షే విష్ణోర్జన్మప్రాపకాసారయోగీ." (ச) "కఇతిబ్రహ్మణోనామ తేనతత్రాఞ్చితోహరిః। తతఃకాఞ్చీతివిఖ్యాతా పురీపుణ్యవివర్ధనీ." (ரு) "హేమాబ్జినీహేమసరోజగర్భాత్ శ్రీపాఞ్చజన్యోఽజనితత్రయోగీ। తారేహరేరాశ్వయుజాఖ్యమాసే సమస్తజీవావనకర్మహేతోః." (சா) "మల్లాపురవరాధీశం మాధవీకుసుమోద్భవం। భూతంనమామియోవిష్ణోః జ్ఞానదీపమకల్పయత్." (எ) "వన్దేభూతాఖ్యయోగీన్ద్రం వరేణ్యగుణసమ్పదం। లక్ష్మీసహాయకరుణా ప్రాప్తప్రమితివైభవం."

† இந்தச்சுலோகம் சில ஸ்ரீகோசங்களில் இல்லை. ‡ 'திவ்யயோகீ' என்றும் பாடம்.

தொரு மாதவிப்பூவிலே அந்த ஐப்பசிமாஸத்திலே அவிட்டநக்ஷத்ரத்திலே ஸ்ரீகௌமோதகீகதாம்ஸராய் அவதரித்தருளினார். (க) "மாஸேஉதஸ்மிந் வஸுபேஉஜநிஷ்ட பாரேஸமுத்ரம்புரிமல்லநாம்ந்யாம்- லதாக்ருஹாந்தாத்புவி பூதநாமா கௌமோதகீஸக்திமயோமுநீந்த்ர:" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லப்பட்டதிறே.

## பேயாழ்வார் வைபவம்.

(உ) "தந்மாஸிஜாதம்ஸததாரகாயாம் மயூரபுர்யாம்மணிகைரவாந்தாத் -
பக்த்யாமஹாந்தம்மஹதாஹ்வயந்தம்ஸ்ரீநந்தகாம்ஸம்ஸ்ரிதபக்திரூபம்."
(ங) † "த்ருஷ்ட்வாஹ்ருஷ்டம்ததாவிஷ்ணும் ரமயாமயிலாதிபம்
கூபேரக்தோத்பலேஜாதம் மஹதாஹ்வயமாஸ்ரயே."
(ச) "பத்மாரமணபாதாப்ஜ ப்ரேமப்ராந்த்யாமநோஜ்ஞயா -
ப்ராந்தயோகீதிவிக்யாதம் முநிம்வந்தேகுணாம்புதிம்."

அநந்தரம் பேயாழ்வார், * தேனமர்சோலைமாடமாமயிலையிலே ஆதிகேசவப்பெருமாள்கோயில்திருக்கிணற்றிலே யுண்டானதொரு செவ்வல்லிப்பூவிலே அந்த ஐப்பசிமாஸத்தில் சதயநக்ஷத்ரத்திலே ஸ்ரீநந்தகாம்ஸராய் அவதரித்தருளி, (ரு) "நியதபுலகிதாங்காநிர்ப்பராநந்தபாஷ்பா களிதநிகில ஸங்கா கத்கதஸ்தோத்ரகீதி: - அம்ருதலஹரிவர்ணா ஹர்ஷந்ருத்தோபபந்நா விகதநரகபீதிர்விஷ்ணுபக்திர்விபாதி" என்கிறபடியே விஷ்ணுபக்தியையுடையராய், "பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே" என்கிறபடியே பகவதநுபவாதிஸயத்தாலே "அழுவன் தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன்" என்றும், "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும் சொல்லுகிறபடியே பகவதநுபவபாரவஸ்யம் அல்லாத ஆழ்வார்களைக்காட்டில் இவர்க்கு மிக்கிருக்கையாலே பேயாழ்வாரென்றத்தையே நிரூபகமாகவுடையராயிருப்பர். (சா) "தந்மாஸஏவாவிரபூத் விபஸ்சித் ப்ராசேதஸர்க்ஷே உத மயூரபுர்யாம் - மஹாபிதாநோமணிகைரவாந்தாத் ஸ்ரீநந்தகாத்மாஸ்ரிதபக்திரூப:" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

---

(க) "మాసే౽థతస్మిన్వసుభే౽జనిష్ట పారేసముద్రంపురిమల్లనామ్న్యాం। లతాగృహాన్తాద్భువిభూతనామా కౌమోదకీశక్తిమయోమునీన్ద్రః." (உ) "తన్మాసిజాతంశతతారకాయాం మయూరపుర్యాంమణికైరవాన్తాత్। భక్త్యామహాన్తంమహదాహ్వయన్తం శ్రీనన్దకాంశంశ్రితభక్తిరూపమ్." (ங) "దృష్ట్వాహృష్టంతదావిష్ణుంరమయామయిలాధిపం। కూపేరక్తోత్పలేజాతం మహదాహ్వయమాశ్రయే." (ச) "పద్మారమణపాదాబ్జప్రేమభ్రాన్త్యామనోజ్ఞయా। భ్రాన్తయోగీతివిఖ్యాతంమునింవన్దేగుణామ్బుధిం." (ரு) "నియతపులకితాఙ్గానిర్భరానన్దబాష్పా గళితనిఖిలసఙ్గా గద్గదస్తోత్రగీతిః। అమృతలహరివర్ణాహర్షనృత్తోపపన్నా విగతనరకభీతిర్విష్ణుభక్తిర్విభాతి." (சா) "తన్మాసఏవావిరభూద్విపశ్చిత్ ప్రాచేతసర్క్షే౽థమయూరపుర్యామ్। మహాభిధానోమణికైరవాన్తాత్ శ్రీనన్దకాత్మాశ్రితభక్తిరూపః."

† 'த்ருஷ்டவாநிதிஹோவாச' என்றும் பாடம்.

# முதலாழ்வார்கள் வைபவம்.

இப்படி இம்மூவரும் யோநிஜாதரன்றிக்கே புஷ்பஜாதராய் வந்தவதரித்து, எம்பெருமானுடைய நிர்ஹேதுககடாக்ஷத்தாலே "முக்குணத்திரண்டவையகற்றி" என்கிறபடியே ராஜஸ தாமஸ ரஹிதராய், (க) "ப்ரவ்ருத்திஞ்சநிவ்ருத்திஞ்சகார்யாகார்யேபயாபயே - பந்தம்மோக்ஷஞ்சயாவேத்தி புத்திஸ்ஸாபார்த்தஸாத்விகீ" என்று சொல்லுகிற சுத்தஸத்வகுணமான*ஒன்றினில் ஒன்றி நின்று, (உ) "தாஸாவயமிதிப்ரஹ்மந் மாநிநோலோகவர்ஜிதாஃ" என்றும், (ங) "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வேஹ்யாத்மாநஃபரமாத்மநஃ - நாந்யதாலக்ஷணந்தேஷாம்பந்தேமோக்ஷேததைவச" என்றும், (ச) "ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்திதம்" என்றும், (ரு) "ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்சஸதாஸ்மர" என்றும், (சா) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோஹிபரமாத்மநஃ" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வதஸ்ஸித்தபகவத்தாஸ்யரஸத்தை யுடையராய், அத்தாலேயுண்டான ஸம்யக்ஜ்ஞாநபக்திவைராக்யங்களை யுடையராய், "புலன்களைந்துபொறிகளாலேதமொன்றுமிலாத" என்கிறபடியே அந்யபாநாதி வர்ஜிதராய், "உனது பாலேபோல்சீரில் பழுத்தொழிந்தேன்" என்று பால்யாத்ப்ரப்ருதி பகவத்குணைகதாரகராயிருக்கிற இவர்கள், ஸம்ஸாரிகள் தங்களைப்போலன்றிக்கே*உண்டியேயுடையேயுகந்து ஶப்தாதிவிஷயங்களிலே அதிப்ரவணராய்த் *தீதில் நன்னெறிநிற்கவல்லாத செய்து பகவத்விமுகரா யிருக்கையாலே "நாட்டுமானிடத்தோடெனக்கரிது" என்கிறபடியே அவர்களோட்டைஸஹவாஸம் தங்களுக்குதுஸ்ஸஹமாய் ஒருநாளிருந்தவிடத்திலே யொருநாளிராமே க்ராமைகராத்ரராய், இவர்கள் ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியே வர்த்திக்கிற காலத்திலே; ஸர்வேஶ்வரனும் (எ) "மமாத்மாஜ்ஞாநிநாம்வரஃ" என்றும், (அ) "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்றுஞ் சொல்லுகிற திருமுகப்படியே தனக்குஆத்மபூதரான இவ்வாழ்வார்களைக்கொண்டு ஜகத்தைத்திருத்தவேணுமென்று நினைத்து, (கூ) "அநாதிமாயயாஸுப்தஃ" என்கிறபடியே அநாத்யவித்யாபிபூதராய்ப் போருகிற ஸம்ஸாரிசேதநருக்கு அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி ஸ்வவிஷயேஜ்ஞாநபக்திகளை யுண்டாக்குகைக்காக, ஒருநாள் ராத்ரியிலே இம்மூவரையும் * சீரேறுமறையாளர் நிறைந்த செல்வத்திருக்கோவலூரிலே ஒருதிருவிடைகழியிலே யாத்ருச்சிகமாக ஸங்கதராக்க, இவர்களும் (கO) "வைஷ்ணவோவைஷ்ணவந்த்ருஷ்ட்வா தண்டவத்ப்ரணமேத்புவி" என்கிறபடியே அந்யோந்யவந்தநபரராய்க்கொண்டு, 'நீரார்?', 'நீரார்?' என்று ஒரு

(க) "ప్రవృత్తిఞ్చనివృత్తిఞ్చ కార్యాకార్యేభయాభయే । బన్ధంమోక్షఞ్చయావేత్తి బుద్ధిస్సాపార్థసాత్త్వికీ." (உ) "దాసావయమితిబ్రహ్మన్ మానినోలోకవర్జితాః." (ங) "దాసభూతాస్స్వతస్సర్వే హ్యాత్మానఃపరమాత్మనః । నాన్యథాలక్షణన్తేషాం బన్ధేమోక్షేతథైవచ." (ச) "స్వత్వమాత్మనిసఞ్జాతం స్వామిత్వంబ్రహ్మణిస్థితం." (ரு) "ఆత్మదాస్యంహరేస్స్వామ్యం స్వభావఞ్చసదాస్మర." (சா) "జ్ఞానానన్దమయస్త్వాత్మా శేషోహిపరమాత్మనః." (எ) "మమాత్మాజ్ఞానినాంవరః." (அ) "జ్ఞానీత్వాత్మైవమేమతం." (கூ) "అనాదిమాయయాసుప్తః." (கO) "వైష్ణవోవైష్ణవందృష్ట్వా దణ్డవత్ప్రణమేద్భువి."

வரை யொருவர் கேட்க, (௧) "பகவச்சேஷபூதோ௨ஹம் அநந்யார்ஹோ௨சிதஃபரஃ" என்றும், (௨) "தாஸோ௨ஹம்வாஸுதேவஸ்ய" என்றும், (௩) "தாஸோ௨ஹம்கோஸலேந்த்ரஸ்ய" என்றும், (௪) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மாஶேஷோஹிபரமாத்மநஃ" என்றும் இத்யாதிகளாலே தந்தாமுடைய ஸ்வரூபநிர்த்தேஶ ப்ரஸங்க வ்யாஜேந போதயந்தஃபரஸ்பரம் பண்ணிக் கொண்டிராநிற்கச்செய்தே, அவ்வளவிலே எம்பெருமான் (௫) "அநந்யாஹிமயாஸீதா பாஸ்கரேணப்ரபாயதா" என்றிருக்குமவளுகையாலே * இறையும் அகலகில்லாத பிராட்டி ஸஹிதனுய்க்கொண்டு * கூராராழி வெண்சங்கேந்தி (௬) "துளஸீகாநநம்யத்ர யத்ரபத்மவநாநிச - வஸந்திவைஷ்ணவாயத்ர தத்ரஸந்நிஹிதோ ஹரிஃ" என்கிறபடியே * செந்தமிழ்பாடுவாராகிற இவர்களருகே * தழுவி முழுசிப்புகுந்து நெருக்கிநிற்க, இவர்களும் 'நம்மையொழியவும் * காமர்பூங் கோவலிடைகழியைப் பற்றிநிற்கிறுர்களுண்டோ?' என்று பார்க்கைக்காக * வெய்யகதிரோன்விளக்கேற்றியும் * ஞானச்சுடர்விளக்கேற்றியும் * உணர் வென்னு மொளிகொள்விளக்கேற்றியும் பார்த்தருளி, "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்றும், "நீயுந் திருமகளும் நின்றுயால்" என்றும் ஸ்ரீமந்நாராயணனுடைய * மைப்படிமேனியையும் * செந்தாமரைக்கண்ணையும் பரமவைதிகரான இவர்கள் * நெஞ்சென்னும் உட்கண்ணுலே கண்டநுபவித்து, அநுபவஜநித ப்ரீத்யதிஶயம் உள்ளடங்காமல், "பாலேய்தமிழர்" என்றுசொல்லுகிற நற்றமிழராகையாலே "வையந்தகளி," "அன்பேதகளி," "திருக்கண்டேன்" என்கிற திவ்யப்ரபந்தங்களை ஸம்ஸாரிகள் அதிகரித்து அஜ்ஞாநாந்தகாரம் நீங்கி உஜ்ஜீவிக்கும்படி * ஞானத்தமிழாக அருளிச்செய்து ப்ரபந்தீகரித்து உபகரித்தருளி ஜகத்தை வாழ்வித்தருளினுர்கள்.

---

## திருமழிசைப்பிரான் வைபவம்.

(௭) "ஶக்திபஞ்சமயவிக்ரஹாத்மநே †ஶுக்திகாரஜதசித்தஹாரிணே-
முக்திதாயகமுராரிபாதயோர் பக்திஸாரமுநயேநமோநமஃ."

(௮) ‡"ஸித்தார்த்திந்யுஷ்ணரஶ்மௌமகரமதிகதேத்வாபரேஜ்ஞாநதாரா
க்ஷோதேஸம்வத்ஸரௌகேகதவதிசதிநேஸப்தவிம்ஶேமகாக்யே-
நக்ஷத்ரேபாநுவாரேமுனிவரதநயோபக்திஸாரோமுநீந்த்ரஃ
ஸ்ரீமாந்ப்ராபாவதாரம்ஜகதுபக்ருதயேபர்வணோ௨ந்யேத்யுரத்ர."

---

(௧) "భగవచ్ఛేషభూతో௨హ మనన్యార్హో௨చితఃపరః." (௨) "దాసో௨హంవాసుదేవస్య." (௩) "దాసో௨హంకోసలేన్ద్రస్య." (௪) "జ్ఞానానన్దమయస్త్వాత్మాశేషో హిపరమాత్మనః." (௫) "అనన్యాహిమయాసీతా భాస్కరేణ ప్రభాయథా." (௬) "తులసీకాననంయత్ర యత్రపద్మవనానిచ। వసన్తివైష్ణవాయత్ర తత్రసన్నిహితోహరిః." (௭) "శక్తిపఞ్చమయవిగ్రహాత్మనే శుక్తికారజతచిత్తహారిణే । ముక్తిదాయకమురారిపాదయోర్భక్తిసారమునయేన మోనమః." (௮) "సిద్ధార్థిన్యుష్ణరశ్మౌమకరమధిగతే ద్వాపరేజ్ఞానధారాక్షోదేసంవత్సరాఘే గతవతిచదినేసప్తవింశేమఖాఖ్యే। నక్షత్రేభానువారేమునివరతనయోభక్తిసారోమునీంద్రః శ్రీమాన్ప్రాపావతారంజగదుపకృతయే పర్వణో௨న్యేద్యురత్ర."

†'ஶாக்திஹாரஜிதசித்தஹாரிணே' என்றும்பாடம். ‡இதுசிலஸ்ரீகோசங்களில்இல்லை.

ஆழ்வார்திருமழிசைப்பிரானுகிறார், * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்துவளர்ந்தருளின க்ருஷ்ணனைப்போலே யாய்த்து, அவதரித்தருளினபடியும், வளர்ந்தருளினபடியும். எங்ஙனேயென்னில்:— (க) "ததோऽகிலஜகத்பத்ம போதாயாச்யுதபாநுநா - தேவகீபூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்மஹாத்மநா" என்கிறபடியே யதுகுலத்திலே பிறந்து (உ) "அநார்த்ரமார்த்ரம் விரஸம்ரஸாட்ய மபல்லவம்பல்லவிதந்ததாऽஸீத் - மாவோப ஹூகூீரதுகாபபூர்வ நாராயணே நந்தகுலம்ப்ரவிஷ்டே" என்கிறபடியே *நந்தன்குலமதலையாய் கோபகுலத்திலே வளர்ந்தருளினாப்போலே இவ்வாழ்வாருடைய திருவவதாரமும் ஒருபிறவியிலே இருபிறவியாயிறே யிருப்பது.

அதுஎங்ஙனேயென்னில்;— அத்ரி ப்ருகு வஸிஷ்ட பார்க்கவ ஆங்கிரஸாதிகளான மஹர்ஷிகளெல்லாரும் ப்ரஹ்மாவின்பக்கலிலே சென்று, 'பூலோகத்திலே உத்க்ருஷ்டதமமான க்ஷேத்ரத்திலே எங்களுக்கு நித்யவாஸம்பண்ணவேணும்: அத்தை நிஶ்சயித்துச் சொல்லவேணும்' என்று கேட்க, ப்ரஹ்மாவும் உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து விஶ்வகர்மாவைக்கொண்டு பஞ்சாஶத்கோடிவிஸ்தீர்ணையாய் ஸஶைலாம்புதிகாநநையான பூமியெல்லாம் ஒருதட்டும் விதேஹபவநக்ஷேத்ரமான திருமழிசையொன்றும் ஒருதட்டுமாகத் துலையிலே வைத்துநிறுக்க, (ங) "தாத்ரா துலிதாச லகுர் மஹீ" என்கிறபடியே பூமியைவைத்தபக்கம் நொய்தாய், *மாநீர்மழிசையை வைத்தெடுத்த பக்கம் கனத்திருக்கக் கண்டு, அதற்கு 'மஹீஸாரக்ஷேத்ரம்' என்று பேரிட்டு நிரூபிக்கையாலே, அந்தரிஷிகளும் அவ்விடத்தைவிடாதே நித்யவாஸம் பண்ணிக்கொண்டிராநிற்க;

அவர்களிலே பார்க்கவமஹர்ஷியானவர், (ச) "பஶ்சிமேயோஜநார்த்தேச விதேஹாதிஷ்டிதம்வநம் - பார்க்கவோதீர்க்கஸத்ரேண வாஸுதேவம் ஸநாதநம் - அபிபூஜ்யயதாந்யாய மிதிநித்யமகல்பயத்" என்று ப்ரஹ்மாண்டபுராணத்திலே சொல்லுகிறபடியே, தீர்க்கஸத்ரமென்கிற யாகத்தாலே ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை ஸக்ரமமாக யஜித்துக்கொண்டுபோருகிறகாலத்திலே, பார்க்கவருடைய பத்நி கர்ப்பிணியாய், "பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்ட" என்கிறபடியே பன்னிரண்டுமாஸத்துக்குப் பின்பு தைமாஸத்தில் மகாநக்ஷத்ரத்தில் பிண்டாக்ருதியாக ப்ரஸவிக்க, ஸுதர்ஶநாம்ஶேந திருமழிசைப்பிரான் அவதரித்தார். (ரு) "ஸாகர்ப்பமாதத்தமுநேஶ்சபத்நீ ஸுதர்ஶநாம்ஶேநததாऽநுவிஷ்டம்-பபாதகர்ப்போபுவிதைஷ்யமாஸே மகாபிதாநே மஹநீயதாரே" என்று திவ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

---

(క) "తతోऽఖిలజగత్పద్మ బోధాయాచ్యుతభానునా। దేవకీపూర్వసన్ధ్యాయామావిర్భూతంమహాత్మనా." (ఉ) "అనార్ద్రమార్ద్రంవిరసంరసాఢ్య మపల్లవంపల్లవితంతదాऽऽసీత్। గావోబహుక్షీరదుఘాబభూవుర్నారాయణేనన్దకులంప్రవిష్టే." (ఙ) "ధాత్రా తులితాచలఘుర్మహీ." (చ) "పశ్చిమేయోజనార్ధేచ విదేహాధిష్ఠితంవనం। భార్గవోదీర్ఘసత్రేణ వాసుదేవం సనాతనం॥అభిపూజ్యయథాన్యాయ మితినిత్యమకల్పయత్." (రు) "సాగర్భమాధత్తమునేశ్చపత్నీ సుదర్శనాంశేనతదాऽనువిష్టం।సపాతగర్భోభువితైష్యమాసేమఖాభిధానేమహనీయతారే."

அநந்தரம், உல்பஸம்வேஷ்டிதமாய் ஒன்றும்ரூபீகரியாமல் அவதரிக்கையாலே பார்க்கவரும் தத்பத்நியும் அநாதரித்து ஒருபிரப்பந்தூற்றின்கீழே வைத்துப்போக, அந்த உல்பாவ்ருத பிண்டாக்ருதியானது, அகில ஜகந்மாதாவான பெரியபிராட்டியாராநுக்ரஹத்தாலே பூமிப்பிராட்டி ஸ்ம்ரக்ஷிதமாக வைத்துக்கொண்டிருக்கச்செய்தே "சிக்கென்று சென்னிக்கால் சிரிடைப்பின் கண்ணுயிராய், ஒக்கவுருப்பாய்ந் தறிவாலுள்நிறைந்து" என்கிறபடியே ஸர்வாவயவங்களும் பரிபூர்ணமாய் அதிலே ஜீவன் ஸ்புரித்துத்தோற்றி, "பேதைக்குழவி" என்கிறபடியே அத்யந்தம்சிசுவாய்ப் பசுங்குழந்தையான ஆழ்வார், பசிதாஹங்களாலேஈடுபட்டு ஸ்தந்யார்த்தியாய் விஜநமான வநத்திலே ஒருபிரப்பின்தூற்றிலே ரோதநம்பண்ண, அவ்வளவிலே மஹீஸாரக்ஷேத்ராதிபதியான பெருமாள் அங்கே எழுந்தருளிக் கருணம்ருதௌகஙிஷ்யந்தியான கடாக்ஷபாதங்களாலே இவர்பசிதாஹம்தீரும்படி குளிரக்கடாக்ஷித்து ஆராவமுதமான ஸ்வவிக்ரஹத்தைக் காட்டி ஆஶ்வாஸிப்பித்து மறைய, இவரும், தத்விரஹாஸஹிஷ்ணுவாய் மீளவும்அழத்தொடங்கினர்.

அங்கே திருவாளன் என்கிற ஒருத்தன் பிரம்பறுக்கப்போனவிடத்திலே இவருடையஆர்த்தநாதம் கேட்டுக் கூடவந்தவர்களுடன் சோதித்து இவரைக் கண்டு ஹர்ஷப்ரகர்ஷத்துடனே எடுத்துக்கொண்டுவந்து, தன்னுடைய பத்நியான பங்கயச்செல்வியார்கையிலே கொடுக்க, அவளும் வந்த்யையாகையாலே மிகவும் ப்ரீதையாய் "உத்தானஞ்செய்து" என்கிறபடியே எடுத்துக்கொண்டு, புத்ரப்ரதிபத்தியைப்பண்ணி, *தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ என்று விகல்பிக்கலாம்படி ஆதரத்துடனே ஸ்நேஹபூர்வகமாக வளர்க்க வளர்ந்தருளுகிற வளவிலே, "வனமுலைகள்சோர்ந்துபாய" என்கிறபடியே முலைப்பால்சுரக்க, இவளும் "நந்தகோபனணிசிறுவா நான்சுரந்தமுலையுணாய்" என்னும்படியே முலைகொடுக்கத்தேட, இவரும் ஸ்தந்யாதிபோஜ்யங்களிலே நிராஶராய்ப் பகவத்குணைகதாரகராய் வாக்வ்யவஹாரரோதநாதிகளொன்றுமின்றியே மலமூத்ரரஹிதராய்ப் பரிபூர்ணமாக ஸர்வாவயவங்களும் வர்த்திக்க எழுந்தருளியிருக்க,

இந்த ஆஶ்சர்யத்தை, அபுத்ரவானுமாய், திருமழிசையிலே வாஸம்பண்ணும் சதுர்த்தவர்ணத்திலே ஜாதனுமாய், மஹாப்ராஜ்ஞனுமான ஒருவ்ருத்தன், கேட்டு, பாங்காகப் பாலமுதுகாய்ச்சிக்கொண்டு ஸ்வபார்யாஸஹிதனாய் இவரிருக்கிறவிடத்திலே விடியற்காலத்தே வந்து, பஞ்சஶக்திமயமான சிசுவினுடைய அப்ராக்ருத திவ்யதேஜஸ்ஸைக் கண்டு அத்யாஶ்சர்யப்பட்டு, தான் கொண்டுவந்த பாலமுதை ஸமர்ப்பித்து ப்ரார்த்தித்து 'அமுதுசெய்யப்பண்ணவேணுமென்று இத்தைக்கொண்டுவந்தேன்: அமுதுசெய்தருளவேணும்' என்று பஹுஶஃவேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் அவனிடத்தில் க்ருபாதிஶயத்தாலே அவன்கொண்டுவந்த பாலமுதை அமுதுசெய்துபோகவிட, அவர்களும் அப்படியே பலநாளும் பேரப்ரீதியுடனே பாலமுதை அமுதுசெய்வியாநிற்க, ஒருநாள், ஆழ்வார், வ்ருத்ததம்பதிகளுடைய மநோரதமறிந்து, அற்றைக்கு அவர்கள் கொண்டுவந்த பாலமுதை அமுதுசெய்து, சேஷித்த பாலை 'நீங்கள் ஸ்வீகரியுங்கோள்: உங்களுக்கு நல்லபுத்ர னுண்டாவன்'

என்று ப்ரஸ்தாதிக்க, அவர்களும் அப்படியே ஸ்வீகரித்து யௌவநாவஸ்தையையடைந்து, தத்பத்நியும் கர்ப்பவதியாய் ஒன்பதுமாஸம்சென்று பத்தாம்மாஸம் நிறைந்தவாறே, * கேசவன்றமராய் * நாக்கொண்டு மானிடம் பாடாத மஹாப்ராஜ்ஞரான ஒருகுமாரனை ப்ரஸவிக்க, ஸ்ரீவிதுரரைப்போலே விளங்குகிற அந்தப் புத்ரனைக் கண்டு, * பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் அவருக்கு 'கணிகண்ணன்' என்று திருநாமம்சாத்தி, அகிலவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள்.

பின்பு பகவத்தயாஸுநாஸ்வாதநத்ருப்தசேதநராய், விடப்பட்ட அநந பாநபயோபிலாஷையை யுடையராய், பைத்ருகவேஶ்மத்திலே வளர்ந்தருளுகிற ஆழ்வாரும், ருஷிபுத்ரராகையாலே ஏழுதிருநக்ஷத்ரத்துக்குப் பின்பு "இளைப்பினையியக்கம்நீக்கி யிருந்துமுன்னிமையைக் கூட்டி, அளப்பிலைம்புலனடக்கி" என்கிறபடியே யமநியமாதியான அஷ்டாங்க யோகாப்யாஸத்திலே திருவுள்ளமாய், அதுக்கு ஜகத்காரணவஸ்துவை த்யாநத்துக்கு விஷயமாகச் சொல்லுகையாலே அந்தவஸ்துவை அறியவென்றால் * பிணங்குஞ்சமயம் பலபலவாகையாலே அவையவைதோறும் புக்கு ஆராய்வோமென்று கொண்டு, சாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணகபிலபதஞ்சலிகளாகிற பாஹ்யஸமயங்களையும், ஶைவ மாயாவாத ந்யாய வைஶேஷிக பாட்ட ப்ராபாகராதிகளாகிற குத்ருஷ்டிஸமயங்களையும் புக்கு *உணர்ந்துணர்ந்துரைத்துரைத்துஆராய்ந்துபார்த்தவிடத்தில், "இறைநிலையுணர்வரிது" என்கிறபடியே அவற்றிலேஒருபசையில்லாமையாலே அங்குநசையற்று "அறியார்சமணர் அயர்த்தார்பவுத்தர், சிறியார் சிவப்பட்டார்" என்றுகொண்டு ஈனமான*இடங்கொள்சமயத்தையெல்லாம் எடுத்துக்களைந்து, "கலையறக்கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான்" என்று இதரஸித்தாந்தங்களை நஶ்வரமென்று கைவிட்டு, இப்படி எழுநூறு திருநக்ஷத்ரம் சென்றவாறே;

ஸ்ரீவைஷ்ணவராய், பரமவைதிகஸித்தாந்த நிஷ்டராய், "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குந் தெய்வம்" என்று அறுதியிட்டுக்கொண்டு *வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்த விளக்கை அறிந்து தத்ப்ரவணராக, ஸர்வேஶ்வரனும் அதுவே பற்றாசாக இவர்க்கு * மயர்வறமதிநலமருளித் தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், ததாஶ்ரயமான ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணங்களையும், உபயத்தையும் ப்ரகாசிப்பிக்கிற திவ்யமங்களவிக்ரஹத்தையும், ததாதாரமான கிரீடாதிநூபுராந்தமான திவ்யபூஷணவர்க்கத்தையும், அவற்றோடே விகல்பிக்கலாம்படியான ஶங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், இதடங்கக் காட்டிலெரித்தநிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கத்தையும், (க) "பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா" என்றும், "அடிமைசெய்வார் திருமாலுக்கு" என்றும், "சூழ்ந்திருந்தேத்துவர்" என்றும், "ஏவமற்றமரராட்செய்வார்" என்றும் சொல்லுகிறபடியே அச்சேர்த்தியிலே அடிமைசெய்கையே தங்களுக்கு தாரகாதிகளாகவுடையரான திவ்யபரிஜநவர்க்கத்தையும், அந்தப்போகத்துக்கு வர்த்தகமாய் * நலமந்தமில்லதோர் நாடாய்ப் போகவிபூதியான பரமபதத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து, பின்னை

(க) "భవాంస్తు సహ వైదేహ్యా."

யும் ப்ரக்ருதிபுருஷகாலாத்மகமான லீலாவிபூதியினுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் நின்று "இன்புறுமிவ் விளையாட்டுடையான்" என்கிறபடியே தனக்கு லீலையாக வுடையனாயிருக்கிற படியையும் காட்டிக்கொடுக்க;

இப்படி உபயவிபூதிநாதனை தான், (க) "யந்நாபிபத்மாதபவந்மஹாத்மா ப்ரஜாபதிர்விஶ்வஸ்ருக்" என்கிறபடியே மூழ்த்தநீருலகெல்லாம்படைக்கும்படி முதலிலே தனக்கு ஜ்யேஷ்டபுத்ரனாக ப்ரஹ்மாவைத் தன்திருநாபிகமலத்திலே (உ) "யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" என்னும்படி முந்துற உத்பந்நனாக்கினபடியையும், (ங) "ப்ரஹ்மணஃபுத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய" என்கிறபடியே அந்த ப்ரஹ்மாவுக்கு ஜ்யேஷ்டபுத்ரனை ருத்ரன் உத்பந்நனானபடியையும் ப்ரகாசிப்பித்தருள, இவரும் "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்று தம் வாக்காலே சொல்லும்படி இவற்றையெல்லாம் இவர் ஸம்ஶயவிபர்யயமற அறிந்து, "சாக்கியங் கற்றோஞ் சமண்கற்றோஞ் சங்கரனார், ஆக்கிய ஆகமநூ லாராய்ந்தோம் - பாக்கியத்தாற், செங்கட்கரியானைச் சேர்ந்தோம் யாந் தீதிலமே, எங்கட் கரியதொன் றில்" என்று அநுஸந்தித்தருளி, இதரஸித்தாந்த நிவ்ருத்திபூர்வகமாக, * திருநின்றபக்கம் திறவிதென்றோர்ந்து, (ச) "ஆலோட்யஸர்வஶாஸ்த்ராணி விசார்யசபுநஃபுநஃ - இதமேகம்ஸுநிஷ்பந்நம் த்யேயோநாராயணஸ்ஸதா" என்றும், (ரு) "யோகேஶ்வரம் ஜகந்நாதம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரியஃபதிம் - பத்மநாபம் விஶாலாக்ஷம் சிந்தயாமி ஜகத்பதிம்" என்றும் சொல்லுகிறபடியே ஜகத்காரணபூதனாய் ஸர்வாந்தர்யாமியாய்ப் புண்டரீகாக்ஷனாய் ஜகந்நாதனை ஶ்ரியஃபதியை த்யாநம்பண்ணிக்கொண்டு க்ருதார்த்தராய்த் †திருவல்லிக்கேணியிலே கஜேந்த்ரஸரஸ்ஸின் கரையிலே எழுநூறு ஸம்வத்ஸரம் பகவதநுபவம்பண்ணிக்கொண்டு யோகத்திலே எழுந்தருளியிருக்கிறநாளையிலே, ஒருநாள் இவர் நிரந்தரபகவதநுபவத்துடனே கந்தாஸீவநஞ்செய்யாநிற்க, அவ்வளவிலே ருத்ரனும் அத்ரிகந்யாஸஹிதனாய் ருஷபாரூடனாய் த்ரிஶூலபாணியாய் வ்யோமமார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாரும் அவர்களைக் கண்டு அவன்நிழல் தன்மேற்படாமல் ஒதுங்க, இதைத் தம்பதிகளிருவரும் கண்டுநிற்க, அவ்வளவிலே ருத்ரனைக்குறித்துப் பார்வதி 'இவராரோவென்று அறிந்துபோவோம்' என்ன, ருத்ரனும் தத்பத்நியுடனே 'இவர் மஹாநுபாவர்; நம்மைக்கணிசியார்' என்ன, 'ஆகிலும், அவரைக்கண்டுபோவோம்' என்ன, அவனும் ஸம்மதித்து இவரண்டையிலே வந்துநிற்க, இவரும் அவனைக் கண்ணெடுத்துப்பாராமல் உதாஸீநித்திருக்க, அவனும் 'நாம்வந்துநிற்க நீர்அலக்ஷ்யம்பண்ணலா

(க) "యన్నాభిపద్మాదభవన్మహాత్మా ప్రజాపతిర్విశ్వసృక్." (உ) "యోబ్రహ్మాణంవిదధాతిపూర్వమ్." (ங) "బ్రహ్మణఃపుత్రాయజ్యేష్ఠాయశ్రేష్ఠాయ." (ச) "ఆలోడ్యసర్వశాస్త్రాణి విచార్యచపునఃపునః। ఇదమేకంసునిష్పన్నం ధ్యేయోనారాయణస్సదా." (ரு) "యోగేశ్వరంజగన్నాథం విష్ణుంజిష్ణుంశ్రియఃపతిం। పద్మనాభంవిశాలాక్షం చిన్తయామిజగత్పతిం."

† 'திருமழிசையிலே' என்று பிரதிபேதம்.

மோ?' என்ன, இவரும் 'உன்னைக்கொண்டுஎன்னப்ரயோஜநமுண்டெனக்கு?' என்ன, அவனும் 'நாம் உமக்கு ஒன்றுதரக்கடவதாக வந்தோம்' என்ன, இவரும் 'நமக்கு ஒன்றும் வேண்டாம்' என்ன, அவனும் 'நம்வரவு வ்யர்த்தமாகாமல் உம்அபீஷ்டத்தைக் கேட்டுக்கொள்ளீர்' என்ன, ஆழ்வாரும் புன்முறுவல்செய்து 'ஆகில், மோக்ஷந்தரவல்லையாகில் தா' என்ன, 'அது என்னால் தரக்கடவதன்று, ஸ்ரீமந்நாராயணனாலே' என்ன, 'ஆனால், இன்று சாவாரை நாளைச் சாகும்படி பண்ணவல்லையோ?' என்ன, 'அதுவும் கர்மாநுகுணமன்றோ?' என்ன, 'ஆனால், இவ்வூசியின்பின்னே நூல்வரும்படி வரப்ரதாநம் பண்ணாய்' என்று அபஹஸித்துச்சொல்ல, அவனும் இவ்வார்த்தையைக்கேட்டு மிகவும் குபிதனாய், 'இவரை அநங்கனைப்போலே யாக்கக்கடவேன்' என்று, பொறியும் புகையும் கிளம்புகிற தன்நெற்றிக்கண்ணைத் திறந்துவிட, அக்கண்ணில்நின்றும் ஜ்வாலாஜாஜ்வல்யமாநமாய் ஸம்வர்த்தாக்நிபோலே சுட்டுக்கொண்டெரிகிற ஜ்வலநப்ரரோஹத்தைக் கண்டு ஆழ்வாரும் தம்முடைய வலத்திருவடியின் பெருவிரலிலே ஒருகண்ணைத் திறந்துவிட, அக்கண்ணில்நின்றும் அக்நி ப்ரளயஹுதவஹகோடிகல்பமாய் ஜ்வலித்துக்கொண்டு கிளம்ப, கோடிவைஶ்வாநரப்ரக்யமாய் அத்யர்க்ககோடிநிப தீர்க்கஜ்வாலா ஜாஜ்வல்யமாநாக்நியில் ஶம்புவின் லோசநாக்நி கத்யோதப்ராயமாய் அடங்க,†(பின்னும் அந்தமஹாக்நியானது உலகங்களைஆக்ரமித்து ம்ருத்யுஞ்ஜயனைச் சுற்றிக்கொள்ள), ஶம்புவும் அந்த அங்குஷ்டலோசநாக்நிஜ்வாலையைப் பொறுக்கமாட்டாமல் † (கேவலம்பரிதபித்து "அந்யதாஶரணம்நாஸ்தி த்வமேவஶரணம் மம - தஸ்மாத்காருண்யபாவேந ரக்ஷரக்ஷஜநார்த்தந"என்று முறையிட, அப்போது முப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம்ருஷிகளும் சதுர்முகப்ரஹ்மாவும் ஸ்ரீவைகுண்டத்திலேசென்று ப்ரபத்திபண்ணி முறையிட, எம்பெருமானும்) புஷ்கலாவர்த்தகமென்கிற ப்ரளயகாலமேகங்களை அக்நி ஶமிக்கும்படி ஆஜ்ஞாபிக்க, † (மேகங்கள் தண்டன்ஸமர்ப்பித்து 'ஸ்வாமி!ஸுதர்ஶநாம்ஶஜரான பார்க்கவமஹர்ஷிபாதாங்குஷ்டநேத்ராக்நியை ஸமீபிக்கவும் பார்க்கவும் எங்களுக்கு ஶக்தியும் உண்டோ?' என்ன, ஸ்வாமியும் 'என்னுடைய க்ருபையாலே உங்களுக்குப் பலமுண்டாம்' என்ன,) அம்மேகங்களும் மின்னி முழங்கி வில்லிட்டு அகிலதாபங்களும் அடங்கும்படி ஆகாசாவகாசமடைய நிறைந்து அபிவர்ஷிக்க, அவ்வர்ஷத்தாலே எரிகிற அக்நியும் அணைந்து பெருவெள்ளங்கோக்க, ஆழ்வாரும் (க) "கிரயோவர்ஷதாராபிர்ஹந்யமாநாநவிவ்யது:" என்கிறபடியே அத்ரிராஜனைப்போலே வர்ஷதாரைக்கு இளையாமல் பகவதநுபவ தத்பரராயிருக்கிறபடியைக் கண்டு அவனும் விஸ்மயப்பட்டு இவருக்கு 'பக்திஸாரர்' என்று திருநாமத்தையும் சாத்தி இவர்வைபவத்தைக்கொண்டாடி ஶிரஃகம்பநம்பண்ணி, 'அம்பரீஷனாலே துர்வாஸா அவமாநப்பட்டானிறே: ஆகையாலே, பாகவதர்கள் ஸுதுர்ஜயர்' என்று ஸ்வபக்திக்கு உரைத்துக்கொண்டு யதாஸ்தாநமே போந்தான்.

---

(க) "గిరయో వర్షధారాభిర్హన్యమానా న వివ్యథుః."

† குண்டலித க்ரந்தங்கள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன.

பின்னையும் ஆழ்வார் பூர்வம்போலே யோகத்திலேயெழுந்தருளியிருக்க, யாத்ருச்சிகமாக வ்யாக்ராரூடனாய் சுக்திஹாரனென்பா னொரு கேசரன் ஆகாசமார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாருடைய யோகப்ரபாவத்தாலே இவர்மேலேபோக க்ஷமமன்றிக்கே வ்யாக்ரமும் திமிர்த்துநிற்க, அவனும் இதேதோவென்று பார்த்துக்கொண்டுவருமளவில், கீழே மௌநியாய் யோக த்திலேயெழுந்தருளியிருக்கிற ஆழ்வாரைக் கண்டு விஸ்மயப்பட்டுத் தத்க்ஷண த்திலே ஆகாசத்தினின்றும்பூமியில்வந்து வ்யாக்ரவாஹநத்தினின்றும்இறங்கி இவரண்டையிலேவந்து 'பார்க்கவமுநீந்த்ரரே! இக்கந்தாவரணத்தைப் போ கட்டு நான் தருகிற திவ்யபடநிர்மிதமான இந்தக்கவசத்தைத் தரியும்' என்று ஒருகவசத்தைக் கொடுக்க, இவரும் அத்தை நிஷேதித்து ஸ்வஸங்கல்பத்தா லே மணிஸ்வரூபமாய் த்யுமணிப்ரபோபமமான கவசத்தை அவனுக்குக்கா ட்ட, அவனும் லஜ்ஜாவிஷ்டனாய், தன்கழுத்தில் ஹாரத்தை வாங்கி 'இத்தை அக்ஷமாலையாகத் தரியும்'என்று கொடுக்கத் தேட,இவரும் தம்கழுத்தில் துள ஸீபத்மாக்ஷமாலையை வாங்கி 'இத்தைப் பாராய்' என்ன, அது நவரத்நஹார மாய்விளங்கக் கண்டு,அவனும்'இவர் மஹாநுபாவர், மஹாபரிபூர்ணர்'என்று தண்டனிட்டு, இவர்வைபவத்தைக் கொண்டாடி யதாஸ்தாநமே போந்தான்.

பின்னையும் அங்கே இவர் யோகநிஷ்டரா யெழுந்தருளியிருக்கச்செய் தே, 'கொங்கணஸித்தன்' என்கிற பெயரையுடையனாய் ரஸவாதியா யிருப்பா னொருவன் வந்து, இவ்வாழ்வாருடைய வைபவத்தைக் கண்டு இவருக்குக் காணிகோடியைப் பேதிப்பதான ரஸகுளிகையை ஸமர்ப்பிக்க, இவரும் அத் தைஅநாதரித்து 'நமக்குவேண்டாம்' என்று அவனுக்குத் தம்முடையபொன் னொத்தமேனியின் புழுதியோடே தம்காதிற்குறும்பியை யுருட்டி 'இந்தக் காணி குளிகை கோடாகோடியைப் பேதிக்கும்' என்று கொடுத்தருள, அவ னும் அப்படியே பரீக்ஷிக்க, அது சொன்னபடிக்கு ஒத்திருக்கையாலே அதி ப்ரீதியுடனே ஆழ்வாரைத் தண்டனிட்டு, 'தந்யோ஽ஹம்' என்று க்ருதார்த்த னாய்ப் போந்தான்.

அநந்தரம் திருமழிசைப்பிரானும், ஒரு குஹாந்தராவிஷ்டராய், நிப்ரு தாக்ஷவ்ருத்தியையுடையராய் யோகத்திலே யெழுந்தருளியிருக்க, அவ்வள விலே பொய்கை பூதன் பேயாழ்வா ராகிற முதலாழ்வார்கள் மூவரும் * எங் குந்திரிந் தரங்கனெம்மானுக்கே காதல்செய்தொண்டராய் ஸஞ்சரித்து வரு கிறவர்கள், ஸுதூரத்திலே அப்ராக்ருததிவ்யதேஜஸ்ஸைக் கண்டு அத்யாஸ் சர்யப்பட்டு, 'இத்தைஆராயக்கடவோம்' என்று எங்கும் திரிந்து சோதித்து வந்து, குஹாந்தராவிஷ்டரான பக்திஸாரரை 'இம்மஹாநுபாவ ராரோ?' என்று திவ்யமான *நெஞ்சென்னும் உட்கண்ணாலே கண்டு, 'பார்க்கவமுநீந்த்ர ரே! ஸுகமேயிருக்கிறீரோ?' என்று குஶலப்ரஶ்நம்பண்ண, அவரும் 'பத்ம மாதவீகுஸுமகைரவோத்பவ முனிகாள்! நன்றாயிருக்கிறீர்களோ?' என்று வினவியருளி, அந்யோந்ய வந்தந பரராய் ஆஹ்லாதபரீதநேத்ராம்புக்கள் பனிப்பப் புளகீக்ருதகாத்ரராய் ஒருவரையொருவர் ஆலிங்கித்துக்கொண்டு மிகவும் ப்ரீதியுடனே எல்லாரும் ஸதாபரகுணாவிஷ்டராய் யோகத்திலே எழுந்தருளியிருந்தார்கள்.

இவர்கள் ஒருவர்க்கொருவர் பாலும்பாலும் சேர்ந்தாற்போலவும், தேனுந் தேனுங் கூடினாற்போலவும், பகவச்சரணாரவிந்தத்யாநாம்ருதாஸ்வாதநம் *தேனூறியெப்பொழுதும்தித்தித்து ஐகரஸ்யத்தாலே எல்லாருக்கும்ப்ரணய ரஸம் உந்மஸ்தகமாம்படி பகவதநுபவம்பண்ணியிருந்தார்கள். பின்பு எல்லாரும் உகந்ததிருவுள்ளத்தை யுடையராய் மயிலாநகரி யேற வெழுந்தருளி, அங்கே பேயாழ்வார் திருவவதரித்தருளின கைரவதீர்த்தத்தையும் ப்ரீதியுடன் ஆலோகித்துக்கொண்டு தத்தீரத்திலே சிலகாலம் யோகத்திலேயெழுந்தருளியிருந்து பின்பு "ஓடித்திரியும் யோகிகள்" என்னும்படியே பூர்வம் போலே பார்க்கவமுநீந்த்ரரை அநுவர்த்தித்து அநுமதிகொண்டு பூஸஞ்சரணார்த்தமாக முதலாழ்வார்கள்மூவரும் எழுந்தருளினார்கள்.

அநந்தரம், பார்க்கவமுநீந்த்ரரும், தம்முடைய திருவவதாரஸ்தலமான திருமழிசையிலே எழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண்வேண்டிக் கல்லி ஶோதித்தவிடத்தில் திருமண் அகப்படாமல் முசித்துக்கிடக்க, அப்போது * திருவேங்கடத்தெந்தை இவர்ஸ்வப்நத்திலேயெழுந்தருளித் திருமண் இருக்குமிடம் அடையாளமாகக் காட்டியருள, அங்கே திருமண்கண்டெடுத்து அத்திருமண்கொண்டு பன்னிரண்டுதிருநாமஞ் சாத்தியருளிப் பெரியப்ரீதியுடனே "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை" என்கிறபடியே க்ஷுத்ர புருஷார்த்தங்களில் நசையற்றுப் பகவதநுபவம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற இவரும், பொய்கைப்பிரானவதரித்தருளின பொய்கைப்ரதேசத்திலே சிலகாலம் ஸேவித்திருக்கத் திருவுள்ளமாய், (க)"யத்துஸத்யவ்ரதம்நாம க்ஷேத்ரம்பாபவிநாஶநம் - புண்யக்ஷேத்ரேஷு ஸர்வேஷு தஸ்யைவஶ்ரைஷ்ட்யமீரிதம்" என்று சொல்லுகிறபடியே புண்ய க்ஷேத்ரங்களில்வைத்துக்கொண்டு ஶ்ரேஷ்டமுமாய்ப் பாபஹரமுமாய் ஸத்யவ்ரதக்ஷேத்ரமென்று பேரையுடையதுமான கச்சிவெஃகாவிலே எழுந்தருளி, (உ) "ஶயாநஶ்ஶேஷபர்யங்கே குந்தேந்துதவளப்ரபே - பணாரத்நஸஹஸ்ராம்ஶு நவாஸ்தரணவிஸ்த்ருதே - நீலஜீமூதஸங்காஶ: பத்மபத்ரநிபேக்ஷண: - ஸேவ்யமாநோவிஶாலாக்ஷ்யா ஶ்ரியாகமலஹஸ்தயா - தரண்யாசஸுதந்வங்க்யா தாதாவிஶ்வஸ்யவிஶ்வபுக்" என்றும், "தேவிமாராவார் திருமகள் பூமி" என்றும் சொல்லுகிறபடியே ஶ்ரீபூமிநீளைகளாலே ஸேவ்யமாநனாய்க் கொண்டு "பணங்களாயிரமுடையநல்லரவணைப்பள்ளிகொள்பரமா" என்கிற படியே பெரியதிருவநந்தாழ்வானை திருவணையிலே * வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தை ஸேவித்து, பொய்கையாழ்வாரவதரித்தருளின அந்தத்திருப் பொய்கைக்கரையிலே அவரை த்யாநம்பண்ணிக்கொண்டு யோகத்திலே எழுநூறுஸம்வத்ஸரம் எழுந்தருளியிருக்கிற காலத்திலே,

இவர் திருவடிகளிலே கணிகண்ணர் வந்து ஆஶ்ரயித்துப் பகவத்ப்ரவணராயிருக்க, அவ்வளவிலே அங்குள்ள ஒருஸ்த்ரீவிரையானவள் வந்து ஆழ்வாரை

(க) "యత్తుసత్యవ్రతంనామ క్షేత్రంపాపవినాశనం। పుణ్యక్షేత్రేషుసర్వేషు తస్యైవ శ్రైష్ఠ్యమీరితం." (உ) "శయానశ్శేషపర్యఙ్కే కున్దేన్దుధవళప్రభే। ఫణారత్నసహస్రాంశునవాస్తరణవిస్తృతే ॥ నీలజీమూతసఙ్కాశః పద్మపత్రనిభేక్షణః । సేవ్యమానోవిశాలాక్ష్య శ్రియాకమలహస్తయా ॥ ధరణ్యాచసుతన్వఙ్గ్యా ధాతావిశ్వస్యవిశ్వభుక్."

ஸேவித்து அவர் திருவடிகளிலே பக்தியுக்தையாய் அவரெழுந்தருளியிருக்கிறவிடத்தை "கடைத்தலைசீக்கப்பெற்றால் கடுவினைகளையலாம்" என்கிறபடியே ஸம்மார்ஜநகோமயாநுலேபநரங்கவல்யாத்யலங்காரங்களாலே அநுதிநம் சுச்ரூஷிக்க, யோகத்திலே யெழுந்தருளியிருக்கிற இவ்வாழ்வார் ஒருநாள் திருக்கண்களைவிழித்துப்பார்த்து, இவள்செய்கிற கிங்கரவ்ருத்திக்கு மிகவும் உகந்த வுள்ளத்தராய், அந்த வ்ருத்தையைப் பார்த்து 'உன் அபீஷ்டத்தைச் சொல்லிக்காணாய், உனக்கு ஒருவரப்ரதாநம் பண்ணுகிறோம்' என்றுஅருளிச்செய்ய,அவளும் அப்படியே ஆழ்வாரைக்குறித்து'அடியேனிடத்தில்க்ருபாதிசயமுண்டாகில் அடியேனுக்கு இந்தவார்த்தகம்போம்படி கடாக்ஷித்தருளவேணும்' என்ன, ஆழ்வாரும் 'அப்படியே ஆகக்கடவது' என்று அவளைக் குளிரக்கடாக்ஷித்தருள, அவளும் இவர்கடாக்ஷத்தாலே ப்ராப்தயௌவனையாய்த் தேவஸ்த்ரீயைப்போலே அதிஸுந்தரியாக, அவ்வளவிலே, தத்ராஜ்யாதிபதியான பல்லவராயனும் இவளைக்கண்டு,மந்மதபாணபாதிதனாய்த் தனக்குப் பத்நியாகவேணுமென்று ப்ரார்த்திக்க, அவளும் அநுகூலித்து அவனுடனே அதிமாநுஷமான போகங்களை அநுபவியாநிற்க,

ஒருநாள், பல்லவராயன், தனக்கு ஒருநாளைக்கொருநாள் ஶரீரம் ஜரித்துவரக் கண்டு, அவளைக்குறித்து 'உனக்கு அதிமாநுஷமான இந்த யௌவநம் எங்ஙனேயுண்டாயிற்று?' என்று கேட்க, அவளும் அவனைக்குறித்து ஆழ்வார்கடாக்ஷத்தாலே தனக்குஉண்டானபடியைச் சொல்லி; 'நீயும் உன்னகத்திலே அநுதிநம் உபாதாநம்பண்ணவருகிற கணிகண்ணரை அநுவர்த்தித்து அவர்புருஷகாரமாகத் தத்தேசிகரான பக்திஸாரரை அநுவர்த்தித்தாயாகில், உனக்கும் இப்படிப்பட்ட யௌவநம் உண்டாம்'என்றுசொல்ல, அப்போது ராஜாவும் கணிகண்ணரையழைத்து, 'உம்முடைய ஆசார்யரை நாம் ஸேவிக்கவேணும்: அவரை நம்பக்கல் அழைத்துக்கொண்டு வரவேணும்' என்று சொல்ல, கணிகண்ணரும், 'நம்ஆசார்யர் ஒருவரகத்துக்கும் எழுந்தருளார், ஒருராஜாவையும் கணிசித்துப் பாரார்' என்ன, பின்னையும் ராஜாவான பல்லவராயன் தன்னைக்கவிபாடவேணு மென்று கணிகண்ணரை அபேக்ஷிக்க,*வைகுந்தச்செல்வனார்சேவடியைப்பாடுகையொழிய, *"நாக்கொண்டு மானிடம் பாடேன்" என்றும், "வாய்கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேன்" என்றும் இப்படி தம்முடைய அத்யவஸாயஹேதுவான சிஷ்டாசாரவசநங்களைச்சொல்லி 'பகவத்பாகவதவிஷயமொழிய நான் நரஸ்துதிபண்ணுவதில்லை' என்ன, 'ஆகிலும், நீர் நம்மைப்பாடவேணும்'என்று அவன் இவரை நிர்ப்பந்திக்க,கணிகண்ணரும் †"ஆடவர்க ளெங்ஙனகல்வா ரருள்சுரந்து, பாடகமு மூரகமும் பாம்பணையும் - நீடியமால், நின்று னிருந்தான் கிடந்தானிதுவன்றோ, மன்றூர்‡பொழிற்கச்சி மாண்பு"என்று சொல்ல,அவனும் 'நம்மைப்பாடென்றால் இங்ஙனே சொல்லலாமோ?' என்று மிகவும் குபிதனாய்க்கொண்டு 'ஆகில்,நம்முடைய ராஜ்யத்தினின்றும் போம்' என்ன, (க)"ஆஜகாம

(க) " ఆజగామముహూర్తేన. "

† 'எவ்வா றகன்றெழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்சரமா' என்றும் பாடம். ‡ 'மதிற்கச்சி' என்றும் பாடம்.

முஹூர்த்தேந" என்கிறபடியே சடக்கென ஸ்வாசார்யரான பக்திஸாரமுனிகள்திருமுன்பே வந்து தண்டன்ஸமர்ப்பித்து அச்செய்தியை விண்ணப்பஞ்செய்து 'அடியேன் இவ்விடத்தில்நின்றும் விடைகொள்ளுகிறேன்' என்ன, ஆழ்வாரும் 'நீர் போகிறீராகில், நாம் இங்கிருக்கப்போகிறோமோ? நாம் புறப்பட்டால், எம்பெருமான் இங்குக் கண்வளரப்போகிறானோ? அவனெழுந்தருளும்போது, தத்பரிகரபூதரான ப்ரஹ்மாதிகள் இங்கிருக்கப்போகிறார்களோ?' என்று அருளிச்செய்து, '*வெஃகாவிலுன்னிய யோகத்துறக்கமானவனையும் எழுப்பிக்கொண்டு வருகிறோம்' என்று சொல்லி, திருவெஃகாநாயனார்திருமுன்பே எழுந்தருளி அவரைப்பார்த்து "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டா - துணிவுடைய, செந்நாப்புலவனும்போகின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று ஆழ்வார் விண்ணப்பஞ்செய்ய, அவர் சொன்னவண்ணஞ் செய்து இவருடையபின்னே எழுந்தருள, "சுடர்கொள்சோதியைத் தேவரும் முனிவருந் தொடர" என்கிறபடியே மற்றும் அத்தேசத்தில் ஆலயங்களில் தேவதைகளும் பின்தொடர எழுந்தருளுகையாலே, (க) "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா:-உபதப்தோதகாநத்ய: பல்வலாநிஸராம்ஸிச" என்று சொல்லுகிறபடியே திருவயோத்யை ராமவிஶ்லேஷத்தாலே பொலிவழிந்தாப்போலே காஞ்சீநகரத்திலே தரு குல்ம லதாதிகளும் நதீதடாகங்களும் மிகவும்வாடி அழகழிந்து தத்ராஜ்யத்தில் கோயில்களில் எம்பெருமான்களுமில்லாதே ஆலயங்களிலே தேவதைகள் ஒருவருமின்றியே அந்தகாரம்கவிந்து உதயாஸ்தமயந் தெரியாதே "நீளிரவாய் நீண்டதால்" என்கிறபடியே கநதிமிரபூயிஷ்டமானபடியை ராஜாவும் மந்த்ரிகளும் கண்டு, போர க்லேசித்து இவர்களைப் பின்தொடர்ந்துசென்று, †'ஓரிரவிருக்கை' என்கிற ஊரிலே இவர்களைக் கண்டு கப்படத்தைக்கட்டிக் காலிலேவிழுந்து கணிகண்ணரைவேண்டிக்கொள்ள, கணிகண்ணரும் மீண்டெழுந்தருளும்படி ஆழ்வாரை வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் மீண்டெழுந்தருளத் திருவுள்ளமாய் ஆஶ்ரிதபரதந்த்ரரான சொன்னவண்ணஞ்செய்தபெருமாளைப்பார்த்து, "கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டும் - துணிவுடைய, செந்நாப்புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய் படுத்துக்கொள்" என்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானும் மீண்டெழுந்தருளி, ஆழ்வார்சொன்னவண்ணஞ்செய்தது எல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாகவேணுமென்று இடத்திருக்கை கீழ்படக் கண்வளர்ந்தருளினார். இப்படி "விருப்புடையவெஃகாவேசேர்ந்தானை" என்கிறபடியே சேர்ந்து *நாகத்தணையைப் படுக்கையாகப்படுத்துக்கொண்டு கண்வளர்ந்தருளின இந்தஸௌலப்யத்தை அநுஸந்தித்திறே "வெஃகணைக்கிடந்த தென்னநீர்மையே!" என்று ப்ரீதராயருளினார். அந்த நகரிதானும் "நிறைந்தசீர்நீள்கச்சி" என்னும்படி பொலிவையுடைத்

---

(க) "అపివృక్షాః పరిమ్లానాః సపుష్పాఙ్కురకోరకాః । ఉపతప్తోదకానద్యః పల్వలాని సరాంసిచ."

† 'ஓரிருக்கை' என்றும், 'ஓரிக்கை' என்றும் வழங்குவர்.

எம்பார், பட்டரைப்பார்த்து 'நம்பெருமாள் நம்மைப் புத்ரஸ்வீகாரம் பண்ணியருளினார்; நாம் ஆழ்வானுடையபிள்ளை: அகிலஶாஸ்த்ரங்களையும் அதிகரித்தோம்'என்கிற மேன்மையை நினைத்து இறுமாந்திராதே,எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்றுஅருளிச்செய்தருளினார்.

பட்டர், நஞ்சீயரைப்பார்த்து "வேதாந்தியென்கிற பேரையுடையோம்; நம்முடையபக்கல்ஆஶ்ரயித்தோம்: நமக்கு பஹுத்ரவ்யத்தைஆசார்யதக்ஷிணையாகத் தந்தோம்' என்று இறுமாந்திராதே, எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

நஞ்சீயர், நம்பிள்ளையைப் பார்த்து "லோகாசார்ய ரென்கிற பேரையுடையோம்; திருவாய்மொழிக்குப் பொருள்சொல்ல வல்லோம்' என்று இறுமாந்திராதே 'எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

நம்பிள்ளை, †சிவக்கரைப்பிள்ளையைத் திருக்கையைப் பிடித்துக்கொண்டு எழுந்தருளாநிற்க, ஒருஸ்ரீவைஷ்ணவர் நம்பிள்ளை திருமாளிகைத்திருவிடைகழியிலே கண்வளராநிற்க, சிவக்கரைப்பிள்ளை அவரை 'காலை முடக்கும்' என்ன, நம்பிள்ளையும்'*மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் "திருத்தாள்" என்றுஅருளிச்செய்ய,நீரோ காலென்பீர்?' என்று அவர்கையை விட்டருள, அவரும் சிவக்கரையிலே போயிருந்து, பின்பு ஶோகார்த்தராய் 'இரண்டாற்றுக்கு நடுவே நின்று கவணிலே கல்லைவைத்து வீசினாப்போலே தள்ளிவிட்டருளிற்றே! இனி அடியேனுக்குக் கதியென்?' என்று பிள்ளைக்குவிண்ணப்பஞ்செய்து வரக் காட்டியருள,நம்பிள்ளையும் 'உமக்கு ஒருகுறையுமில்லை; எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென் றிருப்பது' என்று அருளிச்செய்து போகவிட்டு அழைத்து க்ருபைசெய்தருளினார்.

திருக்குருகைப்பிரான்பிள்ளான், சிறுப்புத்தூரிலே எழுந்தருளி யிருக்கச்செய்தே, சோமாசியாண்டான் பிள்ளான்ஸ்ரீபாதத்திலே மூன்றுஉரு ஸ்ரீபாஷ்யம் வாசித்தருளி மீண்டு எழுந்தருளும்போது, சோமாசியாண்டான் அநுவர்த்தித்து'அடியேனிருக்கிற தேஶம் இதுவாயிருந்தது; அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொன்று அருளிச்செய்யவேணும்' என்ன, பிள்ளானும் ஆண்டானைக்குறித்து'நீர் பாட்டப்ரபாகரமீமாம்ஸை இவை இத்தனைக்கும்பொருள் சொல்லவல்ல கர்த்தா; ஸ்ரீபாஷ்யத்துக்கு ப்ரவர்த்தகர்' என்று மேன்மை பாராட்டித்திரியாதே, எம்பெருமானார்திருவடிகளே சரணமென்றிரும்'என்று அருளினார்.

கோமடத்துப்பிள்ளான், தம் ஸ்ரீபாதத்தில் ‡ காக்கைப்பாடியாச்சான் பிள்ளைமூன்றுஉரு ஸ்ரீபாஷ்யம்வாசித்து அத்தால் மிகவும் மேன்மையையுடையரா யிருக்குமது கண்டு, இவர்க்கு இம்முகத்தாலே அபசாரம்வருமென்று அஞ்சி 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

† 'சிவிக்கரை' என்றும் சிலப்ரதிகளிற் காண்கிறது.

‡ 'காக்கையாடியாச்சான்பிள்ளை' என்று ப்ரதிபேதம்.

எங்களாழ்வான், காக்கைப்பாடியாச்சான்பிள்ளையைப் பார்த்து 'உம்மைப் பெருமாள் முனிந்தருளினபோது என்நினைத்திருந்தீர்?' என்று கேட்டருள, அவரும் 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருந்தேன்' என்று விண்ணப்பஞ்செய்தார்.

நடாதூரம்மாள்ஸ்ரீபாதத்திலே பத்துப் பன்னிரண்டு திருநாமம் ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிறபோது, அம்மாள், அவர்களுக்கு ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸித்துக்காட்டியருள, அவர்களும்'பக்தி ஒருபாயமாக இருந்தது'என்ன, பின்பு அவரும் ப்ரபத்யுபாயத்தை அருளிச்செய்து காட்டியருள, 'பக்தியிலும் ப்ரபத்திதான் அரிதாயிருந்தது' என்று அவர்கள் விண்ணப்பஞ் செய்ய, 'ஆகில், எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்று விஸ்வஸித்து உஜ்ஜீவியுங்கோள்' என்றருளினார்.

நடுவிலாழ்வான், திருநாராயணபுரத்திலே யிருந்து ஸ்ரீபாஷ்யம் வாசிப்பிக்கிறகாலத்திலே, வங்கிப்புரத்தாய்ச்சி சொட்டையம்மாளுள்ளிட்டார் ஸ்ரீபாஷ்யத்தைக் கேட்டு 'இது அரிதாயிருந்தது' என்ன, 'ஆகில்,இது அருளிச்செய்தருளின எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்றருளினார்.

ஸ்ரீவேதவ்யாஸபட்டர், திருநாராயணபுரத்திலே எம்பெருமானார்திருமுன்பே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸிக்க, 'இது கங்காப்ரவாஹமா யிருந்தது; எங்களால் அவகாஹிக்கப் போகாது' என்று ஐம்பத்திருவர் விண்ணப்பஞ் செய்ய, பட்டரும் 'ஆகில், உங்கள் *குலதெய்வமான எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்று உஜ்ஜீவியுங்கோள்' என்றருளினார்.

நடுவில்திருவீதிப்பிள்ளை, வெள்ளைக்குளத்து ஆனைகாத்தசிங்கர்முன்பே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யம் உபந்யஸிக்க, தம்ஶிஷ்யரான இளையவழகியார் எழுந்திருந்து 'இது கங்காப்ரவாஹமாயிருந்தது; என்னால் அவகாஹிக்கப் போகாது' என்று விண்ணப்பஞ்செய்ய, 'ஆகில், எம்பெருமானார்திருவடிகளே ஶரணமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

வடுகநம்பி, 'எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், நம்பெருமாள் திருவடிகளே ஶரணம்' என்று இரண்டையும் சேர அநுஸந்திக்கும் ஆழ்வானையும், ஆண்டானையும் 'இருகரையர்' என்பர். வடுகநம்பி எம்பெருமானார்திருவடிகளே ஶரண மென்னுமாபோலேயும், பட்டர் அழகியமணவாளப்பெருமாள்திருவடிகளே ஶரண மென்னுமாபோலேயும், அநந்தாழ்வான் திருவேங்கடமுடையான்திருவடிகளே ஶரண மென்னுமாபோலேயும், திருக்கச்சிநம்பி பேரருளாளர்திருவடிகளே ஶரண மென்னுமா போலேயும், எம்பெருமானார் செல்வப்பிள்ளைதிருவடிகளே ஶரண மென்னுமா போலேயும் ஒருவர்க்கும் இசைந்திராது.

ப்ரஹ்மரக்ஷஸ்ஸு வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— யாதவப்ரகாசனுக்கு உடையவரைக்காட்டி, 'இவர் நித்யஸூரிகளில் தலைவர்' என்று சொல்லுகையாலே ;

ஊமை வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:—“பெருமாள்கோயிலிலே பாகவதஜந்மத்தில் பிறந்தானொருபிள்ளை ஐந்தாறுவயஸ்ஸளவாக ஊமையாயிருந்து, பின்பு இரண்டுஸம்வத்ஸரம் காணாதிருந்து, பின்பு எல்லாருங்காண வந்து வார்த்தைசொல்ல வல்லனாக, இவ்வாஸ்சர்யத்தைக் கண்டு எல்லாரும் திரளாகவிருந்து ஊமையைப்பார்த்து ‘நீ இத்தனைநாளும் எங்கேறப்போனாய்?’ என்று கேட்க, அவனும் ‘நான் க்ஷீராப்திக்குப் போனேன்’ என்ன, இவர்களும்‘அங்கு விஸேஷமென்?’என்றுகேட்க,‘ஸ்ரீஸேநாபதியாழ்வான் உடையவராய் வந்து அவதரித்தருளினாரென்று ஒருவிஸேஷம்’ என்ற வநந்தரம் அவனைக் கண்டதில்லை” என்று ஸ்ரீபகவத்ஸேநாபதிஜீயர் அருளிச்செய்கையாலே; இப்படி இவர்ப்ரபாவத்தை எல்லாரும் ப்ரகாஸிப்பித்தார்கள்.

ஸ்ரீமந்நாதமுநிகள் தொடக்கமான ஆசார்யர்களிற்காட்டில் இவருக்கு ப்ராதாந்யங்கொள்ளும்படி எங்ஙனேயென்னில்:— பகவதவதாரங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே ஸ்ரீராமக்ருஷ்ணாத்யவதாரங்களுக்கு ப்ராதாந்ய முண்டானாப்போலேயும், திவ்யதேஸங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே கோயில்திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரங்களுக்கு ப்ராதாந்ய முண்டானாப் போலேயும், ரிஷிகளெல்லாரிலும் வைத்துக்கொண்டு வ்யாஸ பராஸர ஸுக ஸௌநக நாரதாதிகளுக்கு ப்ராதாந்ய முண்டானாப்போலேயும், ஆழ்வார்களெல்லாரும் ஒத்திருக்க நம்மாழ்வாருக்கு ப்ராதாந்யமுண்டானாப்போலேயும், ஆசார்யர்களெல்லாரிலும் வைத்துக்கொண்டு உடையவருக்கு ப்ராதாந்யங்கொள்ளத் தட்டில்லையிறே.

ஸ்ரீராமாவதாரத்திற்கு ப்ராதாந்யம் எத்தாலேயென்னில்:—பெருமாள் அபயப்ரதாநம் அருளிச்செய்தும், குஹப்பெருமாளுடன் * சீரணிந்த தோழமைகொண்டும், பெரியஉடையாரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தும்,ஸ்ரீஸபரிகையாலே ஸம்யக்போஜநஞ் செய்தும்,திருவடியுடன் “உண்பன்நானென்ற ஒண்பொருள்” என்னும்படி ஸஹபோஜநம்பண்ணியும் போருகையாலே; ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்துக்கு ப்ராதாந்யம் எத்தாலேயென்னில்:— கீதோபநிஷத்தை வெளியிட்டுச் சரமஸ்லோகம் அருளிச்செய்கையாலும்,பீஷ்ம த்ரோணாதிகளுடைய க்ருஹங்களை விட்டு ஸ்ரீவிதுரர்திருமாளிகையிலே (க) “ஸுசிர்குணவந்திச” என்கிற பாவநத்வ போக்யத்வங்களையுடைத்தாயிருந்த தென்று அமுதுசெய்து (உ) “த்விஷதந்நம்நபோக்தவ்யம்” என்று முறைகூறுகிற சோற்றை நிராகரித்து இதுதன்னையே ஸத்ருகோஷ்டியிலும் ப்ரஸித்த மாக்குகையாலும்.

கோயிலுக்கு ப்ராதாந்யம் எத்தாலேயென்னில்:— திருப்பாணாழ்வாரோடு கலந்து பரிமாறுகையாலே ; திருமலைக்கு ப்ராதாந்யம் எத்தாலேயென்னில்:—குறும்பறுத்த நம்பிக்கும் தொண்டைமான்சக்ரவர்த்திக்கும் வார்த்தை யருளிச்செய்து கலந்து பரிமாறுகையாலே; பெருமாள்கோயிலுக்கு ப்ராதாந்யம் எத்தாலே யென்னில்:—திருக்கச்சிநம்பியோடு ஸ்மிதபூர்வகமாக ஸம்பாஷணம்பண்ணி மிகவுங் கலந்து பரிமாறுகையாலே; திருநாராயண

(க) “శుచిర్గుణవన్తిచ.” (உ) “ద్విషదన్నం నభోక్తవ్యం.”

புரத்திற்கு ப்ராதாந்யம் எத்தாலே யென்னில்:— ஸுசரிததநயன்பக்கல் ஆதராதிஶயத்தாலே தந்நிவேதிதாந்நத்தை ஸம்யக்போஜநம்பண்ணி அவனை வாழ்விக்கையாலும், யதிராஜபுத்ரரான ஸௌஶீல்யத்தாலும்.

வேதவ்யாஸபகவானுக்கு ப்ராதாந்யம்:—வேதங்களை விஸ்தரிப்பித்து, அதில் கர்மகாண்டத்தைவிட்டு ப்ரஹ்மபாகத்திலே புருஷஸூக்த சாந்தோக்ய வாஜஸநேய தைத்திரீயக ஶ்வேதாஶ்வதர மஹோபநிஷதாதிகளிலும், தது பப்ரும்ஹணங்களான புராணேதிஹாஸாதிகளிலும், (க) "ஸத்யம் ஸத்யம்" என்றுதொடங்கி (உ) "நதைவம்கேஶவாத்பரம்" என்று ஸத்யபுரஸ்ஸரமாகப் பரதத்வநிர்ணயம் பண்ணுகையாலே; ஸ்ரீபராஶரப்ரஹ்மரிஷிக்கு ப்ராதாந்யம்:–'(ந) "புராணேஷுசவைஷ்ணவம்" என்னும்படியான ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலேசித்சிதீஶ்வரதத்வங்களை விஶதமாகப்ரதிபாதித்த உதாரன்' என்று ஆளவந்தார் நமஸ்கரித்தருளுகையாலே; ஸ்ரீஶுகப்ரஹ்மரிஷிக்கு ப்ராதாந்யம்:— பரிக்ஷித்துராஜாவுக்கு ஸ்ரீபாகவதத்திலே தத்வநிர்ணயத்தைப் பண்ணி (ச) "ஶுகோமுக்தஃ" என்னும்படியான வைபவத்தை யுடையராகையாலே; ஸ்ரீஶௌநகபகவானுக்கு ப்ராதாந்யம்:—ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே பலவிடங்களிலும் தத்வநிர்ணயம்பண்ணுகையாலே; ஸ்ரீநாரதபகவானுக்கு ப்ராதாந்யம்:— (ரு) "புஜயுகமபிசிஹ்நைரங்கிதம்யஸ்யவிஷ்ணோஃபரமபுருஷநாம்நாம்கீர்த்தநம் யஸ்யவாசி-ருஜுதரமபிபுண்ட்ரம்மஸ்தகேயஸ்யகண்டே ஸரஸிஜமணிமாலா யஸ்யதஸ்யாஸ்மிதாஸஃ" என்று இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தாஸனென்று சொல்லுகையாலும், பெரியாழ்வாரும் "சேமமுடைநாரதனார்" என்னும்படியான வைபவத்தாலும்.

ஆழ்வார்களில் நம்மாழ்வாருக்கு ப்ராதாந்யம் எத்தாலே யென்னில்:— ஸஹஸ்ரஶாகையான நாலுவேதத்தினுடைய பொருள்களையும் நாலுப்ரபந்தமுகத்தாலே ஸர்வாதிகாரமாக்குகையாலும், நாதமுநிகளுக்கு ப்ரஸந்நராய் அருளிச்செயல் நாலாயிரத்தையும் ப்ரஸாதித்து மற்றுமுண்டான தர்ஶநதாத்பர்யங்களையெல்லாம் அருளிச்செய்து தர்ஶநத்தை நிலைநிறுத்துகையாலும், † ("பயிலுஞ்சுடரொளி", நெடுமாற்கடிமை" முதலான இடங்களில் வர்ணோத்யுத்கர்ஷங்களை நிராகரித்து வேதப்ரமாணமுக்யதாத்பர்யமான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் எல்லாருக்குந் தெரியும்படி அருளிச்செய்கையாலும்).

உடையவர், கீழ்ச்சொன்னவர்களைப்போலன்றிக்கே பெருமாள் அருளிச்செய்த அபயப்ரதாநத்தை விஶதமாக்குகையாலும், கீதாசார்யன் அருளிச்செய்த சரமஶ்லோகார்த்தத்தை ப்ரகாஶிப்பிக்கையாலும், ரிஷிப்ரோக்தமான ப்ரமாணங்களுக்கு அர்த்தமருளிச்செய்கையாலும், மற்றையாழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களை அங்கோபாங்கமாகவுடைய திருவாய்மொழி

---

(க) "సత్యంసత్యమ్." (உ) "నదైవం కేశవాత్పరమ్." (ந) "పురాణేషుచవైష్ణవం." (ச) "శుకోముక్తః." (ரு) "భుజయుగమపిచిహ్నైరఙ్కితం యస్యవిష్ణోః పరమపురుషనామ్నాం కీర్తనంయస్యవాచి। ఋజుతరమపిపుణ్డ్రంమస్తకేయస్యకణ్ఠే సరసిజమణిమాలాయస్యతస్యాస్మి దాసః."

† குண்டலிதக்ரந்தம் சில ஸ்ரீகோஶங்களிற் காணப்படுகிறது.

ப்ரபந்தத்தை அர்த்தவத்தாக விஶதமாக ப்ரகாஶிப்பிக்கையாலும், நாதமுனிகள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களையும் ஆளவந்தார் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையுங்கொண்டு ஸூத்ரவாக்யங்களை ஒருங்கவிட்டும், ஸ்ரீபாஷ்யம் கத்யத்ரயம் முதலான ப்ரபந்தங்களை அருளிச்செய்தும், நிகிலகுமதிஸமயங்களையும் நிராகரித்து, ஸ்வமதஸ்தாபநம்பண்ணி 'எம்பெருமானார்தர்ஶநம்' என்னும்படி பண்ணுகையாலும், இவர் எல்லாரிலும் ப்ரதாநரிறே. இனி, ஶிஷ்யர்களான கூரத்தாழ்வான் முதலியாண்டான் தொடக்கமானவர்களில் ப்ரதாநரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. ஆக, ப்ராதாந்யம் சொல்லிற்றாய்த்து.

(க) "ஆசார்யவாந்புருஷோவேத" என்றும், (உ) "பாபிஷ்டஃக்ஷத்ரபந்துஶ்ச புண்டரீகஶ்சபுண்யக்ருத் - ஆசார்யவத்தயாமுக்தஃ தஸ்மாதாசார்யவாந்பவேத்" என்றும், (ந) "ஆசார்யஸ்ஸஹரிஸ்ஸாக்ஷாச் சரரூபீநஸம்ஶயஃ" என்றும், (ச) "ஆசிநோதிஹிஶாஸ்த்ரார்த்தாநாசாரேஸ்தாபயத்யபி-ஸ்வயமாசரதேயஸ்து ஆசார்யஸ்ஸோऽபிதீயதே" என்றும், (ரு) "குஶப்தஸ்த்வந்தகாரஸ்ஸ்யாத் ருஶப்தஸ்தந்நிரோதகஃ - அந்தகாரநிரோதித்வாத் குருரித்யபிதீயதே" என்றும், (சா) "குருரேவபரம்ப்ரஹ்ம குருரேவ பராகதிஃ - குருரேவபராவித்யா குருரேவபரந்தநம் - குருரேவபரஃகாமோ குருரேவபராயணம்-யஸ்மாத்ததுபதேஷ்டாऽஸௌதஸ்மாத்குருதரோகுருஃ" என்றும், "பிதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும், "தேனார் கமலத்திருமாமகள்கொழுநன்-தானேகுருவாகி" என்றும் ஈஶ்வரன்தானாகச் சொல்லப்பட்ட ஆசார்யனே, ஶிஷ்யனுக்கு (எ) "தஸ்யவைகுண்டதுக்தாப்தி த்வாரகாஸ்ஸர்வஏவஸஃ" என்று திருநாடும் திருப்பாற்கடல்முதல் நூற்றெட்டுத்திருப்பதிகளும் "அன்னையாய் அத்தனாய்" என்னும்படியான ஸர்வவிதஉத்தாரக பந்துவும் மாடும் மனையும் தேடும்பொருளும் பூமியும் எல்லாம் ஆகக்கடவன்.

ஆழ்வான், ஆண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், எம்பார், ஸ்ரீபராஶரபட்டர் முதலானோர் தந்தம்ஶிஷ்யர்களுக்கு 'எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென் றிருங்கோள்' என்கைக்கு ஹேது என்னென்னில்:— ஸ்வாசார்யப்ரீதிநிபந்தநமாகவும், "மாறனடிபணிந்துய்ந்தவன்" என்று சொல்லுகையாலும்; ஆழ்வார்க்கும் உடையவர்க்கும் நடுவுள்ள ஆசார்யர்கள் நம்மாழ்வாருக்குக் கரணபூதராகையாலே இவர்க்கு நேரேஆசார்யர் திருக்குருகூர்நம்பியாகையாலும், அவர் "கலியுங்கெடும்" என்று இவரவதாரத்தைக் குறித்து அருளிச்செய்கையாலே ஆழ்வாராலே ப்ரவர்த்திதமான தர்ஶநத்தை

---

(க) "ఆచార్యవాన్ పురుషో వేద." (உ) "పాపిష్ఠః క్షత్రబన్ధుశ్చ పుణ్డరీకశ్చ పుణ్యకృత్। ఆచార్యవత్తయా ముక్తః తస్మాదాచార్యవాన్ భవేత్." (ந) "ఆచార్యస్స హరిస్సాక్షాచ్చర రూపీ న సంశయః." (ச) "ఆచినోతి హి శాస్త్రార్థానాచారే స్థాపయత్యపి। స్వయమాచరతే యస్తు ఆచార్యస్సోఽభిధీయతే." (ரு) "గుశబ్దస్త్వన్ధకారస్స్యాత్ రుశబ్దస్తన్నిరోధకః। అన్ధకారనిరోధిత్వాత్ గురురిత్యభిధీయతే." (சா) "గురురేవ పరం బ్రహ్మ గురురేవ పరాగతిః। గురురేవ పరా విద్యా గురురేవ పరం ధనం। గురురేవ పరః కామో గురురేవ పరాయణం। యస్మాత్తదుపదేష్టాఽసౌ తస్మాద్గురుతరో గురుః." (எ) "తస్య వైకుణ్ఠదుగ్ధాబ్ధిద్వారకాస్సర్వ ఏవ సః."

நிலைநிறுத்தி அவர் வைபவத்தை (க) "குரும்ப்ரகாஶயேத்தீமாந்" என்று ப்ரகாஶிப்பிக்கையாலும், ஆழ்வார்க்கு நேரே ஶிஷ்யர் உடையவராகக்கடவர். பெரியநம்பி முதலான பூர்வாசார்யர்கள் இவருக்குஆசார்யர்களாய் வீறுபெற்றார்கள்; ஆழ்வான்முதலானோர்கள் இவர்க்கு ஶிஷ்யராய்ப் பேறுபெற்றார்கள்; ஆகையாலே, ஸர்வாசார்யத்வபூர்த்தியுள்ளது உடையவர்க்கேயாகை பாலே, அருளிச்செய்தருளினார்களிறே.

ஆளவந்தாரும் இவ்வர்த்தத்தை அநுஷ்டித்துக் காட்டியருளினார்; எங்ஙனே யென்னில்:—மணக்கால்நம்பி உய்யக்கொண்டார் இவர்கள் உகப்பைப் பின்சென்று, (உ) "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத" என்றும், (ங) "நாதாயநாதமுநயேऽத்ரபரத்ரசாபி நித்யம்" என்றும், 'இங்கும் அங்கும் ஆசார்யன் திருவடிகளே ஶரணம், ஆசார்யவிஷயத்தில் க்ருதஜ்ஞதை யாவதாத்மஹாவி' என்று அருளினார். ஆகையாலே, ஸ்வரூபோஜ்ஜீவநத்திற்கு ஆசார்யனே தஞ்சமென்று பற்றுதலொழிய வேறே இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லையிறே. இவ்வர்த்தத்தை அநுஷ்டித்தார் ஆரென்னில்:—ஸ்ரீமதுரகவிப்ரப்ருதி ஸஜ்ஜநங்களிறே.

உடையவர் புழுவன்வ்யாஜேந மேல்நாட்டுக்கு எழுந்தருளினபோது, உபந்யஸித்த கட்டளையைக் கேட்டு ஆசார்யர்களெல்லாரும் ஆஶ்சர்யப்பட, உடையவரும் 'என்பரமாசார்யரான ஆளவந்தார்வார்த்தைகொண்டு சொன்னேன் இது; ஆளவந்தார்கோஷ்டியிலே ஒருநாளாகிலும் ஸேவிக்கப்பெற்றேனாகில் பரமபதத்திற்கும் இங்குமசுருளும் படியும் கட்டிவிடேனோ?' என்று அருளிச்செய்தாரிறே.

உடையவர், அபயப்ரதாநம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளையுறங்காவில்லிதாஸர் கோஷ்டியினின்றும் எழுந்துநிற்க, 'இதுவென்? பிள்ளாய்!' என்று உடையவர் கேட்டருள, '(ச) "பரித்யக்தாமயாலங்கா மித்ராணிச தநாநிச - பவத்கதம்மேராஜ்யஞ்ச ஜீவிதஞ்சஸுகாநிச" என்றும், (ரு) "த்யக்த்வாபுத்ராம்ஶ்சதாராம்ஶ்ச ராகவம்ஶரணங்கத:" என்றும் பகவத்ஸமாஶ்ரயணத்திற்கு விலக்கடியானவைகளை யடையவிட்டு 'பெருமாள்திருவடிகளே தஞ்சம்' என்று வந்து (சு) "கஸ்தஏவவ்யதிஷ்டத" என்று, நிலத்திலே கால்பாவாதேககநஸ்தனாய் நிராலம்பநனாய்நின்ற ஸ்ரீவிபீஷணாழ்வானையு மநப்பட (எ) "வத்யதாம்" என்று கல்லும் தடியுங் கொண்ட ராமகோஷ்டிக்குப் பஶுபத்ந்யாதிகளோடு கூடின அடியேன் ஆளாகப்புகுகிறேனோ?' என்றார். உடையவரும் 'கேளாய், பிள்ளாய்! அஞ்சாதேகொள்ளும்; நான்பெற்றேனாகில் நீர்பெறுகிறீர்; பெரியநம்பி பெற்றாராகில் அடியேன் பெறுகிறேன்; ஆளவந்தார் பெற்றாராகில் பெரியநம்பிபெறுகிறார்; மற்றும்மேலுள்ளார்பெற்றார்களாகில இவர்களும்பெறுகிறார்

---

(க) "గురుంప్రకాశయేద్ధీమాన్." (உ) "పితామహంనాథమునింవిలోక్య ప్రసీద." (ங) "నాథాయనాథమునయేఽత్రపరత్రచాపినిత్యం." (ச) "పరిత్యక్తామయాలంకామిత్రాణిచధనానిచ ! భవద్గతంమేరాజ్యంచ జీవితంచసుఖానిచ." (ரு) "త్యక్త్వాపుత్రాంశ్చదారాంశ్చరాఘవంశరణంగతః." (சு) "ఖస్థఏవవ్యతిష్ఠత." (எ) "వధ్యతాం."

கள்; நம்சடகோபர் "அவாவற்று வீடுபெற்ற" என்று தம்வாக்காலே அருளிச்செய்கையாலே அவர்பெற்றது ஸித்தம். ஆனபின்பு நமக்கும்ஸித்தமென்றிரும்; எல்லார்க்கும் நாச்சியார் புருஷகாரமுண்டாம்போது அச்சம் வேண்டா; ஆகையிறே நித்யயோகம்; ஆனபின்பு நித்யஸம்ஸாரிகளும் எம்பெருமானும் ஒருசங்கிலித்துவக்கிலேகாணு மிருப்பது; ஆகையால், நம்முடைய ஒழுக்குக்கூட்டம் நம்மைவிட்டகலா தென்றிரீர். கமுகு உண்ணில் வாழையும் உண்ணு மென்றிரும்: ஸ்ரீவிபீஷணாழ்வாரோடு வந்த நால்வரையும் அருளப்பாடிட்டபோது தனித்து அருளப்பாடிட்டதில்லையே; தகையென்றபோதும் தனித்துத் தகை யென்ற தில்லையே; ஆனபின்பு நான் பெற்றேனாகில் நீர் பெறுகிறீர்; அஞ்சாதே ஸுகமேயிரும்' என்று அருளிச்செய்தருளினார். "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச், சார்த்தியிருப்பார்தவம்"; ஏத்தியிருந்தார்-ஸ்ரீபராதாழ்வான், அவரைச் சார்த்தி யிருந்தார்-ஸ்ரீமத்ருக்நாழ்வான்; ஏத்தியிருந்தார் - நம்மாழ்வார், அவரைச் சார்த்தியிருந்தார்-ஸ்ரீமதுரகவிகள்; ஏத்தியிருந்தார் - பெரியாழ்வார், அவரைச் சார்த்தியிருந்தார் - நாச்சியார்.

'†இனி, எம்பெருமானாரைப் பற்றுமவ்வளவே ஸ்வரூபமாகில், திவ்யதேசங்களைக் கைவிட்டானாகானோ?' என்னில்,—கைவிட்டானாகான்; அது எங்ஙனேயென்னில்:—"இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை யென்னும், பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் அவைதன்னொடும்வந், திருப்பிடம் மாய னிராமாநுசன்மனத்து" என்கையாலே எம்பெருமானார் திருவடிகளைத் தொழவே திவ்யதேஸங்களெல்லாம் திருவடிதொழுதானாகக்கடவன்; உடையவரை ஆராதித்து அமுதுசெய்யப்பண்ணவே, எல்லாத்திவ்யதேசங்களிலெம்பெருமான்களையும் ஆராதித்து அமுதுசெய்யப்பண்ணினானாகக்கடவன்.

"'நின்றவண்கீர்த்தியும்" என்கிற பாட்டிலும், "பேறொன்றுமற்றில்லை" என்கிற பாட்டிலும் 'கர்மமும் உபாயமன்று, ஜ்ஞாநமும் உபாயமன்று, பக்தியும் உபாயமன்று, ப்ரபத்தியும் உபாயமன்று, எம்பெருமானார்திருவடிகளே உபாயோபேயம்' என்கையாலே, எம்பெருமானாரைப் பற்றுகையே ப்ரபத்தி, ராமாநுஜனென்கிற சதுரக்ஷரியே திருமந்த்ரம், அவர்திருவடிகளிலே பண்ணுங் கைங்கர்யமே பரமபுருஷார்த்தம்; இதுவே நிஸ்சிதார்த்தமான என் ஸித்தாந்தம்' என்று நடாதூரம்மாள் அருளிச்செய்தருளுவர்.

கூரத்தாழ்வான் 'நாராயண ராமாநுஜ என்கிற திருமந்த்ரங்களுக்கு வாசி பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவாகையும், மோக்ஷைகஹேதுவாகையும்' ஆகிற இது தோன்ற, (க)"ராமாநுஜேத்யேஷா சதுராசதுரக்ஷரீ" என்றாரிறே.

"கையிற்கனி" என்கிறபாட்டிலே 'ஈஸ்வரனைக் கரதலாமலகமாகக்காட்டித்தந்தாலும், உன்விக்ரஹஸௌந்தர்யாநுபவமே பரமப்ராப்யம்' என்றும், "இராமாநுசனைத்தொழும் பெரியோர், எழுந்திரைத்தாடுமிட மடியேனுக்கிருப்பிடம்" என்று 'இராமாநுசனைத் தொழும் பெரியோர் நித்யவாஸம் பண்ணு

(க) "రామానుజేత్యేషా చతురా చతురక్షరీ."

† 'இனி, ஸ்வாசார்யபரமாசார்யர்களைப்பற்றுமவ்வளவே' என்றும் பாடம்.

மிடமே அடியேனுக்கு ப்ராப்யபூமி' என்றும், "உன்தொண்டர்கட்கே, அன்புற்றிருக்கும்படி யென்னை யாக்கி யங்காட்படுத்தே" என்று 'இராமாநுசனே! உன்னடியார் திறத்தில் ஊற்றம்மாறாத பக்தியை யுண்டாக்கி அவர்களுக்கே என்னையாட்படுத்தாய்' என்றும் உடையவர் திருமுகமண்டலத்தைப் பார்த்து விண்ணப்பஞ்செய்ய, இசைந்து எழுந்தருளியிருந்தாரிறே. இதுவே இவ்வர்த்தநிர்ணயத்திற்கு த்ருடதர முக்யப்ரமாணமென்று நமக்கெல்லார்க்கும் புத்திபண்ணக் குறையில்லை; எங்ஙனேயென்னில்:—"அங்கயல்பாய் வயல்" என்கிற பாட்டிற்படியே ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வநியந்தாவான எம்பெருமானையும் நாச்சியாரையும் புருஷகாரமாகக் கொண்டு, எம்பெருமானார் திருவடிகளைப் பெறவேணுமென்று ப்ரபந்தத்தைத் தலைக்கட்டியருளினாரிறே அமுதனாரும்.

† இங்ஙனன்றிக்கே, (க) "வேதாந்தாந்ஶங்கராத்யை:குமதிபிரஸதர்த்தாந் ஹிநீதாம்ஶ்சபூயஸ் ஸ்வார்த்தேதாத்பர்யயுக்தாந்கலயிதுமபிசஶ்ரீஶடாரியாத்ய பக்தை: - ப்ரோக்தாந்திவ்யப்ரபந்தாந்ஶரணவரணயோராத்மகாந்ப்ரஸ்புடார்த்தாந் க்ருத்வோத்தர்த்தும்பவாப்தேரகிலஜநமபூத்யோமஹாபூததாம்நி" என்றும், (உ) "வேதாந்தாநாமஸீம்நாங்குருதரகஹநார்த்தைகவாக்யத்வபூர்வம் வ்யாக்யாத்ருத்வாச்சஶேஷங்குருபரவஹநாதீஶிதுஸ்ஸைந்யநாதம் - ஸாது த்ராணாத்ததந்யப்ரமதநகரணாச்சாபிதத்பஞ்சஹேதீ நாசார்யத்வஸ்யபூர்த்யா யமுருதரக்ருபம்ஶ்ரீபதிஞ்சாஹுராரியா:" என்றும், (ங) "ஶ்ருத்யர்த்தாந்ப்ராப்யதத்வேநசவரதமுகாதாஜ்ஞயாதஸ்யஸர்வம் ஸங்கந்த்யக்த்வாத்ரிதண்டாஞ்சிதமஹிதகரோரங்கதாம்ந்யாஸ்தபஶ்சாத் - ஆர்யைஸ்ஸாகஞ்சலக்ஷ்மீரமணக்ருதபதாந்திவ்யதேஶாந்தராயாம் ஸேவம்ஸேவம்ப்ரகல்ப்யாதசமஹிதஸமாராதநம்தத்ரதத்ர" என்றும், (ச) "யாதோயஶ்ஶாரதாயாஸ்ஸவிதமததயாஸத்க்ருதஸ்வப்ரபந்தோ பாஷ்யாந்வேதாத்குத்ருஷ்டீநபிகபடபடூந்வாததோ நிர்ஜிகாய-ப்ராதக்ஷிண்யேநகச்சந்புவமகிலஜநம்வைஷ்ணவாக்ர்யஞ்சகுர்வந் ந்யாஸாக்யந்தேவகுஹ்யம்பரமஹிதமபித்ராக்ப்ரகாஶஞ்சக்ருத்வா" என்றும்,

---

(க) "వేదాన్తాన్నజ్ఞరాద్యైఃకుమతిభిరసదర్థానినీతాంశ్చ భూయస్స్వార్థే తాత్పర్యయుక్తాన్కలయితుమపి చ శ్రీశఠారాత్యభక్తైః। ప్రోక్తాన్దివ్యప్రబన్ధాన్శరణవరణయోరాత్మకాన్ప్రస్ఫుటార్థాన్ కృత్వోద్ధర్తుం భవాబ్ధేరఖిలజనమభూద్యో మహాభూతధామ్ని." (உ) "వేదాన్తానామసీమ్నాంగురుతరగహనార్థైకవాక్యత్వపూర్వం వ్యాఖ్యాతృత్వాచ్చ శేషంగురుభరవహనాదీశితుస్సైన్యనాథం। సాధుత్రాణాత్తదన్యప్రమథనకరణాచ్చాపి తత్పఞ్చహేతీ నాచార్యత్వస్య పూర్త్యాయమురుతరకృపం శ్రీపతిఞ్చాహురార్యాః." (ங) "శ్రుత్యర్థాన్ప్రాప్య తత్త్వేన చ వరదముఖాదాజ్ఞయా తస్య సర్వం సజ్జన్త్యక్త్వా త్రిదణ్డాఞ్చితమహితకరో రఙ్గధామ్న్యాస్త పశ్చాత్। ఆర్యైస్సాకఞ్చ లక్ష్మీరమణకృతపదాన్దివ్యదేశాన్తరాయాం సేవం సేవం ప్రకల్ప్యాథ చ మహితసమారాధనం తత్ర తత్ర." (ச) "యాతో యశ్శారదాయాస్సవిధమథ తయా సత్కృతస్స్వప్రబన్ధో భాష్యాన్వేదాత్ కుదృష్టీనపి కపటపటూన్వాదతో నిర్జిగాయ। ప్రాదక్షిణ్యేన గచ్ఛన్భువమఖిలజనం వైష్ణవాగ్ర్యఞ్చ కుర్వన్న్యాసాఖ్యం దేవగుహ్యం పరమహితమపి ద్రాక్ప్రకాశఞ్చ కృత్వా."

† இந்தப்பாரா அநேகம் ப்ரதிகளில் காண்கிறது.

(௧) "ரங்கே வேதாந்தபாஷ்யம் வ்யதநுத சத நக்ஷீடகண்டஸ்ய ஹேதோர் கத்வா யோ ஹோஸலாக்யம் ஜநபதமமலே யாதவாத்ரௌ நிவேஸ்ய - பஸ்சாதாகத்ய ரங்கங்குருவரமுகதோ வைதிகாக்ர்யம் விஸிஷ்டாத்வைதம் ஸித்தாந்தமஸ்மிந் ஜகதி பஹுமுகம் விஸ்த்ருதங்காரயித்வா" என்றும், (௨) "அத்யாப்யாஸ்தே யதுக்ஷ்மாப்ருதி மஹிததயஸ்சாக்ஷுஷீம் ஸ்வீயமூர்த்திங் குர்வாணஸ்தம் யதீந்த்ரங் குருகுலந்ருபதிம் நௌமி ராமாநுஜார்யம்" என்றும், (௩) "கீதாபாஷ்யம் பூஷ்யவேதாந்தபாஷ்யம் ஸாரந்தீபங்கிஞ்சகத்யத்ரயஞ்ச - வேதார்த்தாநாம் ஸங்க்ரஹம் நித்யயாகம் ப்ராஹைதாந்யஸ்தம் யதீந்த்ரம் பஜேஉஹம்" என்றும், (௪) "ஹஸ்த்யத்ரீஸப்ரஸாதாததிகதநிகமாந்தார்த்தகோ யோ ஹிஜித்வா பாஹ்யாந் வேதாத்குத்ருஷ்டீநபி நிகிலஜநம் வைஷ்ணவாக்ர்யஞ்சக்ருத்வா - ரங்கே வேதாந்தபாஷ்யம் வ்யததநுத மஹம் நௌமி ராமாநுஜார்யம் ஸ்ரீரங்காத்யாலயேஷு ப்ரகடகுணகணம் ஸ்ரீபதிம் ஸேவமாநம்" என்றும் இப்படி பெரியபெருமாள்முதலானோர் பஹுமுகமாகப் பேசி வெளியிட்டார்கள். இப்படி ஸத்துக்களாலே ப்ராக்உக்தவைபவம் ஸங்க்ரஹேண உக்தமாய்த்து.

ஏவம்விதவைபவயுக்தரான இந்த எம்பெருமானாரைத் தத்பாகிநேயஸூநுவாய்த் தந்நாமத்தையுடையராய்த் தந்நாமகுணஹர்ஷிதரான கந்தாடையாண்டான் கனக்க அநுவர்த்தித்து '(௫) "பரித்ராணாய" இத்யாதிப்படியே தேவரீர் (௬) "புண்யாம்போஜவிகாஸாய பாபத்வாந்தக்ஷயாயச - ஸ்ரீமாநாவிரபூத்பூமௌ ராமாநுஜதிவாகர:" என்னும்படி அவதரித்தருளின ஸ்ரீபெரும்பூதூரிலே ஸர்வகாலத்திலும் ஸர்வசேதநர்க்கும் ஸேவ்யமாம்படி தேவரீருடைய அர்ச்சாவிக்ரஹத்தை ஏறியருளப்பண்ணவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ஸ்வாமியும் 'அப்படியேசெய்யும்' என்று அநுமதிபண்ணியருள, அப்போதே ஆண்டானும் அநுகூலனான சில்பியை அழைப்பித்து (௭) "புண்ட்ரைர்த்வாதஸபிர்யுதம் விலஸிதந் தண்டைஸ்த்ரிபிர்மண்டிதங் காஷாயேண ஸிகோபவீதருசிரந்தோர்மூலசக்ராம்புஜம் - ஆஸீநஞ்ஜலஜாஸநேச துளஸீ

---

(௧) "రంగే వేదాన్తభాష్యం వ్యతనుత చ తత నక్షీటకణ్ఠస్య హేతోర్గత్వా యో హొసలాఖ్యం జనపదమమలే యాదవాద్రౌ నివేశ్య । పశ్చాదాగత్య రంగం గురువరముఖతో వైదికాగ్ర్యం విశిష్టాద్వైతం సిద్ధాన్తమస్మిన్జగతి బహుముఖం విస్తృతం కారయిత్వా." (௨) "అద్యాప్యాస్తే యదుక్ష్మాభృతి మహితదయశ్చాక్షుషీం స్వీయమూర్తిం కుర్వాణస్తం యతీన్ద్రం గురుకులనృపతిం నౌమి రామానుజార్యం." (௩) "గీతాభాష్యం భూష్యవేదాన్తభాష్యం సారన్దీపం కిఞ్చ గద్యత్రయఞ్చ । వేదార్థానాం సంగ్రహం నిత్యయాగం ప్రాహైతాన్యస్తం యతీన్ద్రం భజేఽహం." (௪) "హస్త్యద్రీశప్రసాదాదధిగతనిగమాన్తార్థకో యో హి జిత్వా బాహ్యాన్వేదాత్కుదృష్టీనపి నిఖిలజనం వైష్ణవాగ్ర్యఞ్చ కృత్వా । రంగే వేదాన్తభాష్యం వ్యతనుత మహం నౌమి రామానుజార్యం శ్రీరఙ్గాద్యాలయేషు ప్రకటగుణగణం శ్రీపతిం సేవమానం." (௫) "పరిత్రాణాయ." (௬) "పుణ్యాంభోజవికాసాయ పాపధ్వాన్తక్షయాయ చ । శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః." (௭) "పుణ్డ్రైర్ద్వాదశభిర్యుతం విలసితం దణ్డైస్త్రిభిర్మణ్డితం కాషాయేణ శిఖోపవీతరుచిరం దోర్మూలచక్రాంబుజం । ఆసీనం జలజాసనే చ తులసీపద్మాక్షమాలాఞ్చితం యుక్తం చాఞ్జలిముద్రయారవినిభం శ్రీభాష్యకారం భజే."

பத்மாக்ஷமாலாஞ்சிதம்யுக்தஞ்சாஞ்ஜலிமுத்ரயா ரவிதிபம்ஸ்ரீபாஷ்யகாரம்பஜே" என்கிற ப்ரார்த்யமான வார்த்தகவிக்ரஹாகாரத்தை ஸேவிக்கப்பண்ண, அவனும் "ஆதியஞ்சோதியுருவையங்குவைத்திங்குப்பிறந்த" என்கிறபடியே அர்ச்சாவிக்ரஹமாக எழுந்தருளப்பண்ணி ஸந்நிதியிலே கொண்டுவந்து வைக்க, திருக்கண்சாத்தி யுகந்தருளி, அந்தவிக்ரஹத்திலே தம்முடைய ஸர்வ ஶக்தியும் ப்ரகாஶிக்கும்படி காடாலிங்கநம்பண்ணி 'இவ்விக்ரஹத்தைப் புஷ்ய மாஸத்தில் குருபுஷ்யத்திலே ப்ரதிஷ்டிப்பியும்' என்று திருமுகமெழுதித் திநங்குறித்து அனுப்பியருள, ஆண்டானும் அப்படியே திருவடிகளிலே ஸேவித்து அந்தவிக்ரஹத்தை எழுந்தருளுவித்துக்கொண்டுவந்து மூலவிக்ரஹத்தையும் ஏறியருளப்பண்ணுவித்துத் திருமுகப்படியே திருப்ரதிஷ்டையுஞ் செய்வித்தருளினார்.

இங்கே ப்ரதிஷ்டிப்பிக்கிற அற்றைத்திவஸத்திலே திருமேனியிலே மிகவுந் தளர்ச்சியாய்ப் பலஹாநியுண்டாக, இராமாநுசனும் இதேதென்று பராமர்சித்து 'ஆண்டானுக்கு எழுதிக்கொடுத்த திவஸம் ஏது?' என்று கேட்டருள, அந்தத்திவஸம் அன்றுதானாயிருக்கக் கண்டு விஸ்மயப்பட்டு 'ஶீக்ரம் வருவது' என்று ஆண்டானுக்குத் திருமுகம் போகவிட்டருள, அவரும் திருமுகத்தை ஶிரஸாவஹித்து அப்படியே மீண்டெழுந்தருளித் திருவடிகளை ஸேவித்துக்கொண்டிருந்தார்.

†அநந்தரம் அங்குத்தைக்கு அத்யந்தம் அந்தரங்கரான ஆண்டான் முதலான முதலிகளெல்லாரும் பழுத்திருக்கிற தேமாவைக் கிளித்திரள்கள் காத்துக்கொண்டிருக்குமாபோலே, தத்துல்யரானஇவர்களும் விமலசரமவிக்ரஹத்தை "கையிற்கனி" இத்யாதிப்படியே * மெய்யிற்பிறங்கியசீரைப் பழுக்க ஸேவித்துக்கொண்டு, "அடையார்கமலத்துஅலர்மகள்கேள்வன்கையாழியென்னும், படையோடு நாந்தகமும் படர்தண்டு மொண்சார்ங்கவில்லும், புடையார்புரிசங்கமும் இந்தப்பூதலங்காப்பதற்கென்று, இடையே யிராமாநுசமுனியாயின விந்நிலத்தே" என்றும், (க) "ஶேஷோவா ஸைந்யநாதோவா ஸ்ரீபதிர்வேதி ஸாத்விகை: - விதர்க்யாயமஹாப்ராஜ்ஞைர்யதிராஜாய" என்றும், (உ) "தத்ரோதஞ்சதிமண்டபேயதிவரஃகக்ஷ்யாந்தரஸ்தேவஸந் பூர்வம்ராவணகம்ஸமுக்யதநுஜாந்ராமாநுஜாப்யாம்ஹதாந் - மத்வா ஶங்கர யாதவாதிமுகதோபூயோ஽வதீர்ணஃபுவம் தத்பங்காயக்ருதோதயஸ்ததுசிதாம் ராமாநுஜாக்யாம்வஹந்" என்றும், (ங) "வ்யாஸோவாபகவாந்பராஶரமுநிஸ் ஸ்ரீஶௌநகோவாऽதவா ஸாக்ஷாந்நாரதஏவவாஶடாரிபூர்வாகிஸ்வரோவாஸ்வயம் - லோகேஶஃபுருஷோத்தமஃபணிபதிஶ்ஶேஷீஜகச்சேஷிணீத்யாக்யாதும் ஜநதாம்ஹிதாயஸமபூத் ராமாநுஜார்யோ முநி:" என்றும் சொல்லுகிறபடியே அநேக அவதாரவிஶேஷமென்று ஆதரித்துக்கொண்டிருந்தார்கள்.

---

(க) "శేషోవాసైన్యనాథోవా శ్రీపతిర్వేతిసాత్త్వికైః । వితర్క్యాయమహాప్రాజ్ఞైర్యతిరాజాయ." (உ) "తత్రోదఞ్చతిమణ్టపేయతివరఃకక్ష్యాన్తరస్థేవసన్ పూర్వంరావణకంసముఖ్యదనుజాన్రామానుజాభ్యాంహతాన్।మత్వాశఙ్కరయాదవాదిముఖతోభూయోఽవతీర్ణఃపువం తద్భఙ్గాయకృతోదయస్తదుచితాంరామానుజాఖ్యాంవహన్." (ங) "వ్యాసోవాభగవాన్పరాశరమునిశ్శ్రీశౌనకోవాఽథవాసాక్షాన్నారదఏవవాశఠరిపుర్వాగీశ్వరోవాస్వయం । లోకేశఃపురుషోత్తమఃఫణిపతిశ్శేషీజగచ్ఛేషిణీత్యాఖ్యాతుంజగతాంహితాయసమభూద్రామానుజార్యోమునిః."

† இந்தப்பாஶுர அநேகம் ப்ரதிகளில் காணப்படுகிறது.

இத்தால், ஏவம்விதமாஹாத்ம்ய யுக்தரான இவருடைய வைபவமும், (க) "சரிதம்ரகுநாதஸ்ய ஶதகோடிப்ரவிஸ்தரம்" என்கிற சக்ரவர்த்தித்திருமகன் வைபவம்போலே அவாங்மநஸகோசரமிறே. ஸாகரத்தைக் கைந்நீச்சாலே கடந்து அக்கரையேறினாலும், உததியைச் சிறுங்கித்தாலும் உடையவர் வைபவம் அடையச் சொல்லப்போகாதிறே. யதாமதி யதாஶ்ருதமாகச் சொன்னதித்தனை. பஹுஶ்ருதராய்ப்புத்திபாஹுள்யமுடையபெரியோர்கள் விஶதமாகக் கண்டுகொள்ளக்கடவரிறே.

† இப்படி அவதாரவிஶேஷமான இவருக்கு (உ) "ஶரச்சதம்வ்யதீயாய ஸவிம்ஶமதிகம்ப்ரபோ:" என்கிறபடியே நூற்றிருபத்தஞ்சிலே நூற்றிருபது திருநக்ஷத்ரம் பூர்ணமாய்த்து.

"வையமன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்னும் படியான இவர், தம்முடைய அவதாரரஹஸ்யஜ்ஞாநத்தாலும், தம்முடைய விக்ரஹஸேவையாலும், தத்ப்ரதக்ஷிணநமஸ்காராதிகளாலும், சதுரக்ஷரியாய்ச் சதுரமான தம்முடைய திருநாமவைபவத்தாலும், ஸ்வதிவ்யமங்களவிக்ரஹத்யாநத்தாலும், ததேகநிஷ்டையாலும், தத்கைங்கர்யைகபரதையாலும், பாஷ்யாம்ருதப்ரதாநாதிகளாலும், மந்த்ரரத்ந ப்ரதாநாதிகளாலும், ததர்த்த ப்ரதிபாதநத்தாலும், ஸ்வபாதுகாப்ரதாநத்தாலும், ஸ்வபாததீர்த்தஸ்வீகாரத்தாலும், ஶேஷபாவநமான ப்ரஸாதஸ்வீகாரத்தாலும், பாதஸ்பர்ஶபவித்ரதையாலும், ஸஞ்சாரபூதமான பாதஸஞ்சரணத்தாலும், ஸ்வபாவநகரஸ்பர்ஶத்தாலும், அப்படியேயான கடாக்ஷவிஶேஷத்தாலும், பஞ்சஸம்ஸ்காராதிகளாலுண்டான ஸம்பந்தவிஶேஷத்தாலும், (ங) "புநந்திபுவநம்யஸ்ய பாதாஶ்ரிதபதாஶ்ரிதா: - கடாக்ஷாதிபிரேவாத்ர" என்ற ஸ்வகீயஸம்பந்தத்தாலும், (ச) "பாலமூகஜடாந்தாஶ்ச பங்கவோபதிராஸ்ததா - ஸதாசார்யேண ஸந்த்ருஷ்டா: ப்ராப்நுவந்திபராங்கதிம்" என்றும், (ரு) "ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வாமர்த்யமயீந்தநும் - மக்நாநுத்தரதேலோகாந் காருண்யாச்சாஸ்த்ரபாணிநா" என்றும், (சு) "அந்வயாதபிசைகஸ்ய ஸம்யங்ஸ்யஸ்தாத்மநோஹரௌ - ஸர்வஏவப்ரமுச்யேரந் நரா:பூர்வேபரேததா" என்றும், (எ) "பஶுர்மநுஷ்ய:பக்ஷீவா யேசவைஷ்ணவஸம்ஶ்ரயா: - தேநைவதேப்ரயாஸ்யந்திதத்விஷ்ணோ:பரமம்பதம்" என்றும் சொல்லுகிறபடியே ஏதேனுமா

(க) "చరితంరఘునాథస్యశతకోటిప్రవిస్తరం." (உ) "శరచ్ఛతంవ్యతీయాయసవింశమధికంప్రభోః." (ங) "పునన్తిభువనంయస్యపాదాశ్రితపదాశ్రితాః।కటాక్షాదిభిరేవాత్ర." (ச) "బాలమూకజడాన్ధాశ్చ పఙ్గవోబధిరాస్తథా।సదాచార్యేణసన్దృష్టాః ప్రాప్నువన్తిపరాఙ్గతిం." (ரு) "సాక్షాన్నారాయణోదేవః కృత్వామర్త్యమయీన్తనుం। మగ్నానుద్ధరతేలోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా." (சு) "అన్వయాదపిచైకస్యసమ్యఙ్స్యస్తాత్మనోహరౌ। సర్వఏవప్రముచ్యేరన్నరాఃపూర్వేపరేతథా." (எ) "పశుర్మనుష్యఃపక్షీవా యేచవైష్ణవసంశ్రయాః। తేనైవతేప్రయాస్యన్తితద్విష్ణోఃపరమమ్పదం."

† இத்தப்பாரா தொடங்கி ககூஅ-ஆம் பக்கத்து முதலில் வருகிற 'உடையவரும்' என்பது வரையிலுமுள்ள க்ரந்தங்கட்குப் பதிலாக, சில ப்ரதிகளில் 'ஒருநாள் உடையவர் திருவுள்ளத்தில் ஆர்த்தியோடே விசாரித்தருளி நம்பெருமாளைத் திருவடிதொழுது விண்ணப்பஞ்செய்தபடி:' என்று பாடங் காண்கிறது.

யுள்ளதொரு ஸ்வஸம்பந்தவிஶேஷத்தாலும்,ஜ்ஞாத்ரஜ்ஞாத்ருவிபாகமற ஜகத்தையெல்லாம் உஜ்ஜீவிப்பித்தும், இனிமேலும் ஸ்வஸம்பந்திகளாயுள்ளவர்களை "ஆரியர்காள் கூறும்"என்று நியமித்தும் இப்படி அவதாரகார்யம் தலைக்கட்டினவாறே;

அங்கே *அயர்வறும் அமரர்களோடேகூடி அடிமைசெய்யத் திருவுள்ளமாய்,—*சேணுயர்வானத்திருக்குந்தேவபிரானாய், *அயர்வறுமமரர்களதிபதியாய், "பாம்பணைமேலாற்கு—பலபலவேயாபரணம்"என்னும்படி*பன்மணிப் பூணாரத்தையு முடையனாய், "உடையார்ந்தவாடையன்" இத்யாதிப்படியே *நடையாவுடைத்திருநாரணனாய்,*அரவினணையம்மானாய்,*எழில்மலர்மாதருந்தானும் இன்பம்பயக்க இனிதுடன்வீற்றிருந்து அமர்ந்து *கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்குங் கேள்வனாய் *ஏழுலகுந்தனிக்கோல்செல்ல,இப்படி "ஒண்டொடியாள்திருமகளும் நீயும்" என்னும்படி ததேகபோகமாயுள்ள போகவிபூதியில் அம்மிதுநச்சேர்த்தியாயெழுந்தருளியிருக்கிற அவ்விருப்பிலே *தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றுஅமரர் ஆட்செய்ய, *கருளப்புட்கொடிச் சக்கரப்படை வானநாட வெங்கார்முகில்வண்ணனாய் * வைகுந்தங் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கு, '*சென்றால்*ஊரும்நிவாஸதாஸபேதங்கொண்டு*வழுவிலாஅடிமைசெய்யவேண்டும்' என்று அபிவ்ருத்தமநோரதத்தை யுடையராய், அதுசெய்யுமிடத்து '*முகப்பேகூவிப்பணிகொள்ளவேணும்; *செம்மாபாதபற்பைத் தலைசேர்க்கவேணும்; *ஈறில் இன்பத்திருவெள்ளத்திலே முழுகவேணும்; *தாமரைக்கண்களாலே குளிரநோக்கவேணும்' என்றுப்போலே சிலபரிமாற்றங்களை ஆசைப்பட்டு, "வானோர் சோதி மணிவண்ணா! மதுசூதா! நீ அருளாய் உன், தேனேமலருந் திருப்பாதஞ் சேருமாறு வினையேனே" என்றும், "இமையோர்கள்குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு, கழிவதோர் காத லுற்றார்க்கு முண்டோ கண்கள்துஞ்சுதலே" என்றும் சொல்லுகிறபடியே கண்ணழிவற்ற ப்ராப்யத்வரையையுடையராய், அத்தை * ஆராதகாதலையுடைய ஆழ்வார் அர்த்தித்தபடியே இவரும் அத்தைஅடியொற்றிக்கொண்டு,—(க) "ஸ்ரீமதிவைகுண்டேதிவ்யலோகே" என்று தொடங்கி (உ) "ஆத்மாநுரூபயாஶ்ரியாஸஹாஸீநம்" என்றும்,(ந) "ப்ரத்யக்ரோந்மீலிதஸரஸிஜஸத்ருஶநயநயுகளம்" என்றுதொடங்கி (ச)"தத்க்ஷணோந்மீலிதபுண்டரீகஸத்ருஶ சரணயுகளம்" என்னுமளவும் * இணைப்பாதங்களின் இடையிலுண்டானவற்றின் வடிவழகுகளையும்,அநந்தரம் அதிமநோஹர கிரீடமகுட நூபுராந்தமாக*முடிச்சோதி தொடங்கி*அடிச்சோதியளவும் சாத்தின திருவணிகலங்களின்அழகையும்,(ரு) "ஸ்ரீமத்யாவைஜயந்த்யாவநமாலயா விராஜிதம்" என்று கீழில்திருவாபரணஶோபைக்குப் ப்ரபைபோலவும் அதின் காந்திபூரம் நிறம்பெற வெள்ளமிட்டாற்போலவும் இருக்கிற *மங்கலநல்வன

---

(க) "శ్రీమతి వైకుణ్ఠే దివ్యలోకే." (உ) "ఆత్మానురూపయా శ్రియా సహాసీనం." (ந) "ప్రత్యగ్రోన్మీలిత సరసిజ సదృశ నయనయుగళం." (ச) "తత్క్షణోన్మీలిత పుణ్డరీక సదృశ చరణయుగళం." (ரு) "శ్రీమత్యా వైజయన్త్యా వనమాలయా విరాజితం."

மாலையையும், கீழில் ஆபரணத்தோபாதியாயிருக்கிற "அணியாராழியுஞ்சங்கமும்" என்னும்படியான ஶங்க சக்ர கதா அஸி ஶார்ங்காதிகளாயுள்ள *அமர் கொள் ஆழி சங்கு வாள் வில் தண்டாதி பல்படைகளையும், (க) "ஶ்ரீமதிவிஷ்வக்ஸேநே" என்று தொடங்கி (உ) "பகவத்பரிசர்யைகபோகைர்நித்யஸித்தைரநந்தைஃ" என்னுமளவும் * அமரர்கோன் அர்ச்சிக்கின்ற அங்ககப்பணிசெய்வர் விண்ணோர்களையும், அதற்குமேலே (ங) "திவ்யாமலகோமலாவலோகநேந விஶ்வமாஹ்லாதயந்தம்" என்று தொடங்கி * வானுடமருங்குளிர்விழிகளாலே குளிரநோக்கும்படியையும், *பன்னிலாமுத்தந்தவழ்கதிர்முறுவல்செய்து * சோதிவாய் திறந்து திவ்யலீலாலாபாம்ருதங்களாலே அகிலஜநங்களையும் ஆநந்திப்பித்துத் தளிர்ப்பிக்கும்படியையும், (ச) "பகவந்தம் நாராயணம் த்யாநயோகேந த்ருஷ்ட்வா" என்று ப்ராப்ய பக்தியோகரீதியாலே * பகற்கண்டேன் நாரணனைக்கண்டே னென்று காணும்படியையும், (ரு) "நித்யதாஸ்யஞ்சயதாவத்ஸ்திதம் அநுஸந்தாய" என்று "அடியே னடைந்தேன் முதல் முன்னமே" என்கிற ஸ்வாபாவிக ஸம்பந்தத்தை அநுஸந்திக்கும்படியையும், (சு) "கதாஉஹம்பகவந்தம்நாராயணம் ......ஸாக்ஷாத்கரவாணிசக்ஷுஷா" என்று "மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்கள் - காண்பது எஞ்ஞான்றுகொலோ" என்றும், "பைகொள்பாம்பேறியுறை பரனே! உன்னை, மெய்கொள்ளக் காணவிரும்பும் என்கண்களே" என்றும் சக்ஷுஸ்ஸுக்களாலே ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரம் பண்ணும்படியையும், (எ) "கதாவா பகவத்பாதாம்புஜத்வயம்ஶிரஸாஸங்க்ரஹீஷ்யாமி" என்று "திருவல்லவாழ் நகருள் நின்றபிரா, னடிநீறு அடியோங் கொண்டு சூடுவது - என்று கொலோ" என்றும், "உலகுபடைத்துண்ட வெந்தை அறைகழற்சுடர்ப்பூந் தாமரைசூடுதற்கு அவா" என்றும் சொல்லுகிறபடியே பாதாரவிந்தங்களை ஶிரோபூஷணமாகத் தரிக்கும்படியையும், (அ) "கதாஉஹம்பகவத்பாதாம்புஜத்வயபரிசர்யாஶயா" என்று தொடங்கி (கூ) "தத்பாதாம்புஜத்வயம்ப்ரவேக்ஷ்யாமி" என்னுமளவாகப் * பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள் முற்ற விடும்படியையும், * திருவடிக்கீழ்க் குற்றேவல்செய்யும்படியையும், (க0) "கதாமாம்பகவாந் அதிஶீதலயாஸ்வகீயயாத்ருஶாஉவலோக்ய" என்று தொடங்கி மேல் எல்லாவற்றாலும் * பக்கம்நோக்கறியாதே * அமலங்களாக விழிக்கும்படியையும், * முகப்பேகூவிப் பணிகொளும்படியையும் அநு

---

(க) "శ్రీమతివిష్వక్సేనే." (உ) "భగవత్ పరిచర్యైకభోగై ర్నిత్యసిద్ధై రనన్తైః." (ங) "దివ్యామలకోమలావలోకనేనవిశ్వమాహ్లాదయన్తం." (ச) "భగవన్తంనారాయణం ధ్యానయోగేనదృష్ట్వా." (ரு) "నిత్యదాస్యంచయథావత్ స్థితమనుసన్ధాయ." (சு) "కదాఽహంభగవన్తం నారాయణం...సాక్షాత్కరవాణి చక్షుషా." (எ) "కదావాభగవత్పాదామ్బుజద్వయం శిరసాసఙ్గ్రహీష్యామి." (அ) "కదాఽహంభగవత్పాదామ్బుజద్వయపరిచర్యాశయా." (கூ) "తత్పాదామ్బుజద్వయం ప్రవేక్ష్యామి." (க0) "కదామాంభగవానతిశీతలయా స్వకీయయాదృశాఽవలోక్య."

ஸந்தித்துத் *திருவடிக்கீழ்க் குற்றேவல்செய்யப் பெரியகாதலை யுடையராய், அத்தாலே "அடியே னடைந்தேன்" என்னும்படி மாநஸமாகக்கிட்டி,— (க) "தூராதேவ" என்றுதொடங்கி அப்பேரோலக்கத்தைத் தூரக்கண்டு ஸேவிக்கும்படியையும், *அணைவதரவணைமேற் பூம்பாவை யாகம்புணருமவனை * இமையோர்கள் குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாலேகாணும்படியையும், "உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம், பெற்றேன் ஈதே இன்னம்வேண்டுவது எந்தாய்" என்று மீளவும் பஹுமனோரதங்களைப் பண்ணுகின்றுகொண்டு *வாசலில் வானவர் அநுமதியுடனே உள்ளேபுகும்படியையும் மனோரதித்து, "அடைந்தேன் உன்திருவடியே" என்று அவனைக்கிட்டி, (உ) "நாராயணாயநமஃ" என்று * வழுவிலாவடிமையை அர்த்தித்துத் தத்ஸித்திக்கு "அடியேனுடையாவி யடைக்கலமே" என்று ஆத்மாவை நிவேதிக்க, அவனும் குளிர்விழிகளாலே கரையழியும்படி கடாக்ஷிக்க, '*எது எது என்பணி?' என்னாது எல்லாவடிமைகளுஞ் செய்ய ஒருப்பட்டு, "கைகளா லாரத்தொழுது தொழுது," "இரங்கிநீர்தொழுது" என்னும்படி ப்ரஹ்வாஞ்ஜலிபுடராய் அநுபவியாநின்றுகொண்டு,— அத்யந்தம் ப்ரீதியுக்தனாய் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே * கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணுடன் நிற்கும்படியையும், (ங) "ததோபகவதா" என்று தொடங்கி (ச) "அம்ருதஸாகராந்தர்நிமக்நஸர்வாவயவஸ்ஸுகமாஸீத" என்று மீளவும்*தாமரைக்கண்களாலே அவலோகநதாநம்பண்ணும்படியையும் அபேக்ஷித்து,'*சோதிச்செவ்வாய்முகிளம் அவலோகியா அலராதிருந்தது: இப்போது ஸவிலாஸஸ்மிதத்தாலே அலர்ந்து (ரு) "ஆநயைநம்" என்று ஆளிட்டழையாதே தானே வாவென்று அழைத்து, "துயரறுசுடரடி" என்றும் "பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும்சொல்லும்படியான*கமலமன்னகுரைகழல்களை"தலைசேர்த்து", "தன்தாளிணைக்கீழ்ச் சேர்த்து"என்னும்படியே பாதோபதாநம்போலே சேர்த்தருளவேணும்; *மாயன்கோலமலரடிக்கீழ்ச் சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளமான அமுதவெள்ளத்து* இன்பத்திருவெள்ளத்திலே "சூழ்ந்ததனிற் பெரிய என்அவா" என்னும்படி அவகாஹித்து,இங்கே ஶோகாபிகர்ஶிதமான காத்ரங்களாலே தாபத்ரயங்கள்போலன்றிக்கே,அங்கே நிரதிஶயஸுகத்தை அநுபவிக்கவேணும்' என்று ஸ்ரீவைகுண்டகத்யத்திலே அர்த்தியாநின்றுகொண்டு; பரமபக்திதலையெடுத்துப் பெரியஅபிநிவேஶத்துடனேபெரியபெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளிப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு பெரியகத்யமான ஶரணாகதிகத்யத்தைப் பெரிய ஆற்றாமையோடே திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பஞ்செய்து ஶரணம்புக்கு; அநந்தரம் ஸ்ரீரங்ககத்யத்தையும் விண்ணப்பஞ்செய்து அத்தலையிலுண்டான ஸர்வஶக்தித்வாதி கல்யாணகுணங்களையும் தம்முடைய அஜ்ஞாநாஶக்தி முதலான அஸத்குணங்களையும் ஆவிஷ்கரித்து, ஆகிஞ்சந்யத்தையும் அறிவியாநின்றுகொண்டு ஶரணம்புக்கு அத்யார்த்தராய் நிற்க, பெரியபெருமாளும் இவரபிப்ராயமறிந்து 'உமக்கு வேண்டுவதென்?' என்று வினவியருள,

---

(க) "దూరాదేవ." (உ) "నారాయణాయనమః." (ங) "తతో భగవతా." (ச) "అమృతసాగరాన్తర్నిమగ్నసర్వావయవస్సుఖమాసీత." (ரு) "ఆనయైనం."

உடையவரும் 'ஸம்ஸாரத்தில் அருசிபிறந்து வயஃபரிணும் காலாதிக்ரமணம் பிறந்தது' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'காலத்துக்கு நாமன்றோ கடவோம்? இன்னம் சிறிது காலம் உம்மைக்கொண்டு இவ்வுலகந் திருத்தப் பார்த்தோம்; அறப் பதறினீரே!' என்று திருவுள்ளம் உடைகுலைப்பட்டு 'இனி உமக்குச் செய்யவேண்டுவது என்?' என்று கேட்டருள, அதுக்கு உடையவரும் 'அடியேனைக் * காலக்கழிவுசெய்யாமல் * உன் பொன்னடிசேர்த்து ஒல்லை வேறேபோக எஞ்ஞான்றும் விடாதொழியவேணும்' என்ன, பெரியபெருமாளும் உகந்து (க) "சதுர்த்தஶேஉஹ்நிஸம்பூர்ணே" என்று * நாட்கடலாகத் தம்பிக்கு இட்டதாகாமல் (உ) "ஸப்தாஹம் ஜீவிதாவதி" என்கிறபடியே (ஙு) "கர்மபாஶப்ரக்ரதிதஃ" என்ற இவர்க்கு 'இற்றைக்கு ஏழாநாள் அப்படியே செய்கிறோம்' என்ன, உடையவரும் '*நம்முடைய வாழ்வு வாய்க்கின்றவா!' என்று ஹர்ஷப்ரகர்ஷத்துடன் 'என்னுடைய ஸம்பந்தஸம்பந்திகளெல்லாரும் நான்பெற்ற லோகம் பெறவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியே பெறக்கடவர்கள்' என்று திருவாய்மலர்ந்தருளி, உடையவர்க்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் *பூவார்கழல் ப்ரஸாதம் ப்ரஸாதித்தருளி விடைகொடுத்தருள, இவரும் 'மஹாப்ரஸாதம்!' என்று ஸார்வபௌமரான ராஜாக்கள் பக்கல்நின்றும் நாடுபெற்றவர்கள் பெரியப்ரீதியோடே ராஜபவநத்தில்நின்றும் புறப்படுமாபோலே * பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற எம்பெருமான் செங்கோலுடையதிருவரங்கச்செல்வனரான ஸ்ரீரங்கராஜர்பக்கல்நின்றும் திருநாடாகிற மஹாராஜ்யத்தைப் பெற்று அந்தராஜகுலமாஹாத்ம்யத்தாலேவந்த ப்ரீத்யுத்த்ருதி தோன்ற ஸ்ரீரங்கராஜதாமியிலும் புறப்பட்டு மடமேயெழுந்தருளி அனைத்துக்கொத்திலுண்டானவர்களையும் சித்தமகிழ்ச்சியுடன் அனுப்பியருளி, ஶிஷ்யவர்க்கங்களாயுள்ளவரெல்லார்க்கும் ஒருகாலும் அருளிச்செய்யாத அர்த்தவிஶேஷங்களையெல்லாம் மூன்றுநாளாக ப்ரஸாதித்தருளி 'இவ்வர்த்தங்களையெல்லாம் நீங்களும் விஶ்வஸித்து உங்களைப்பற்றினார்க்கும் பரம்பரையாய் உபதேஶித்துப் போருங்கோள்' என்று அருளிச்செய்ய, முதலிகளெல்லாரும் அதிஶங்கைபண்ணி 'இது என்?' என்று விண்ணப்பஞ்செய்ய, 'இனி ஒளிக்கவொண்ணாது' என்று திருவுள்ளம்பற்றி 'இற்றைக்கு நாலாநாள் பெரியபெருமாள்திருவடிகள் ஏறப்போக நினையாநின்றோம்' என்று அருளிச்செய்தருள, இத்தைக்கேட்டு முதலிகளெல்லாரும் கடல்கலங்கினாப்போலே கலங்கி 'உடையவர்வியோகத்திலே ஆத்மத்யாகம் பண்ணக்கடவோம்' என்று தேறியிருந்தமையைத் திருவுள்ளம்பற்றியருளி, உடையவரும் 'வாரீர்கோள் முதலிகாள்! நம்முடைய வியோகத்தில் ஆத்மத்யாகம்பண்ணினருண்டாகில், பெரியநம்பி ஆளவந்தார் ஸ்ரீபாதமே!நம்மோடு அவர்களுக்கு ஸம்பந்தமில்லையாய் நித்யஸூரிகளோலக்கத்திலும் புகுரப்பெறாதே, நம்சடகோபர்திருவுள்ளத்தையும் மறுத்தவர்க

(க) "చతుర్దశేఽహ్ని సంపూర్ణే." (உ) "సప్తాహం జీవితావధిః." (ஙு) "కర్మపాశప్రగ్రథితః."

ளாய் அநுபதிக்கக்கடவீர்கள்' என்று †அருளிச்செய்து அவர்களைத்தேற்றித் தரிக்கப்பண்ணினார்.

அநந்தரம் (க) "அத்யைவாஹங்கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாங்கதிம்" என்கிறபடி தாமும் ஆழ்வான்வழியே பின்சென்று (உ) "இத்தம்ப்ராப்தே ஸபதிபரமவ்யோமபிஷ்டாக்ரகண்யேகூராதீஶேநிகமஶிகரவ்யாக்ரியாலம்படத்வம்-ஶிஷ்யஸ்தோமாந்ஶ்ருதிகுருமுகேரங்கிகார்யேணஸாகம்விந்யஸ்யோச்சை பரமகமதாரோடுமைச்சத்யதீந்த்ர:", (ங) "காஸாராதிமதிவ்யஸூரிக்ருதிஸத்ஸோபாநபத்தாந்வய ஸ்ரீமந்த்ரோபயபார்ஶ்வதண்டகடிதாம் ஸ்ரீபாஷ்யகீல ஸ்திராம் - நிஶ்ரேணிம்நிகிலோஜநஶ்சபரமவ்யோமஸ்தலீப்ராபிகாம் ஸ்வஸ்வாசார்யநிரூபிதார்த்தவஶதப்ராப்யாதிரோஹேத்ஸதா",(ச) "இத்யாஶாஸ்யஸரஸ்ஸடாந்தகமுகஸ்ரீதிவ்யஸூர்யாக்ருதீ ராசார்யஸ்யசதத்ப்ரபந்தநிவஹைஸ்ஸார்த்தம்ப்ரதிஷ்டாப்யச-ஸ்ரீரங்காதிமதாமஸுஸ்வயமபூச்ச்ரீதிவ்யஸூரிவ்ரஜைஸ் ஸாகந்தத்பரமம்பதம்ஜிஹமிஷுஸ்ஸ்ரீமாந்ஸராமாநுஜ:" என்கிறபடியே இங்குச்செய்யவேண்டுங் கார்யங்களெல்லாஞ் செய்து தலைக்கட்டி க்ருதக்ருத்யராய் நாலாநாள் அங்கே திருநாடேறவெழுந்தருளத் திருவுள்ளமாயிருக்க,

அவ்வளவிலே பெரியபெருமாளைத் திருவாராதநம்பண்ணிப்போரும் ஸ்ரீரங்கராஜபட்டர் பெரியபெருமாள்பட்டர் முதலானார் பெரியபெருமாள் *உடுத்துக்களைந்த பீதகவாடை *சூடிக்களைந்த திவ்யமால்யப்படி சாத்துப்படிகள் அவர்ப்ரஸாதம் தொடக்கமான ப்ரஸாதவிஶேஷங்களையும் போரத் தளிகையிலே எடுப்பித்துக்கொண்டு ஸர்வவாத்யகோஷத்துடன் கொண்டுவந்து ப்ரஸாதித்தவற்றை பிரஸாதரித்துஸேவித்து ஸ்வீகரித்தஅநந்தரம் அவர்களுக்கு உகப்பான பாஞ்சராத்ரஸம்ஹிதைகளில் ஜ்ஞாநகாண்டங்களை அநுஸந்தித்து ஸேவித்துக்கொண்டிருந்து ஏவம்விதமானதூர்யகோஷத்தைக் கேட்டு ஹ்ருஷ்டராய் வைகுண்டநிர்யாணநிரதராய், அதுக்குப்ரயாணபாதேயமானத்வயத்தை ஆவ்ருத்திபண்ணுகிற்கிறவர் தடஸ்தரைக்கடாக்ஷித்தருளித் தாம்ரஸ்தமானகூடஸ்தஸ்ரீஸூக்தியையும் ஸ்ரீபாஷ்யத்தையும் க்ஷேமமானநிக்ஷேபமாக

(க) "అద్యైవాహఙ్గమిష్యామి లక్ష్మణేనగతాఙ్గతిం." (உ) "ఇత్థంప్రాప్తే సపది పరమవ్యోమ శిష్టాగ్రగణ్యే కూరాధీశే నిగమశిఖరవ్యాక్రియాలమ్పటత్వం । శిష్యస్తోమాన్శ్రుతిగురుముఖే రఙ్గికార్యేణ సాకం విన్యస్యోచ్చైః పరమఖమథారోఢుమైచ్ఛద్యతీన్ద్రః." (ங) "కాసారాదిమదివ్యసూరికృతిసత్సోపానబద్ధాన్వయ శ్రీమన్త్రోభయపార్శ్వదణ్డఘటితాం శ్రీభాష్యకీలస్థిరాం । నిశ్రేణింనిఖిలోజనశ్చ పరమవ్యోమస్థలీప్రాపికాం స్వస్వాచార్యనిరూపితార్థవశతః ప్రాప్యాధిరోహేత్సదా." (ச) "ఇత్యాశాస్యసరశ్శఠాన్తకముఖ శ్రీదివ్యసూర్యాకృతీ రాచార్యస్య చ తత్ప్రబన్ధనివహైస్సార్థం ప్రతిష్ఠాప్య చ। శ్రీరఙ్గాదిమధామసుస్వయమభూచ్ఛ్రీదివ్యసూరివ్రజైస్సాకం తత్పరమమ్పదఞ్జిగమిషుశ్శ్రీమాన్సరామానుజః".

† இவ்விடந்தொடங்கி 'அநந்தரம் ஸமூஹத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்னையும்' என்று வருகிற வரையிலுமுள்ள க்ரந்தங்கட்குப் பதிலாக 'அருளிச்செய்ய, பின்னையும் அவர்கள் போரவிஷண்ணராய் 'இனி அடியோங்களுக்குச் செய்ய அடுப்பதென்?' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் 'பட்டினி புகுதல், பட்டினிவிடுதல்செய்யு மத்தனையோ!' என்று சில ப்ரதிகளின் பாடம்.

ஸ்தாபிக்கும்படி ஆஜ்ஞாபித்து,ஸ்ரீபாஷ்யத்தை வர்த்தித்து நடத்திக்கொண்டு போரும்படி நடாதூராழ்வானைக் கடாக்ஷித்து, அவர்க்கு (க) "ஸத்குர்வதா ஸம்ஸதிஶிஷ்யவர்க்கா நநந்யலப்யைரதிகைஶ்சசிஹ்நை: - ஸ்ரீபாஷ்யஸிம்ஹா ஸநமாத்மகீயம் யஸ்மைசதத்தம்யதிஶேகரேண" என்னும்படி ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸநத்தை ப்ரஸாதித்து, அநந்தரம் முந்தறப்ரஸாதித்த வேதாந்தா சார்யபதத்திற்குமேல் (உ) "கிந்துப்ரபத்திபலதாரிதவிஷ்ணுமாய மத்வம்ஶ்ய ராஜகுல" என்னும்படியான ராஜகுலமாஹாத்ம்யத்தை யுடையராகையாலே ப்ரபத்யர்த்தப்ரதிபாதகமாய் ப்ரமாணசரமமானஸ்ரீஸூக்திஸிம்ஹாஸநத்தை யும் அந்தப்பெரியபரிஷத்திலே பெரியபட்டர்க்கு இட்டருளி, கந்தாடை யாண்டானைக் கடாக்ஷித்து ப்ரமாத்ருசரமமான தம்முடைய சரமவிக்ரஹ கைங்கர்யத்தைக் கல்பித்தருளி, திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலான முதலிகளைப் பார்த்து 'பட்டர்க்கு இஷ்டமாயிருங்கோள்' என்று அருளிச் செய்து, கோயிலனைத்துக்கொத்தையும் அழைப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு வேண்டிக்கொள்ள,அவர்களும் 'தேவரீருக்கு ஒருஅபராத முண்டோ? * உலகங்கட்கெல்லாம் ஒருயிரான தேவரீரை இழந்து எங்ஙனே தரிப்போம்?' என்று * கண்பனிசோரநிற்க, உடையவரும் '* அன்பொடு தென்திசைநோக்கிப்பள்ளிகொள்ளும் அணியரங்கனிருக்க, உங்களுக்கு ஒரு தாழ்வில்லை ; பெரியபெருமாள் ஸ்ரீகார்யம் ஆராயுமிடத்துப் பட்டரை முன் னிட்டு ஆராய்ந்துபோருங்கோள்; நம்பெருமாள் கைங்கர்யத்தைக் குறைவற நடத்திக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையும் வரவணைத்துக்கொண்டு போருங் கோள்' என்று கல்பித்தருளி, அவாகளைப் பட்டர்திருக்கையிலே காட்டிக்கொ டுத்தருளி, பட்டரைப்பார்த்தருளி 'உமக்குத் * தந்தையும்தாயுமாவாராய் ப்ர மேயசரமமான பெரியபெருமாள் திருவாராதநத்தைப் பெருக்கநடத்திக்கொ ண்டு, நம்முடையதர்ஶநத்தையும் நன்றாய்ப்பராமர்ஶித்து நடத்திக்கொண்டு போரும்' என்று நியமித்தருளினார்.

அநந்தரம் ஸமூஹத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்னையும் அவர்களுக்கு அருளிச்செய்தபடி:—'ஒருவன் ப்ரபந்நனானால் அவனுடைய ஆத்மயாத்ரை ஈஶ்வராதீந மாகையாலே அதுக்குக் கரைய வேண்டா; கரைந்தானாகில் ஆத்மஸமர்ப்பணம் பொய்யாமித்தனை. இனி இவ னுடைய தேஹயாத்ரை கர்மாதீநமாகையாலே அதுக்குக் கரையவேண்டா; கரைந்தானாகில், நாஸ்திகனாமித்தனை. ஆகையாலே, உபயயாத்ரையிலும் இவ னுக்கு அந்வயமில்லை' என்று அருளிச்செய்ய, முதலிகளும் 'ஆகில், எங்களு க்கு இருக்கும் நாளைக்குக் காலக்ஷேபமிருக்கும்படி எங்ஙனே?'என்ன,உடை யவரும் 'உபாயாம்ஶத்தில் அந்வயியாதே ப்ராப்யமான பகவத்பாகவதகைங் கர்யத்திலே அந்வயியுங்கோள். ப்ரபந்நாதிகாரிக்கு முன்னடிபார்த்து வர்த் திக்கவேண்டுவன-மூன்றுவிஷயமுண்டு; அவையாவன—அநுகூலரென்றும்,

(க) "సత్కుర్వతాం సంసది శిష్యవర్గా ననన్యలభ్యైరధికైశ్చ చిహ్నైః। శ్రీభాష్యసింహాసన మాత్మకీయం యస్మై చ దత్తం యతిశేఖరేణ." (உ) "కిన్తు ప్రపత్తిబలతారితవిష్ణుమాయమద్వంశ్య రాజకుల."

ப்ரதிகூலரென்றும், அநுபய ரென்றும்; அநுகூலராவார் - ஸ்ரீவைஷ்ணவர்கள்; ப்ரதிகூலராவார்-பகவத்த்வேஷிகள் ; அநுபயராவார் - ஸம்ஸாரிகள். இதில், அநுகூலரைக் கண்டால் சந்தந குஸுமம தாம்பூலாதிகளைக் கண்டாற் போலவும், நிலாத்தென்றல்களைக் கண்டாற்போலவும், அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலவும் உகந்துபோரக்கடவன்; ப்ரதிகூலரைக்கண்டால் ஸர்ப் பாக்நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திக்கக் கடவன்; அநுபயரைக் கண்டால் காஷ்ட லோஷ்டாதிகளைக் கண்டாற்போலே த்ருணீகரித்து வர்த் திக்கக்கடவன். அவர்கள் அநுகூலித்தார்களாகில் ஆத்மஜ்ஞாநத்தை உபதே பிக்கவும்; அநுகூலியார்களாகில் ஐயோ! என்று க்ருபைபண்ணிப்போரவும். இப்படி செய்யவொட்டாதொழிகிறது, அர்த்தகாமப்ராவண்யம். அர்த்தகாம மடியாக ஸ்ரீவைஷ்ணவர்களை அநாதரிக்குமாகில், ஸார்வபௌமனுடைய ராஜ புத்ரனை ராஜஸந்நிதியிலே பரிபவித்தால் ராஜா வெறுத்திருக்குமாபோலே எம்பெருமான் திருவுள்ளம் வெறுக்கும். அர்த்தகாமமடியாக ப்ரதிகூலரை ஆதரிக்குமாகில், ஸார்வபௌமனுடைய ராஜாவின் மஹிஷீ க்ஷுத்ரஜந்துக்கள் பக்கல் மடிப்பிச்சைபுக்கால் ராஜாவுக்கு அவத்யமாகையாலே ராஜா வெறுக்கு மாபோலே எம்பெருமான் இவனை வெறுத்திருக்கும்; அர்த்தகாமமடியாக அநுபயரை ஆதரிக்குமாகில், ரத்நத்திற்கும் பலகறைக்கும் வாசியறியாதாப் போலே பிறந்தஜ்ஞாநம் கார்யகரமாய்த்தில்லையென்று எம்பெருமான் இவனை அநாதரிக்கும்' என்று அருளிச்செய்தருளினார்.

பின்பு எம்பெருமானார் நம்பெருமாள்ஸந்நிதிக்குப் பட்டரைக்கூட்டிக் கொண்டெழுந்தருளிப் பெருமாளை ஸேவித்து, பட்டருக்கு முன்னாகத் தீர்த்த ப்ரஸாதங்களை ப்ரஸாதிப்பித்து, பின்பு தாமும் தீர்த்தப்ரஸாதம் பெற்று, முதலிகளைக்குறித்து 'முன்னுக்குத் தர்ஶநப்ரவர்த்தகராவார் இவர்' என்று பட்டரைக் காட்டியருளி, 'வாரீர் பட்டரே!மேல்நாட்டிலே வேதாந்தி யென்று ஒரு பெரியவித்வான் இருக்கிறானென்று கேட்டோம்: நீர் அங்கேறப்போய் அவனை நம்தர்ஶநப்ரவர்த்தகனாம்படி திருத்தும்'என்றுஅருளிச்செய்து,பட்ட ரையுங் கூட்டிக்கொண்டு மடமேயெழுந்தருளி, ஸ்ரீபாதத்துமுதலிகளெல்லா ரையும்அழைத்து'நம்முடையவிஶ்லேஷத்தில் அவிவேகம்பண்ணினீர்களாகில் நம்மாணை'என்று ஆஜ்ஞாபித்து,எல்லார்கையாலும்தம்திருவடிகளைத்தொடுவித் துச்சூளுறவுகொண்டு,முதலிகளைத் தீர்த்தங்கொண்டுஅமுதுசெய்யப்பண்ணி, பிள்ளைப்பிள்ளையாழ்வான் உக்கலாழ்வான் கோமடத்தாழ்வான் சேட்டலூர்ச் சிறியாழ்வான் வேதாந்தியாழ்வான்முதலானவர்களைக் கந்தாடையாண்டான் திருக்கையிலேகாட்டிக்கொடுத்தருளியும்,எச்சான் அநந்தாழ்வான் தொண்ட னூர்நம்பி மருதூர்நம்பி முதலானவர்களை அருளாளப்பெருமாளெம்பெருமா னார்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், பட்டர் கணியனூர்ச்சிறியாச் சான் சட்டம்பள்ளிச்சீயர் பெரியாண்டான் சிறியாண்டான் முதலானவர்களை எம்பார்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், கிடாம்பியாச்சான் கிடாம் பிப்பெருமாள் எங்களாழ்வான் நடாதூராழ்வான் முதலானவர்களைத் திருக் குருகைப்பிரான்பிள்ளான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், மாரு திப்பெரியாண்டான் மாறொன்றில்லாமாருதிச்சிறியாண்டான் அரணபுரத்தாழ்

வான் ஆசூரிப்பெருமாள் முனிப்பெருமாள் அம்மங்கிப்பெருமாள் முதலான வர்களை நடுவிலாழ்வான்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், இன்னும் இருந்தவர்களை இருந்தவர்கள்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்;

பின்பு பட்டரைப் பார்த்தருளி 'கூரத்திலாழ்வானையும் கந்தாடை ஆண்டானையும்போலே, கூரகுலதிலகரான நீரும் வாதூலகுலதிலகரான கந்தாடையாண்டானும் நம்மடியாகவுண்டான ஸௌப்ராத்ரத்தையுடையராய், (க)"மச்சித்தாமத்கதப்ராணாஃ போதயந்தஃபரஸ்பரம்" என்னும்படியா யிருங்கோள்' என்று அருளிச்செய்து, ஸ்ரீவைஷ்ணவர்களைப்பார்த்து '(உ) "படித்வாபாஷ்யந் தத்ப்ரவசநமஸக்தௌஸடரிபோர்கிரிஸ்ரத்தாவாஸஃப்ரபுபரிசிதஸ்தாநநிவஹே-ப்ரபோஃகைங்கர்யம்வாப்ரபதநமனோரர்த்தமநநம் ப்ரபந்நாநாம்வா மேபவதுபரிசர்யாபரிசயஃ - குடீங்க்ருத்வா தஸ்மிந்யதுகிரிதடே நித்யவஸதிஷ் ஷடர்த்தாஸ்ஸ்ரீஸஸ்யப்ரபதநவிதௌஸாதகதமாஃ" என்று இருக்கும்நாள்பண்ணலாங்கைங்கர்யம் ஆறு உண்டு; அவையாவன - ஸ்ரீபாஷ்யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருகை; அதற்கு யோக்யதை யில்லாவிடில், அருளிச்செயலை ஓதியும் ஓதுவித்தும் போருகை; அதற்கும் யோக்யதை யில்லாவிடில், உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி சாத்துப்படி முதலானவற்றை யுண்டாக்கி நடத்திக்கொண்டுபோருகை; அதற்கும் யோக்யதையில்லையாகில், †திருநாராயணபுரத்திலே ஒருகுடில்கட்டிக்கொண்டிருக்கை; அதற்கும் யோக்யதையில்லையாகில், த்வயத்தைஅர்த்தாநுஸந்தாநம் பண்ணிப்போருகை; அதற்கும் யோக்யதை யில்லையாகில், என்னுடையவனென்று அபிமாநிப்பான் யாவ னொரு பரமபாகவதன், அவனுடையஅபிமாநத்திலே ஒதுங்கிப்போருகை' என்றும்; இவற்றின் ப்ரிய ப்ரியதர ப்ரியதமங்கள் இன்னதென்றும், 'ப்ராப்திப்ரதிபந்தகமான பகவத் பாகவத ஆசார்யவிஷயங்களில் அபசாரத்தை வருந்தியும் பரிஹரித்துப் போருங்கோள்' என்றும் இவை முதலானவைகளாயுள்ள அநேகஹிதங்களை ப்ரஸாதித்து அவற்றை உபஸம்ஹரித்தருளினார்.

‡ "அநந்தரம் ஸகலமங்களவாத்யங்களும் ஆரவாரிக்க, அநேகதிவ்ய ப்ரபந்தாநுஸந்தாநத்வநி எங்கும் பூரிதமாக, அலங்காரத்திருமஞ்ஜநங் கண்ட

---

(క) "మచ్చిత్తామద్గతప్రాణాః బోధయన్తః పరస్పరం." (౨) "పఠిత్వాభాష్యంతత్ ప్రవచనమశక్తౌశఠరిపోర్గిరిశ్రద్ధావాసఃప్రభుపరిచితస్థాననివహే । ప్రభోఃకైఙ్కర్యంవాప్రపదనమనోరర్థమననం ప్రపన్నానాంవామేభవతుపరిచర్యాపరిచయః॥ కుటీంకృత్వాతస్మిన్ యదుగిరితటేనిత్యవసతి షడర్థాశ్శ్రీశస్యప్రపదనవిధౌసాధకతమాః."

†'ஶ்லோகத்தில் ஆறுவதாகச் சொல்லியிருக்கிற விஷயத்தை இங்கே நான்காவதாகச்சொல்லியிருப்பது-"பாடக்ரமாபேக்ஷயா அர்த்தக்ரமஸ்ய பலீயஸ்த்வம்[-பதங்களிருக்கின்றமுறைமையைவிட அர்த்தங்கொள்ளும்முறை சிறந்தது]" என்ற நியாயம்பற்றி; திவ்யதேஶங்களில்கைங்கர்யஞ்செய்யவலிமையில்லாதவனுக்கு அதில்ஒரிடத்தில் நித்யவாஸஞ்செய்கையை விதிப்பதே முறைமையாமாதலால்' என்று பெரியோர் கூறுவர்.

‡ இந்தப்பாராவுள்ளஇடத்தில் சிலப்ரதிகளில் 'கோயிலுக்குநேரே எம்பார்மடியிலே திருமுடியும் வடுகநம்பிதிருமடியிலே திருவடிகளுமாகக் கண்வளர்ந்தருளி, ஸ்ரீபாதத்துமுதலிகள் ப்ருஹ்மவல்லி ப்ருகுவல்லி சூழ்விசும்பணிமுகில் முதலானவற்றை ஸேவித்தருள, ஸ்ரீகபாலம் பேதித்து ப்ருஹ்மரந்த்ரத்தாலே உடையவர் திருநாட்டுக்கு எழுந்தருள,' என்று பாடம்.

ருளித் திருவொற்றுடை சாத்தித் திருப்பரியட்டஞ்சாத்தி, ஸாத்தாசமநபூர்வகமாக நித்யாநுஷ்டாநங்கள் நடத்தியருளுகையில் அஸக்திபாராமல் அர்க்யத்தையும் உத்திஷ்டமாநராய்நின்றே செய்தருளித் தச்சேஷத்தையுந் தலைக் கட்டியருளி, திருத்வாதஸநாமங்களையுந் தரித்தருளி, திருமணிவடம் திருப்பவித்ரம் திருமாலைப்ரஸாதம் பரியட்டப்ரஸாதங்கள் முதலானவற்றையுஞ் சாத்தியருளி, தீர்த்தங்களும் ஸ்வீகரித்து, குருபரம்பராபூர்வகமாக ரஹஸ்யத்ரயத்தையும் ஸார்த்தமாகஅநுஸந்தித்து,பெரியபெருமாள்திருவடிகளை உத்தேஸித்துத் தண்டன்ஸமர்ப்பித்து, முதலிகளையும்அநுவர்த்தித்து அநுமதிகொண்டு ஆளவந்தார்திவ்யமங்களவிக்ரஹத்தை த்யாநித்துக்கொண்டு பத்மாஸநஸ்தராய் எழுந்தருளியிருந்து பரவாஸுதேவரிடத்திலே பரமபக்திநடந்து செல்ல, அநந்தரம் யோகத்தில்பரமயோகியான தம்மைப் பரமயோகிகம்யவிஷயமான தத்விஷயத்திலே விநியோகித்து, பின்பு (க)"பத்மநேத்ரேந்யமீலயத்" என்கிறபடியே திருக்கண்களைச் செம்பிளித்தருளிப்பரவஸ்ராத்ரராய், எம்பார் திருமடியிலே திருமுடியும் வடுகநம்பிதிருமடியிலே திருவடிகளுமாகக் கண்வளர்ந்தருளி, (உ) "மாகஸுத்ததஸம்யாந்து மத்யாஹ்நேமந்தவாஸரே - யோகிராஜஸ்ஸ்வபோகீஸபாவம்ஸ்வேபேஸமப்யகாத்" என்னும்படியான திவஸத்திலே தம்முடைய பூர்வாவதாரமான * ஆயிரஞ்சுடர்வாய் அரவணையோடே நம்பிமூத்தபிரானைப்போலேஎம்பெருமானாரான இவரும் கூடியருளினார். இவ்வ்ருத்தாந்தத்தைப் பின்னும்:—"பின்பு மன்பருடன்களித்த சீர்பெரும்பூதூரெதிராசன், இன்ப முடனு மிசைந்தொருநூற் றிருப தாண்டிங் கிருந்ததற்பின், அன்பா ழ்வா ஞண்டானற் குமரர்க்கடியாமுடிபுனைந்து, மன்பதையைவாழ்வித்தாங் கமருமெனவாழ்வித்தருளா," "ஆராமஞ்சூழரங்கர்தமை யலர்மாமகளையடியிறைஞ்சித், தாரீர்சரணந்தனையென்னத் தந்தோமெனவுமெதிராசன், பாரோர்பரவும்பாகவதர் பிரிவால் பரிவில்படர்கூரச், சீரார்திருநாடடைந்திருந்த சீடனுடனேசேர்ந்தனனால்." இப்படிசொல்லப்படுமதான வைபவத்தையுடைய இவரும் (௩) "யதாபாதோதரஸ் த்வசா நிர்முக்த:" என்றும், (௪) "யாவஜ்ஜிஹ்மிகாத்ராணிஜீர்ணாந் த்வசமிவோரக:" என்றும் சொல்லுகிறபடியே (௫) "ஜீர்ணமிவவஸ்த்ரம்ஸுகேநேமாம்ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்று ஸுகமாகவே திருமேனியை உபேக்ஷயோடே விட,

அநந்தரம் கந்தாடையாண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானார் எம்பார் வடுகநம்பி முதலான முதலிகளெல்லாரும் கோஷித்துக்கொண்டு வேரற்றமரம்போலே விழுந்து கிடந்து துடித்து,திருமிடறுதழுதழுப்பத் திருமூக்குவெப்படிக்க அவஸராய்க் கிடந்து *இட்டகால் இட்டகைகளாய்ச்*சிந்தித்துத் திகைத்து, * இணைமலர்க்கண்ணீர் ததும்பத் தாராவர்ஷமாகத் திருமுத்துதிர்த்து ப்ரலாபித்து, 'இவர் அவதாரத்தில் "தீர் லப்தா" என்றும், இவர்

(க) "పద్మనేత్రేన్యమీలయత్." (உ) "మాఘశుద్ధదశమ్యాస్తుమధ్యాహ్నేమన్దవాసరే। యోగిరాజస్స్వభోగీశభావంస్వేభేసమభ్యగాత్." (௩) "యథాపాదోదరస్త్వచానిర్ముక్తః." (௪) "యావజ్జిహ్మిగాత్రాణి జీర్ణా స్త్వచమివోరగః." (௫) "జీర్ణమివవస్త్రం సుఖేనేమాం ప్రకృతిం స్థూలసూక్ష్మరూపాంవిసృజ్య."

அந்திமதசையில் 'தர்மோ நஷ்ட:' என்றும் இப்படி வருவதே!'என்று ஆஶ்சர்யப்பட்டு விஷண்ணராயிருக்க, அவ்வளவிலே பெருமாளும் 'நம்உடையவரை யிழந்தோமே!' என்று திருவுள்ளம்நொந்து 'நமக்குச்செவ்வாய்வக்ரமாய்த்து'என்று சுருளமுதும் அமுதுசெய்யாமல் நாச்சிமாருடனே புறப்பட்டருள, அவ்வளவில் பராங்குசன் பரகாலன் முதலான ஆழ்வார்கள்பதின்மர்களும் ஸேவித்துச்செல்ல, ஆயிரக்கால்திருமண்டபத்திலே எழுந்தருளியிருந்து, திருமுத்தின்பணி காளாஞ்சி திருவெண்சாமரம் திருவாலவட்டம் திருவெண்கொற்றக்குடை வெண்முத்தின்கலசம் திருமேற்கட்டு முத்துத்தாமம் தொடக்கமானவையும், * உடுத்துக்களைந்த பீதகவாடை, * சூடிக்களைந்த தொடுத்த துழாய்மலர், * எண்ணெய் சுண்ணம் எல்லாம் பொற்றளிகையிலே கொண்டுபோம்படி உத்தமநம்பிக்கு விடைகொடுத்தருள, நம்பியும் அப்படியே தரித்துக்கொண்டு பெருமாள்பரிகரம் அனைத்துக்கொத்தோடும் ஸகலவாத்யத்துடனே மடத்துவாசலிலே செல்ல, அதுகண்டு முதலிகளெல்லாரும் தேறிநின்று 'இனிச்செய்யவேண்டுங் க்ருத்யத்தைச் செய்யவேணும்' என்று எம்பெருமானாருடைய விமலசரமவிக்ரஹத்தைத் தூய்தாக நீராட்டப்பண்ணிவைத்து அலங்கரித்துக் கேஶவாதித்வாதஶோர்த்வபுண்ட்ரங்களையுஞ் சாத்தி, பெருமாள் சாத்திக்களைந்து வரவிட்டருளின * பெருமானரையிற் பீதகவண்ணவாடைகொண்டு திருமுடியிலே சாத்தி, அவன்மார்வணிந்த வனமாலையும் சாத்தி அலங்கரித்து, உடையவர்திருவடிகளைத் தங்கள்கண்ணிலும் மார்பிலும் நெஞ்சிலும் ஒற்றிக்கொண்டு, ஆசார்யவிஶ்லேஷாஸஹிஷ்ணுக்களாய், '*ஐயோ! கண்ணபிரான்! அறையோ!*முறையோ! அரவணைமேற் பள்ளிகொண்ட முகில்வண்ணனே!' என்று கையெடுத்துப் போரப்பெருமிடறு செய்து கூப்பிட்டு மூர்ச்சித்துக்கிடக்க, அருகிருந்த முதலிகள் வந்து எடுத்துத் தேற்ற, தேறிநின்று உடையவர்க்குச்சாத்திக் களைந்து தச்சேஷமாயிருந்துள்ள * எண்ணெய் சுண்ணம் திருமண் ஸ்ரீசூர்ணங்களை எல்லாரும் ப்ரஸாதப்பட்டுத் தீர்த்தங்கொண்டு, திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருக்கையாலே ஆளவந்தார்க்குப்போலேஉடையவர்க்கு ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்து, பீடயாநமான திவ்யவிமாநத்திலே ஏறியருளப்பண்ணி, ஸகலவாத்யங்களும் முழங்க, பெருமாள்பரிகரமடைய சத்ர சாமர தாலவ்ருந்தாதிகளைத்தரித்துஸேவிக்க, அவ்வளவிலே ஆட்கொண்டவில்லிசீயர் யதிவரசீயர் உள்ளிட்ட எழுநூறுசீயர்களும் ப்ரஹ்மவல்லி ப்ருகுவல்லி நாராயணநுவாகம் முதலான உபநிஷத்துக்களை ஓத, பட்டர் கந்தாடையாண்டான் நடாதூராழ்வானுள்ளிட்ட முதலிகளும் தத்தத்பரிசர்யாஸாதநங்களைத் தரித்துக்கொண்டு பரிவுடன் பரிவ்ருதராய் ஸேவித்துக்கொண்டு வர, மற்றுமுண்டான உபவீததாரிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்பதினாயிரம்பேரும் ஏகபாவரான ஸ்ரீவைஷ்ணவர்கள்பன்னீராயிரம்பேரும் அருளிச்செயல் மூவாயிரமும் முன்னடி பின்னடியாக ஸேவிக்க, திருவரங்கப்பெருமாளரையர்பரிகரமான திருவாய்மொழியரையர் ஆப்பான்திருவழுந்தூரரையர் திருநறையூரரையர் அழகிய மணவாளரரையர் முதலான எழுநூறுதிருவாய்மொழிவிண்ணப்பஞ்செய்யுந் தம்பிரான்மார் பண்ணிசைதாளத்துடன் திருவாய்மொழிபாட, திருவரங்கத்

தமுதனர் †பொய்யில்வள்ளலார் தொடக்கமானவர்கள் உடையவர் நூற்றந்தாதி ஸேவிக்க, எம்பார் பிள்ளான் உள்ளிட்டவர்கள் தததிகப்ரீதிஹேதுவான ஸ்தோத்ரகத்யங்களை ஸேவிக்க, வடுகநம்பியும் ராமாநுஜதாஸரான கோமடத்துச்சிறியாழ்வானும் உடையவர்ப்ரபத்தியை அநுஸந்தித்துக்கொண்டு வர, திருவீதியெங்குங் கோடித்துப் பொரியும் புஷ்பமும் சிதற, நடைபாவாடையிட்டு, கரும்பும் குடமும் ஏந்த, திருப்பதியில் ஸுமங்கலிகள் மங்கலதீபமேந்தி முன்னேசெல்ல, இருபக்கமும் சாமரமிரட்டிக்க, வெள்ளைவட்டமிட, 'தர்ஸநத்தில் எம்பெருமானர் திருநாட்டுக்கெழுந்தருளினர்'என்று ஒற்றைத்திருச்சின்னம் பணிமாற, திருவீதிகள்தோறும் எழுந்தருளுவித்துக்கொண்டுபோய், ‡(பெரியபெருமாளும் அந்தத்திருமேனியில் அபிமதவிஷயத்தில் அழுக்குஉகக்குமாபோலே அதிசபலராய் "மங்கவொட்டு" என்னும்படி இவர் விக்ரஹத்தை ஆதரித்துப் புறம்பே கொண்டுபோகவொட்டாமல், அந்தஃபுரமஹிஷிகளைத்தத்பரிஸரத்திலே ஆராமத்திலே அடக்கிவைக்குமாபோலேயும், நிதியை உள்ளேஇட்டுவைக்குமாபோலேயும் லக்ஷ்மீதுல்யராம்படியானலக்ஷணங்களையுடையராய் விலக்ஷணமான நிதிபோலே "இராமாநுசன் என்தன்மாநிதி," "இராமாநுசன் என்தன்சேமவைப்பு" என்னும்படியான இவர் திருமேனியையும் ஆழ்வார் திருமேனியை ஆவரணத்துக்குள்ளே பள்ளிபடுத்தாற்போலே ஆவரணத்துள்ளில் உட்கோப்பிலே அந்தரங்கமாக, கௌந்தேயனை அர்ஜுநனைப்போலே அந்தரங்கரான கந்தாடையாண்டான் திருமுடிகாத்து நோக்க,)ததநுகுணமாக யதிஸம்ஸ்காரவிதி யடங்கச் செய்து கதித்துப்பள்ளிபடுத்தருளினர்கள்.

‡(இப்படி நிதியை நிக்ஷேபித்தவநந்தரம் பெருமாளும் நாச்சிமாருடனே கூடத் திருமஞ்சனங்கண்டருளித் திருமுத்துதிர்த்துத் திருமுகங்கன்றிச் சுருளமுதும் அமுதுசெய்யாமல் அலப்புப்படவிடத் திருவுள்ளமாய், கந்தாடையாண்டான் பட்டர் முதலானரைப் பார்த்து 'நம்முடைய அவப்ருதோத்ஸவங்கொண்டாடுமாபோலே நம்உடையவர்க்கும் அவப்ருதோத்ஸவங்கொண்டாடுங்கோள்' என்று திருவுள்ளம்பற்றிச் சேர்த்தியிலேஏறியருளி உடையவர்க்கு அக்காரவடிசில்தளிகை அனுப்பியருளினர்.)

§ அநந்தரம் கந்தாடையாண்டான் தொடக்கமான அனைவரும் புத்ரஸிஷ்யர் செய்யுங் காரியங்களையெல்லாஞ் செய்துகொண்டு அவப்ருதஸ்நாநமாக எல்லாரும் நீராடியருளித் தத்விஸ்லேஷாஸஹராய்ப் பரிதபித்துக்கொண்டிருக்க, பின்பு ஆண்டான் நம்பெருமாளநுமதியுடனே எம்பெருமானரை எல்லாரும் ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி மீளவும் அவ்விடத்திலே ஆவிர்ப்பவித்தாப்போலேயிருக்க அர்ச்சாவதாரமாக ஏறியருளப்பண்ணி ப்ரதிஷ்டிப்

---

† 'பெரியகோயில்வள்ளலார்' என்று அநேகப்ரதிகளிற் பாடம்.

‡ குண்டலித க்ரந்தங்கள் சிலப்ரதிகளில் இல்லை.

§ இந்தப்பாரா உள்ளவிடத்தில் 'அநந்தரம்பெருமாள்அவப்ருதங் கொண்டாடுமாபோலே தீர்த்தங்கொண்டாடிப் பத்துப்பன்னிரண்டுநாளும் செய்யவேண்டுங்க்ருத்யங்களெல்லாஞ்செய்து பெருக்கத்திருவத்யயநமும்நடத்தியருளினர்கள்'என்று காண்கிறது.

பித்தருளினார். (க) "ஸ்வாவதாரஸ்தலேஉர்ச்சாஉபூத்ஸ்ரீரங்கேசயதீஶ்வரஃ-யந் மூதேதங்குணவாஸம் ராமாநுஜகுரும்பஜே" என்றார்கள்.

†அநந்தரம் ஶாஸ்த்ரார்த்தமான கைங்கர்யங்களையும் ஆப்தரானதாங்கள் ஸமாப்தமாகநடத்தி, பட்டரும் கந்தாடையாண்டானும் மிகவும் ஸௌப்ராத்ரத்தையுடையராய், உடையவர்காலத்தில் அர்த்தவிஶேஷங்களையும் ஒருவர்க்கொருவர் உசாவிக்கொண்டு, ராமக்ருஷ்ணாதிகளுடையபுநர்வஸ்வாதிதிருநக்ஷத்ரங்களோபாதியும், ஆழ்வார்களுடைய ஶ்ரவணாதி திருநக்ஷத்ரங்களோபாதியும் இவருடைய சித்திரையில் திருவாதிரையையும் மற்றும் மாஸந்தோறும் வருவதான அந்தத்திருநக்ஷத்ரத்தையும் மஹோத்ஸவமாகநடத்திக்கொண்டு, வாசாமகோசரமானதத்வைபவங்களையும்ப்ரகாஶிப்பித்துக்கொண்டு,கிடாம்பியாச்சான் தொடக்கமானவரோடே பாடாற்றிக்கொண்டிருந்தார்கள்.

அநந்தரம் திருவேங்கடநாட்டினின்றும் அநந்தாழ்வான், ஸ்ரீகுஹதாஸர் முதலான முதலிகளையுங் கூட்டிக்கொண்டு அநந்தாம்ஶமான இவர்அவதார ஸமாதியை ஆராய்ந்தறியும்படி எழுந்தருளி, திருக்காவேரியருகே பரந்திருக்கிற தத்ஸூசகங்களைக் கண்டு எழுந்தருளினபடியறிந்து ஶோகாவிஷ்டராய்,அநந்தரம் பட்டரையும் ஆண்டானையும் கண்டு ஆஶ்வஸித்து உடனே ஊரேற மீண்டு எழுந்தருளினார்.

அநந்தரம் அப்படியே கீழைத்திக்கில் சோழவளநாட்டுத் திருக்கண்ணபுரம் முதலான திருப்பதிகளில் எச்சான் முதலானவர்களும், தெற்குத்திக்கானபாண்டிநாட்டுத் திருக்கோட்டியூர்நம்பிகுமாரரான யாமுநாசார்யர் சொக்கத்தேவர் திருமாலையாண்டான்குமாரரானசுந்தரத்தோளுடையார் முதலானவர்களும், மேல்நாட்டிலும் சோமாசியாண்டான் மருதூர்நம்பி தொண்டனூர் நம்பிமுதலானோரும், மற்றும் அங்கே எம்பெருமானாராலேதிருத்தப்பட்ட திருநாராயணபுரம்முதலானஸ்தலங்களில்ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுண்டான தேஶாந்தரஸ்தரெல்லாரும் திரண்டு பெருங்கூட்டமாகக் கோயிலிலே வந்து எம்பெருமானாருடைய விஶ்லேஷத்தாலே மிகவும் க்லேஶித்து, அநந்தரம் பட்டரை ஸேவித்துத் தங்கள்வ்யஸநமெல்லாம் தீர்ந்து பட்டரை இஷ்டதேவதையான எம்பெருமானாரைப்போலே கண்டு, தந்தாமுக்குவேண்டும் இஷ்டார்த்தங்களையுங்கேட்டுக்கொண்டு,தல்லாபத்தாலே (உ)"ஸ்ரீபராஶரபட்டார்யசரணௌஸம்ஶ்ரயேமஹி - யத்வக்த்ரரங்கேரங்கேஶகோஷ்ட்யாம்ப்ராஹ்மீ ப்ரந்ருத்யதி," (ந) "ப்ரமாணநகநிர்ப்பிண்ணவாதிமத்தேபமஸ்தகஃ-ராஜதேநிமமாங்கர்ஜந்ஸ்ரீபராஶரகேஸரீ", (ச)"ஸ்ரீபராஶரபட்டார்யம்பூயோபூயோநமாம்யஹம்-யதாத்மநாஸ்வயம்ரங்கி பேஜேகூரேஶபுத்ரதாம்" இத்யேவமாதிஸூக்தி

(க) "స్వావతారస్థలే ఽర్చాఽభూత్ శ్రీరఙ్గేశయతీశ్వరః। యస్తం దేశం గుణావాసం రామానుజగురుం భజే." (౨) "శ్రీపరాశరభట్టార్యచరణౌ సంశ్రయేమహి। యద్వక్త్రరఙ్గే రఙ్గేశగోష్ఠ్యాం బ్రాహ్మీ ప్రనృత్యతి." (౩) "ప్రమాణనఖనిర్భిణ్ణవాదిమత్తేభమస్తకః। రాజతేనిగమారణ్యే గర్జన్ శ్రీపరాశరకేసరీ." (౪) "శ్రీపరాశరభట్టార్యం భూయోభూయో నమామ్యహమ్। యదాత్మనా స్వయం రఙ్గీ భేజే కూరేశపుత్రతామ్."

† இதுமுதல் மூன்றுபாராக்கள் சிலப்ரதிகளில் இல்லை.

களையும் தத்விஷயத்திலே அநுஸந்தித்துக்கொண்டு ததநுஜ்ஞையோடே தந் தாமூர்களிலே சேர்ந்தார்கள்.

ஸம்ஸாரஸ்தித்யருசிநிர்வேதநமும், ததநுகுணமான பகவதுக்தார்த்திமதிந நிஶ்சயமும், சரமகாலத்தளவும் ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரானவர்களுக்கு உபகாராநுகுணமாக வ்ருத்திவிஶேஷோபதேஶமும், பரிஹரணீயவ்ருத்தி விஶேஷோபதேஶமும், சரமகாலத்தில் ஸ்வாபிமதசரமாதிகாரிஸ்பர்ஶ விஶேஷமும், திருமுடியைப்பற்றிப் பூர்வாசார்யர்கள்விளங்கத் திருவடிகளைப்பற்றி அபராசார்யர்கள் விளங்கப் பூர்வாபராசார்யரூப ஹார நாயகரத்நமான உடையவர்க்கே யுள்ள தொன்றிறே.

இத்தால் ஸ்ரீராமக்ருஷ்ணசரிதங்கள்போலே ஸ்ரீராமாநுஜார்யசரிதமும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸதாநுஸந்தேய மென்றதாய்த்து.

எம்பெருமானார்திருநக்ஷத்ரம், சித்திரையில் திருவாதிரை.

இவர் தனியன் - ப்ரஸித்தமிறே, (க) "யோநித்யமச்யுத" இத்யாதி.

---

உடையவர் ஸ்ரீபாதத்து முதலிகளின் தனியன் முதலியன.

ப்ராப்யதேஶத்திலும் ஆசார்யஶேஷத்வம் முறைதவறவொண்ணாதென்னுந் த்வரையும், சரமதஶையிலும் ப்ராணப்ரயாண பாதேயமாக ஸ்வாசார்யன்தானே த்வயத்தை விடாய்கெட உபதேசிக்கப்பெற்ற தன்னேற்றமும், பாகவதாபிமாநஸ்தலத்திலும் ததீயாபிமாநஸ்தலமே சரமதேஶமாகப்பெற்ற தன்னேற்றமும், சரமாதிகாரபாகவிஶேஷமும், ஆழ்வான்பக்கலிலே அநுஷ்டாநஶேஷமாகக் கண்டதிறே.

முதலியாண்டான் திருநக்ஷத்ரம், சித்திரையில் புநர்வஸு.

அவர்தனியன் - (உ) "பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா - தஸ்ய தாஶரதே: பாதௌ ஶிரஸா தாரயாம்யஹம்", (௩) "அஜஹத்பாகிநேயத்வம் பாதுகாத்வந்த்ரிதண்டதாம்-ஸம்ப்ராப்தோ யதிராஜஸ்ய குணைஸ்தத்ப்ரீதிஹேதுபி: - ஸ்ரீவைஷ்ணவாநாந்தாஸத்வம் ஸ்வாமித்வம்ப்ரபுதாம்ஸ்வயம்-வாதூலகுலதௌரேயம் வந்தே தாஶரதிம் குரும்."

திருக்குருகைப்பிரான்பிள்ளான் தனியன்- (௪) "யத்பர்யாப்தகலங்க்யாதோ யதிராஜாப்திசந்த்ரமா: - குஶலந்திஶதாம்மே ஸௌ குருகேஶ்வரதேஶிக:," (௫) "விக்யாதோ யதிஸார்வபௌமஜலதேஶ்சந்த்ரோபமத்வேநய: ஸ்ரீபாஷ்யேச

(க) "యోనిత్యమచ్యుత." (ఉ) "పాదుకే యతిరాజస్య కథయన్తియదాఖ్యయా। తస్యదాశరథేఃపాదౌ శిరసాధారయామ్యహం." (౩) "అజహద్భాగినేయత్వం పాదుకాత్వం త్రిదణ్డతాం। సంప్రాప్తోయతిరాజస్య గుణైస్తత్ప్రీతిహేతుభిః॥ శ్రీవైష్ణవానాందాసత్వంస్వామిత్వంప్రభుతాంస్వయం। వాధూలకులధౌరేయంవన్దే దాశరథింగురుమ్." (௪) "యత్పర్యాప్తకలఙ్ఖ్యాతో యతిరాజాబ్ధిచన్ద్రమాః। కుశలందిశతాంమే సౌకురుకేశ్వరదేశికః." (௫) "విఖ్యాతోయతిసార్వభౌమజలధేశ్చన్ద్రోపమత్వేనయః శ్రీభాష్యేచయదన్వయాన్నుపదితాశ్శ్రీవిష్ణుచిత్తాదయః। వ్యాఖ్యాంభాష్యకృదాజ్ఞయోపనిషదాం యోద్రామిడీనాంవ్యధాత్తంపూర్వంతం కురుకేశ్వరం గురువరం కారుణ్యపూర్ణంభజే."

யதந்வயாஸ்ஸமுதிதாஸ்ஸ்ரீவிஷ்ணுசித்தாதயஃ - வ்யாக்யாம்பாஷ்யக்ருதாஜ்ஞயோபநிஷதாம்யோத்ராமிடநாம்வ்யதாத் பூர்வந்தம் குருகேஶ்வரம் குருவரம் காருண்யபூர்ணம்பஜே."

கிடாம்பியாச்சான்தனியன் - (க) "ராமாநுஜபதாம்போஜ யுகளீயஸ்ய தீமதஃ - ப்ராப்யஞ்சப்ராபகம்வந்தே ப்ரணதார்த்திஹரங்குரும்," (உ) "ஆஸ்திகாக்ரேஸரம்வந்தே பரிவ்ராட்குருபாசகம் - யாசிதங்குருகேஶேந ப்ரணதார்த்திஹரங்குரும்", (ங) "ஸ்ரீபாஷ்யந்தர்ஶயித்வாயதிபதிரசிதம்ஶாரதாயைநிவ்ருத்தோ நத்வாஸ்ரீவேங்கடேஶம்பதிபரமபதந்தத்தவாந்கோபிகாயை - ஆக்யாம்வேதோத்தமாங்கோதயநஇதிததத்பாஷ்யகாரேணதத்தா மாத்ரேயாசார்யவிஷ்ணோரநுஜமநுதிநம்ஸாதரந்தந்நமாமி."

எங்களாழ்வான்தனியன் - (ச) "ஸ்ரீவிஷ்ணுசித்தபதபங்கஜஸம்ஶ்ரயாய சேதோமமஸ்ப்ருஹயதேகிமதஃபரேண - நோசேந்மமாபியதிஶேகரபாரதீநாம் பாவஃகதம்பவிதுமர்ஹதிவாக்விதேயஃ."

நடாதூராழ்வான் தனியன் - (ரு) "யஸ்மிந்பதம்யதிவரஸ்யமுகாத்ப்ரணேதும் நிஷ்க்ராமதேவநிததேநிகமாந்தபாஷ்யம்-தஸ்யைவதம்பகவதஃப்ரியபாகிநேயம் வந்தேகுரும்வரதவிஷ்ணுபதாபிதாநம்", (சா) "ஜ்ஞாநோத்தமோத்ததிநிராகரணப்ரதுஷ்யத் ராமாநுஜார்யகருணாபரிணாஹபாத்ரம் - வத்ஸாந்வவாயதிலகம்வஸதிங்குணாநாம் வந்தாமஹேவரதவிஷ்ணுகுரும்வரேண்யம்."

சோமாசியாண்டான்தனியன் - (எ) "ஸௌமிலக்ஷ்மணயோகீந்த்ர பாதஸேவைகதாரகம் - ஸ்ரீராமக்ரதுநாதார்யம் ஸ்ரீபாஷ்யாம்ருதஸாகரம்."

நடுவிலாழ்வான்தனியன் - (அ) "யேந†ப்ரோத்ஸ்கலதேநித்யங் கார்க்யவம்ஶமஹாம்புதிஃ - மந்மஹேதம்ஸதாசித்தே மத்யமார்யகலாநிதிம்."

அருளாளப்பெருமாளெம்பெருமானார்தனியன்-(கூ) "தயாபாலநதேவாய ஜ்ஞாநஸாரப்ரதாயச - ப்ரமேயஸாரந்ததே நமோ஽ஸ்துப்ரேமஶாலிநே",

---

(க) "రామానుజపదాంభోజయుగళీయస్య ధీమతః । ప్రాప్యఞ్చ ప్రాపకం వన్దే ప్రణతార్తిహరం గురుం." (உ) "ఆస్తికాగ్రేసరం వన్దే పరివ్రాడ్గురుపాచకం । యాచితం గురుకేశేన ప్రణతార్తిహరం గురుం." (ங) "శ్రీభాష్యం దర్శయిత్వా యతిపతిరచితం శారదాయై నివృత్తో నత్వా శ్రీవేంకటేశం పథి పరమపదం దత్తవాన్ గోపికాయై । ఆఖ్యాం వేదోత్తమాఙ్గోదయన ఇతి దధద్భాష్యకారేణ దత్తాం ఆత్రేయాచార్యవిష్ణోరనుజమనుదినం సాదరం తం నమామి." (ச) "శ్రీవిష్ణుచిత్తపదపఙ్కజసంశ్రయాయ చేతో మమ స్పృహయతే కిమతః పరేణ । నోచేన్మమాపి యతిశేఖరభారతీనాం భావః కథం భవితుమర్హతి వాగ్విధేయః." (ரு) "యస్మిన్పదం యతివరస్య ముఖాత్ప్రణేతుం నిష్క్రామదేవ నిదధే నిగమాన్తభాష్యం । తస్యైవ తం భగవతః ప్రియభాగినేయం వన్దే గురుం వరదవిష్ణుపదాభిధానం." (சா) "జ్ఞానోత్తమోద్ధతినిరాకరణప్రతుష్య ద్రామానుజార్యకరుణాపరిణాహపాత్రం । వత్సాన్వవాయతిలకం వసతిం గుణానాం వన్దామహే వరదవిష్ణుగురుం వరేణ్యం." (எ) "సౌమిలక్ష్మణయోగీన్ద్రపాదసేవైకధారకం । శ్రీరామక్రతునాథార్యం శ్రీభాష్యామృతసాగరం." (அ) "యేన ప్రోత్స్ఖలతే నిత్యం గార్గ్యవంశమహాంబుధిః । మన్మహే తం సదా చిత్తే మధ్యమార్యకలానిధిం." (கூ) "దయాపాలనదేవాయ జ్ఞానసారప్రదాయచ । ప్రమేయసారం దదతే నమోఽస్తు ప్రేమశాలినే."

† 'ப்ரோல்லஸதே' என்று பாடம் காண்கின்றது.

(க) "யதிராஜதயாபாத்ரம் யதிபங்க்திவிபூஷணம் - தயாபாலமுநிம்வந்தே தேஶிகாக்ரேஸரம்ஸதா."

அநந்தாழ்வான் திருநக்ஷத்ரம் - சித்திரையில் சித்திரை.

அவர் தனியன் -(உ)"அகிலாத்மகுணாவாஸம்அஜ்ஞாநதிமிராபஹம்-ஆஶ்ரிதாநாம்ஸுஶரணம் வந்தே'நந்தார்யதேஶிகம்",(ங)"ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம்-ஸதுத்தமாங்கஸந்தார்யம்†அநந்தார்யகுரும்பஜே," (ச) "யதீந்த்ரபாதாம்புஜசஞ்சரீகம் ஸ்ரீமத்தயாபாலதயைகபாத்ரம் - ஸ்ரீவேங்கடேஶாங்க்ரியுகாந்தரங்கம் நமாம்யநந்தார்யமநந்தக்ருத்வ꞉."

எச்சான் தனியன் - (ரு) "யேநவைஷ்ணவஶேஷத்வ பர்யந்தம்பரமாத்மந꞉ - ஶேஷத்வமாத்மநோஜ்ஞேயம் யஜ்ஞேஶந்தமுபாஸ்மஹே."

வடுகநம்பிதனியன் - (சா) "ராமாநுஜார்யசரண ப்ரவணம்பரதேவவத் - வடுபூர்ணமஹம்வந்தே பரஜ்ஞாநபயோநிதிம்."

எழுபத்துநான்கு ஆசார்யர்களுக்கும் ஸமுதாயத்தனியன் - (எ)"ராமாநுஜார்யாச்ச்ருதிமௌளிபாஷ்யம் அர்த்தம்ரஹஸ்யந்த்ரமிடஶ்ருதீநாம் - ஸம்ப்ராப்யதேநைவகுரூக்ருதாம்ஸ்தாந் பஜேசதுஸ்ஸப்ததிபீடஸம்ஸ்தாந்."

மாருதிச்சிறியாண்டான், தம்முடைய அந்திமதசையிலே பணித்த வார்த்தை:—'திருவேங்கடமுடையான் தன்ஸ்வரூபத்தை மறந்து என்ஸ்வரூபத்தை நினைத்தானாகில், பழையநரகங்களொழிய வேறே எனக்கென்று சில நரகங்களை ஸ்ருஷ்டிக்கவேணுமிறே; அன்றிக்கே, என்ஸ்வரூபத்தை மறந்து தன்ஸ்வரூபத்தை உணர்ந்தானாகில், பழையதிருநாடு போராது; எனக்கென்று வேறே ஒருதிருநாடு ஸ்ருஷ்டிக்கவேணுமிறே': அதாவது - ஸ்வக்ருததோஷஸ்மரணம் அநந்தது꞉கப்ரதாநஹேது; ஈஶ்வரவாத்ஸல்யஸ்மரணம் அநந்தாஸ்சர்யஸுகப்ரதாநஹேது வென்றபடி.

இவர்தனியன் - (அ) "ஜ்ஞாதுங்கூரகுலாதிபங்க்ரிமிமளாத்ப்ராப்தாபதம் ப்ரேஷித꞉ ஸ்ரீராமாவரஜேநகோஸலபதிர்த்ருஷ்ட்வாததீயாம்ஸ்திதிம்-ஸம்ப்ராப்தஸ்த்வரயாபுராந்தகபுராத்கல்யாணவாபீதடே யோ'ஸௌமாருதிரித்யஶம்ஸதவயந்தஸ்மைநமஸ்குர்மஹே."

---

(க) "యతిరాజదయాపాత్రం యతిపఙ్క్తివిభూషణం। దయాపాలమునింవన్దే దేశికాగ్రేసరంసదా." (உ) "అఖిలాత్మగుణావాసమజ్ఞానతిమిరాపహం। ఆశ్రితానాంసుశరణం వన్దేఽనన్తార్యదేశికం." (ங) "శ్రీమద్రామానుజాచార్య శ్రీపాదామ్భోరుహద్వయం। సదుత్తమాఙ్గసన్ధార్యం అనన్తార్యగురుంభజే." (ச) "యతీన్ద్రపాదాంబుజచఞ్చరీకంశ్రీమద్దయాపాలదయైకపాత్రం। శ్రీవేఙ్కటేశాఙ్ఘ్రియుగాన్తరఙ్గం నమామ్యనన్తార్యమనన్తకృత్వః." (ரு) "యేనవైష్ణవశేషత్వ పర్యన్తంపరమాత్మనః। శేషత్వమాత్మనోజ్ఞేయం యజ్ఞేశంతముపాస్మహే." (சா) "రామానుజార్యచరణప్రవణంపరదేవవత్। వటుపూర్ణమహంవన్దేపరజ్ఞానపయోనిధిం."(எ) "రామానుజార్యాచ్ఛ్రుతిమౌళిభాష్యం అర్థంరహస్యంద్రమిడశ్రుతీనాం। సంప్రాప్యతేనైవగురూకృతాంస్తాన్ భజేచతుస్సప్తతిపీఠసంస్థాన్." (அ) "జ్ఞాతుంకూరకులాధిపంక్రిమిగళాత్ప్రాప్తాపదంప్రేషిత శ్రీరామావరజేనకోసలపతిర్దృష్ట్వాతదీయాంస్థితిం। సంప్రాప్తస్త్వరయాపురాన్తకపురాత్కల్యాణవాపీతటే యోఽసౌమారుతిరిత్యశంసతవయంతస్మైనమస్కుర్మహే."

† 'அநந்தாக்யமஹம்பஜே' என்றும் பாடம்.

யதந்வயாஸ்ஸ—ஷிதிதாஸ்ஸ்ரீவிஷ்ணுசித்தாதய: - வ்யாக்யாம்பாஷ்யக்ருதாஜ்ஞயோபநிஷதாம்யோத்ராமிடாநாம்வ்யதாத் பூர்வந்தங் குருகேஶ்வரங் குருவரங் காருண்யபூர்ணம்பஜே."

கிடாம்பியாச்சான் தனியன் - (க) "ராமாநுஜபதாம்போஜ யுகளீயஸ்ய தீமத: - ப்ராப்யஞ்சப்ராபகம்வந்தே ப்ரணதார்த்திஹரங்குரும்,"(உ)"ஆஸ்திகாக்ரேஸரம்வந்தே பரிவ்ராட்குருபாசகம் - யாசிதங்குருகேஶேந ப்ரணதார்த்திஹரங்குரும்", (ங) "ஸ்ரீபாஷ்யந்தர்ஶயித்வாயதிபதிரசிதம்ஶாரதாயைநிவ்ருத்தோ நத்வாஸ்ரீவேங்கடேஶம்பதிபரமபதந்தத்தவாங்கோபிகாயை - ஆக்யாம்வேதோத்தமாங்கோதயநஇதிததத்பாஷ்யகாரேணதத்தா மாத்ரேயாசார்யவிஷ்ணோராநுஜமநுதிநம்ஸாதரந்தந்நமாமி."

எங்களாழ்வான் தனியன் - (ச) "ஸ்ரீவிஷ்ணுசித்தபதபங்கஜஸம்ஶ்ரயாய சேதோமமஸ்ப்ருஹயதேகிமத:பரேண - நோசேந்மமாபியதிஶேகரபாரதீநாம் பாவ:கதம்பவிதுமர்ஹதிவாக்விதேய:."

நடாதூராழ்வான் தனியன் - (ரு) "யஸ்மிந்பதம்யதிவரஸ்யமுகாத்ப்ரணேதும் நிஷ்க்ராமதேவநிததேநிகமாந்தபாஷ்யம்-தஸ்யைவதம்பகவத:ப்ரியபாகிநேயம் வந்தேகுரும்வரதவிஷ்ணுபதாபிதாநம்", (சு) "ஜ்ஞாநோத்தமோத்ததிநிராகரணப்ரதுஷ்யத் ராமாநுஜார்யகருணாபரிணாஹபாத்ரம் - வத்ஸாந்வவாயதிலகம்வஸதிங்குணாநாம் வந்தாமஹேவரதவிஷ்ணுகுரும்வரேண்யம்."

சோமாசியாண்டான் தனியன் - (எ) "நௌமிலக்ஷ்மணயோகீந்த்ர பாதஸேவைகதாரகம் - ஸ்ரீராமக்ரதுநாதார்யம் ஸ்ரீபாஷ்யாம்ருதஸாகரம்."

நடுவிலாழ்வான் தனியன் - (அ) "யேந†ப்ரோத்ஸ்கலதேநித்யங் கார்க்யவம்ஶமஹாம்புதி: - மந்மஹேதம்ஸதாசித்தே மத்யமார்யகலாநிதிம்."

அருளாளப்பெருமாளெம்பெருமானார் தனியன்-(கூ)"தயாபாலநதேவாய ஜ்ஞாநஸாரப்ரதாயச - ப்ரமேயஸாரந்ததேத நமோஉஸ்துப்ரேமஶாலிநே",

(க) "రామానుజపదామ్భోజయుగళీయస్యధీమతః । ప్రాప్యఞ్చప్రాపకంవన్దేప్రణతార్తిహరంగురుం." (உ) "ఆస్తికాగ్రేసరంవన్దేపరివ్రాడ్గురుపాచకం। యాచితంగురుకేశేన ప్రణతార్తిహరంగురుం." (ங) "శ్రీభాష్యందర్శయిత్వాయతిపతిరచితంశారదాయైనివృత్తో నత్వాశ్రీవేంకటేశంపథిపరమపదందత్తవాన్గోపికాయై । ఆఖ్యాంవేదోత్తమాఙ్గోదయనఇతిదదద్భాష్యకారేణదత్తాం ఆత్రేయాచార్యవిష్ణోరనుజమనుదినంసాదరంతంనమామి." (ச) "శ్రీవిష్ణుచిత్తపదపఙ్కజసంశ్రయాయచేతోమమస్పృహయతేకిమతఃపరేణ। నోచేన్మమాపియతిశేఖరభారతీనాం భావఃకథంభవితుమర్హతివాగ్విధేయః." (ரு) "యస్మిన్పదంయతివరస్యముఖాత్ప్రణేతుం నిష్క్రామదేవనిదధేనిగమాన్తభాష్యం । తస్యైవతంభగవతఃప్రియభాగినేయంవన్దేగురుంవరదవిష్ణుపదాభిధానం." (சு) "జ్ఞానోత్తమోద్ధతినిరాకరణప్రతుష్యద్రామానుజార్యకరుణాపరిణాహపాత్రం । వత్సాన్వవాయతిలకంవసతింగుణానాం వన్దామహేవరదవిష్ణుగురుంవరేణ్యం." (எ) "నౌమిలక్ష్మణయోగీన్ద్రపాదసేవైకధారకం। శ్రీరామక్రతునాథార్యంశ్రీభాష్యామృతసాగరం."(அ) "యేనప్రోత్స్ఖలతేనిత్యం గార్గ్యవంశమహాంబుధిః। మన్మహేతంసదాచిత్తే మధ్యమార్యకలానిధిం." (கூ) "దయాపాలనదేవాయ జ్ఞానసారప్రదాయచ । ప్రమేయసారందదతేనమోఽస్తుప్రేమశాలినే."

† 'ப்ரோல்லஸதே' என்று பாடம் காண்கின்றது.

நம்பிதிருவழுதிவளநாடுதாஸர் திருநாட்டுக்குஎழுந்தருளுகிற ஸமயத்திலே தம்ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருந்த ஒருஸ்ரீவைஷ்ணவர் அழ, அதற்கு நம்பி 'கெடுவாய்! செத்துப்போகிற நான் போகாநின்றேன்; ஸ்ரீபராசரபட்டர் வாசிக்கக் கேட்கவிருக்கிற நீயோ அழுகிறாய்!' என்று அருளிச்செய்தாரிறே; அதாவது - ஸதாசார்யவ்யாக்யாநவசநஸ்வாரஸ்யாஸக்தி அபவர்க்க பலப்ராப்தியிலும் அருசிபிறப்பிக்கு மென்றபடி.

பிள்ளைதிருவழுதிவளநாட்டரையர் தம் அந்திமதசையிலே க்லேசிக்க, சுற்றிலுமிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் முகம்பார்த்திருக்க, அவரும் இவர்களுடைய அபிப்ராயத்தைத் தம்திருவுள்ளத்திலே கோலியருளி 'வாரீகோள் முதலிகாள்! ஸம்ஸாரிகளிழவுக்குப் போர நொந்தோங்காணுங்கோள்; அவர்களுக்கும் நமக்கும் அல்பமாய்த்து வாசியுள்ளது: எங்ஙனேயென்னில்:—நாம் இடுவது ஒருதண்டம், பண்ணுவது ஒருப்ரபத்தி, இழப்பது ஒரு ஹேயமான ஸம்ஸாரம், பெறுவது ஒருவிலக்ஷணமான பரமபதம்; இத்தையறியாதே அதஃபதிக்கிறார்களே! என்று க்லேசமாய்த்துக்காணுங்கோள்' என்ன, முதலிகளும் க்ருதார்த்தரானார்கள்; அதாவது - பரதுஃகாஸஹிஷ்ணுத்வமும், பரஸம்ருத்யேகப்ரயோஜநத்வமும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு உண்டாகவேணு மென்று கருத்து.

## எம்பார் வைபவம்.

எம்பார், உடையவர் திருநாட்டுக்கு எழுந்தருளும்போது அவர்திருவடிகளைப் பிடித்துக்கொண்டு 'நாயன் தே! பெரியதிருமலைநம்பி, ஶங்க்திகையிலே ரஜதபுத்திபண்ணுவாரைப்போலே அபரமாத்மவிஷயே பரமாத்மபுத்தி பண்ணி விபரீதஜ்ஞாநநிஷ்டனாய்க் காளஹஸ்தியாகிறகடுங்காட்டிலேயிருந்த என்னைப்*போதரேயென்றுசொல்லிப் புந்தியில்புகுந்து தன்பாலாதரம்பெருகும்படி திருத்தி * மாயப்பற்றறுத்து, அடியேனுடைய துர்வாஸநாச்சேதநத்தைப் பண்ணியருளி, * பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமைகொண்டருளி, "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டும் தேவரீர் திருவடிகளென்றுகாட்டிக்கொடுத்தருளினார்;தேவரீரும்அப்படியேஅடியேன் நம்பிதிருவடிகளை யகன்ற இழவெல்லாம் தீர ஸர்வவிதோத்தாரகபந்துவுமாய் நிற்க, தேவரீர்திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்திருந்த அடியேன் (க) "நசஸீதாத்வயாஹீநா நசாஹமபிராகவ - முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" என்கிறபடியே என்உயிர்நிலையான தேவரீர்திருவடிகளை அகன்று ஒருக்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டேன்; தேஹி விட்டுப்போனல் தேஹம் நிற்குமோ?"நிழலும் அடிதாறும் ஆனோம்" என்கிறபடியே ஸ்ரீபாதச்சாயாபந்நனை அடியேன் எங்ஙனே தரித்திருப்பேன்?'

(க) "నచసీతాత్వయాహీనా నచాహమపిరాఘవ । ముహూర్తమపిజీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ"

என்று திருவடிகளிலே போர ஆர்த்தியோடே விழுந்து எழுந்திராமல் கிடக்க, உடையவரும் எம்பாரைக் குளிரநோக்கியருளி 'நாம் நம்பிதிருக்கையாலே உம்மை உதகபூர்வகமாகப்பரிக்ரஹித்தபின்பு நமக்கும் உம்மைப் பிரியக் கூடுமோ? நம்முடைய வைகுண்டநாதனும் அப்படியே செய்தருளுகிறுன்; பதறுதேகொள்ளும்'என்று எம்பாரைவாரியெடுத்துஅணைத்துக்கொண்டு,தம் *பொன்னங்கழற்றாமரைப்பூக்களாலே அவர்திருமுடியை அலங்கரித்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருள,எம்பாரும் தாயைப்பிரிந்த ஸ்தநந்யப்ரஜையைப் போலே ஸ்திதிலாந்தஃகரணராய்ப் பெரியஆர்த்தியோடே உடையவர் ப்ரஸாதித்தருளின அர்த்தவிஶேஷங்களைப் பட்டர் முதலான முதலிகளுக்கு ப்ரஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிராநிற்க;

ஒருநாளாக உடையவர்திருவடிகளைத் திருவுள்ளத்தே*நினைந்து நைந்து உள்கரைந்துருகி, *தாய்நாடுகன்றேபோல் 'எப்போது காணப்பெறுவேன்?' என்று த்வரைவிஞ்சி, ஆசார்யவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல்"அவனைவிட்டகன்று உயிராற்றகில்லா"என்கிறபடியே உடையவரையகன்று இருக்கமாட்டாதஆற்றுமை கரைபுரண்டு மிகவும்விஞ்சி, பெரியபெருமாள்ஸந்நிதியிற்சென்று'நாயன்தே!அடியேன் உடையவர்திருவடிகளேறப்போக நினையாநின்றேன்; தேவரீர் விடைப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியேசெய்யும்' என்று திருவுள்ளம்பற்றியருளி, எம்பாருக்குத் தீர்த்தப்ரஸாதமும் ஸ்ரீசடகோபனும் இரங்கிப்ரஸாதித்தருள, இவரும்"திருப்பொலிந்தசேவடி என்சென்னியின்மேற் பொறித்தாய்" என்று அங்கீகரித்தருளி, அமலனாதிபிரானிற்படியே பாதாதிகேஶாந்தமாக அநுபவித்தருளி, "என்னமுதினைக்,கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே"என்றுகொண்டு * அணியார்பொழில்சூழரங்கநகரப்பனைத் தம்*கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காதபடியாக நிறைத்துக்கொண்டு புறப்பட்டருளி உடையவர்மடத்தேற எழுந்தருளி, (க) "யோநித்யம்" என்றுதொடங்கி (உ) "ராமாநுஜஸ்யசரணௌ ஶரணம்ப்ரபத்யே" என்று அநுஸந்தித்துக்கொண்டு தண்டன்ஸமர்ப்பித்து, மடமேயெழுந்தருளித் தம் திருவாராதநமான அரங்கநகரப்பனைத் திருவடிவிளக்கிப் பட்டரையழைத்தருளி 'வாரீர் பட்டரே! நாம் ஆழ்வான் குமாரர்; அகிலஶாஸ்த்ரங்களையும் அதிகரித்தோம்; நம்பெருமாள் நம்மைப் புத்ரஸ்வீகாரம்பண்ணியருளிறு ரென்னும் மேன்மைகளை நினைத்து இறுமாந்திராதே, நம்மாணை! 'எம்பெருமானார்திருவடிகளே உபாயோபேயம்' என்று அத்யவஸித்திரும்' என்று அருளிச்செய்து,'கணியனூர்ச்சிறியாச்சான் சட்டம்பள்ளிச்சீயர் ஈச்சம்பாடிச்சீயர்முதலானூர்க்கும் மற்றுமுள்ளமுதலிகளுக்கும் உடையவர் ப்ரஸாதித்தருளின அர்த்தவிஶேஷங்களையும் ப்ரஸாதித்துக்கொண்டு தர்ஶநம் நிர்வஹித்து வாழ்ந்தருளவேணும்' என்று மங்களாஶாஸநம் செய்தருளி, அவர்களைப் பட்டர்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, 'ஸர்வாபராதங்களையும் பொறுத்தருளவேணும்'என்று தண்டன்ஸமர்ப்பித்து, பட்டர்முதலான முதலிகளைத் தீர்த்தங்கொண்டு அமுதுசெய்யப்பண்ணி,

(க) "యోనిత్యం." (உ) "రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే."

* அரங்கத்துறையும் இன்துணைவனே வழித்துணையாக நினைத்துக்கொண்டு உடையவர்திருவடிகளை த்யாகித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பட்டரும் ஆசார்யவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல் மிகவும்ஶோகார்த்தராய் க்லேஶிக்க, அருகிருந்த முதலிகளும் ‘வாரீர் பட்டரே! தேவரீர் இப்படி க்லேஶிக்கலாமோ?’ என்று தேற்றமிட, பட்டரும் தம்மிலேதெளிந்துகொண்டிருக்கிறவளவிலே, பெருமாள்சாத்திக்களைந்த திருமாலை திருப்பரியட்டம் முதலானவற்றையுங் கொண்டு அனைத்துக்கொத்திலவர்களும் வர, சிறிய கோவிந்தப்பெருமாள்திருக்கையாலே ப்ரஹ்மமேதவிதியடங்கச் செய்வித்து எம்பாருடைய விமலசரமவிக்ரஹத்தைப் பீடயானத்திலேஎழுந்தருளுவித்துக் கொண்டுபோய் யதிஸம்ஸ்காரவித்யுக்தப்ரகாரேண ஸம்ஸ்கரித்துக் கஙித்துப் பள்ளிபடுத்து அவப்ருதங்கொண்டாடிப் பெருக்கத் திருவத்யயநமும் நடத்தியருளினார்.

ஆசார்யகைங்கர்யமே பரமப்ரயோஜநமாய்த் தன்னைப் பேணாமையும், ஆசார்யவிஷயத்தில் க்ரயவிக்ரயார்ஹராய் ஸ்வவ்யாபாரமற்றிருந்தபடியும், ஆசார்யன்திறத்தில் சாயாவத் பாரதந்த்ர்யமும், ஆசார்யனையகன்று தரியாத அநுஷ்டாநமும் இவர்க்கே உள்ள தொன்றிறே.

எம்பார்திருநக்ஷத்ரம் - தையில் புநர்பூசம்.

இவர் தனியன் - (க) “ராமாநுஜபதச்சாயா கோவிந்தாஹ்வாऽநபாயிநீ - ததாயத்தஸ்வரூபா ஸா ஜீயாந்மத்விஶ்ரமஸ்தலீ;” “வம்பார்மலர்க்கணைகளைந் தாலுமேவுமாதர்விழி, அம்பாலிடரொன்றில ஞொருகாலு மரிவையர்க்குத், தம்பாலொருகாலுமேகாந்தமில்லென்று தாமுரைத்த, எம்பாரடிசரணென்பாரடிசரண மெங்களுக்கே”; (உ) “பட்டார்யாயப்ரபத்திம்வ்யபதிஶததுலம் த்ராவிடாம்நாயமௌலே ரர்த்தம்ஶ்ரீபாஷ்யமந்யாநபிசயதிவராதேஶதோऽந்யாந் ரஹஸ்யாந்-யஶ்சோக்தோ தேஶிகேந்த்ரோயதிபதிசரணச்சாயநாமார்யவர்யஸ் தங்கோவிந்தார்யமஸ்மத்குலகுருமமிதஜ்ஞாநவைராக்யமீடே,” (ங) “ஹ்ருதி நாராயணம்பஶ்யந் நாப்யகச்சத்ரஹஸ்ஸதா - யஸ்ஸ்வதாரரதௌசாபி கோவிந்தமுபாஸ்மஹே.”

---

ஆழ்வார்களுக்கும் உடையவருக்கும் தீர்த்ததிவஸம்† சொல்லாதொழிவானென்னென்னில்:—அத்யாபி அகிலாத்மோத்தாரணார்த்தமாக அர்ச்சாவிக்ரஹங்களை அங்கீகரித்து இங்கே எழுந்தருளியிருக்கிறார்களாகையாலே. அன்றிக்கே, அவர்கள் இங்கினும்கால்வாங்கிப்போகில் ஆத்மகோடிகளுக்கு ஈடேற

(க) “రామానుజపదచ్ఛాయా గోవిన్దాహ్వాఽనపాయినీ । తదాయత్తస్వరూపా సా జీయాన్మద్విశ్రమస్థలీ.” (உ) “భట్టార్యాయప్రపత్తింవ్యపదిశదతులం ద్రావిడామ్నాయమౌళేరర్థం శ్రీభాష్యమన్యానపిచ యతివరాదేశతోఽన్యాన్ రహస్యాన్ । యశ్చోక్తో దేశికేన్ద్రైర్యతిపతిచరణచ్ఛాయనామార్యవర్యస్తంగోవిన్దార్యమస్మత్కులగురుమమితజ్ఞానవైరాగ్యమీడే.” (ங) “హృది నారాయణంపశ్యన్నాప్యగచ్ఛద్రహస్సదా । యస్స్వదారరతౌచాపిగోవిన్దంతముపాస్మహే.”

†‘சொல்லாதொழிவான்’ என்பதற்கு - ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிபாலித்து ப்ரஸித்தப்படுத்தாமலிருப்பது என்று பொருள்.

வழியில்லையிறே. இத்தை நினைத்திறே, நம்பூர்வாசார்யர்கள் தீர்த்தங்கொண்டாடித் திதிபரிபாலநம் பண்ணுதொழிகிறதும். (க) "ஆர்த்ராயாமுதிதோ மஹாபுரிஹதோ ஹஸ்த்யத்ரிமாத்தாஸ்ரமஸ் ஸ்ரீரங்கஸ்ரியமேத்யஸிஷ்யமஹிதோ வேதாந்தபாஷ்யம்வதந் - திப்ரோதிக்விஜயம்விதாயஸஹதைர்விப்ரைர்த்விபஞ்சாஸதைர் பாதி ஸ்ரீயதுபூதரே யதிவரஸ் ஸம்பத்குமாரம் பஜந்" என்று சித்திரையிற் செய்யதிருவாதிரையிலே ஸ்ரீபெரும்பூதூரிலே அகிலாத்மோத்தாரணார்த்தமாகவந்து அவதரித்து அகிலஸாஸ்த்ரங்களையும் அப்யஸித்து,பெருமாள்கோயிலிலே பேரருளாளர்நியமநத்தாலே பெரியநம்பியை ஆஸ்ரயித்துப் பஞ்சஸம்ஸ்காரங்களையும்பெற்று "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்கிறபடியே ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாகப் பேரருளாளர் ஸந்நிதியிலே ஆஸ்ரமப்ராப்திபண்ணியருளி, ஸ்ரீரங்கைஸ்வர்யத்தைப் பெற்று, ஸ்ரீபாஷ்யமருளிச்செய்து, திக்விஜயம்பண்ணித் திருவரங்கர்பரத்வத்தை நிலைநிறுத்தியருளி,புழுவன்வ்யாஜேந மேல்நாட்டுக்குளழுந்தருளித் திருநாராயணர்க்குஅனைத்தழகுங் கண்டருளப்பண்ணிச் செல்வப்பிள்ளையைப் பெற்றெடுத்து வந்து ப்ரதிஷ்டிப்பித்தருளி ஐம்பத்திருவர்க்காக அர்ச்சாவதாரரூபவிக்ரஹத்தை அங்கீகரித்து, அதிலே தம்ஸர்வஸக்தியையும் ப்ரதிஷ்டிப்பித்துக்கொண்டு அவர்களாலே ஸேவ்யமாநராய்ச் * செம்பொற்கழலடித் திருவுருச்செல்வப் பிள்ளையை மங்களாஸாஸநஞ்செய்துகொண்டு காலதத்வ முள்ளதனையும் இங்கே ஸுப்ரதிஷ்டிதராய் விளங்காநின்றுகொண்டு வாழ்ந்தருளுகிறுராய்த்து, உடையவர்.

---

## பட்டர் வைபவம்.

அநந்தரம் பட்டர் ஸ்ரீபாதத்துமுதலிகளுடனே பெருங்கூட்டத்திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து தர்ஸநம் நிர்வஹித்தருளுகிறகாலத்திலே, ஒருதீர்த்தவாஸிப்ராஹ்மணன் வந்து பட்டரைஸேவித்து அவருடையவேதாந்தோபந்யாஸ சாதுர்யத்தையும் கோஷ்டியின்வைபவத்தையுங் கண்டு நின்று 'பட்டரே! மேல்நாட்டிலே வேதாந்தியென்று ஒருபெரியவித்வா னிருக்கிறுன்; அவனுடைய வித்யையும் கோஷ்டியும்போலே உமக்கு மிருந்தது'என்ன, பட்டரும் ப்ராஹ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டருளி 'ஆமோ! அப்படியும் ஒருவித்வா னுண்டோ?' என்ன, 'உண்டு' என்றுசொல்லி அந்தப்ராஹ்மணன்இங்குநின்றும்புறப்பட்டு மேல்நாட்டுக்குப்போய் வேதாந்திகோஷ்டியிலேசென்று'வேதாந்திகளே! உம்முடையவித்யைக்கும்கோஷ்டிக்கும்ஸத்ருஸராய்ப் பட்டரென்பா ரொருவர் இரண்டாற்றுக்கும்நடுவே எழுந்தருளியிருக்கிறுர்' என்ன, வேதாந்திகளும் ப்ராஹ்மணனைப்பார்த்து 'ஆமோ! பட்டர் நமக்கு ஒத்த வித்வானே?' என்ன, அவனும் 'பட்டர் உம்மிலும் அதிகர்' என்ன, அவனும் 'அவருக்கு எந்தஸாஸ்த்ரம் போரும்?' என்ன, ப்ராஹ்மண

---

(க) "ఆర్ద్రాయాముదితో మహాపురిహతో హస్త్యద్రిమాత్తాశ్రమ శ్రీరఙ్గశ్రియమేత్యశిష్యమహితో వేదాన్తభాష్యంవదన్ । దిప్రోదిగ్విజయంవిధాయసహతైర్విప్రైర్ద్విపఞ్చాశతైర్ భాతి శ్రీయదుభూధరేయతివరస్సమ్పత్కుమారంభజన్."

னும் 'ஸப்த தர்க்க பூர்வோத்தரமீமாம்ஸை தொடக்கமான ஸகலஶாஸ்த்ரங்களும் பட்டருக்குப் போரும்' என்ன, வேதாந்தியும் இவன் சொன்னதைக் கேட்டு 'இவ்விபூதியிலே நமக்கு ஒருவரும் எதிரில்லை யென்று ஷட்தர்ஶநத்திற்கும் ஆஶ்ரஸநமிட்டு அதன்மேலே உயரவிருந்தோம்; பட்டர் நம்மிலும் அதிகரென்று ப்ராஹ்மணன் சொன்னானே!' என்று அன்றுதொடங்கித் திடுக்கிட்டிருந்தான்.

அவ்வளவிலே அந்தப்ராஹ்மணன் அங்குநின்றும் புறப்பட்டுக் கோயிலுக்குவந்து பட்டர்ஸந்நிதியிலே வந்து 'பட்டரே! உம்முடையவைபவமெல்லாம் வேதாந்திக்குச் சொன்னேன்' என்ன, பட்டரும் ப்ராஹ்மணனைக்குறித்து 'அவன் அதுக்கு என்னசொன்னான்?' என்ன, அவனும் 'பட்டருக்கு எந்தஶாஸ்த்ரம் போரு மென்று கேட்டான்' என்ன, பட்டரும் 'ப்ராஹ்மணா! அதுக்கு நீ வேதாந்திகளுக்கு என்னசொன்னாய்?' என்ன, அவனும் 'பட்டருக்கு ஸப்ததர்க்கங்களும் பூர்வோத்தரமீமாம்ஸைகளும் நன்றாகப்போருமென்று வேதாந்தியுடனே சொன்னேன்' என்ன,பட்டரும் அந்தப்ராஹ்மணனைக்குறித்து 'தீர்த்தவாஸியாய்த் தேஶங்களெங்கும் நடையாடி எல்லாருடைய வித்யாமாஹாத்ம்யங்களெல்லாம் அறிந்து நாகரிகனாயிருக்கிற நீ, நமக்குப்போருமதெல்லாம்அறிந்து வேதாந்திக்குச் சொல்லாமல் கேவலம் வேதாந்தஶாஸ்த்ரங்களே போரு மென்று தப்பச்சொன்னாயே!' என்ன, ப்ராஹ்மணனும் பட்டரைக்குறித்து 'இந்தலோகத்திலே நடையாடுகிற ஶாஸ்த்ரமொழிய உமக்கு மற்ற எதுபோரு மென்று வேதாந்திக்குச் சொல்லுவது?' என்ன, 'திருநெடுந்தாண்டகம் போருமென்று வேதாந்திக்குச் சொல்லாதிருந்தாயே!' என்று வெறுத்து அருளிச்செய்துவிட, அவனும் பின்னையும் மேல்நாட்டுக்குப்போய் வேதாந்தியுடனே இச்செய்தியைச் சொல்ல, வேதாந்தியும் 'திருநெடுந்தாண்டக மென்கிற ஸப்தத்திற்குத்தானே அர்த்தமாகிறதில்லை; அவர் எப்படிப்பட்ட வித்வானோ!' என்று விஸ்மயப்பட்டிருக்கச்செய்தே, பட்டரும் 'வேதாந்தியை நம்முடைய தர்ஶநத்திலே அந்தர்ப்பூதராம்படி திருத்துமென்று உடையவர்நியமித்தருளினது அவஶ்யம் கர்த்தவ்யம்' என்று தம் திருவுள்ளத்திலே கொண்டு,பெருமாள்ஸந்நிதியிலே சென்றுஸேவித்துநின்று 'நாயன்தே!மேல்நாட்டிலே வேதாந்தியென்றுஒருபெரியவித்வா னிருக்கிறான்; அவனைத் திருத்தி நம்தர்ஶநப்ரவர்த்தகனாம்படி பண்ணவேண்டு மென்று அங்கேறவிடைகொள்வதாக இராநின்றேன்; தேவரீர் அவனை நன்றாகத்திருத்தி ஸ்ரீராமாநுஜஸித்தாந்தத்திற்கு நிர்வாஹகனாம்படி திருவுள்ளம்பற்றியருளவேணும்' என்று பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியே யாகக்கடவன்; த்வரித்துப் போய்வாரும்' என்று திருவுள்ளமுகந்து தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டத்துடனே தம் குமாரரான வாசிதோன்ற அநேகம் திருவாபரணம் திருப்பரியட்டம் ந்ருத்தகீதவாத்யங்களையும் தமக்குஉண்டான ஸகல பரிஜநபரிச்சதங்களையும் கூட்டி, 'போம்' என்று விடைகொடுத்தருள,

பட்டரும் புறப்பட்டு மேல்நாட்டிலே யெழுந்தருளிக் காவேரிக்கரையிலே சிறுப்புத்தூரண்டையிலே நின்றருள, அநந்தாழ்வான் 'ஆழ்வான்குமா

ரர் பட்டர் எழுந்தருளினார்' என்றுகேட்டுச் சடக்கெனப் புறப்பட்டு எழுந்தருளித் திருக்காவேரிக்கரையிலே பட்டரைக் கண்டு ஸேவித்து 'ஐயோ! ஸுகுமாரரான நீர், காடும் மலையுங் கடந்து இத்தனைதூரம் எழுந்தருளலாமோ?' என்ன, பட்டரும் திருவடிகளிலே விழுந்து அநந்தாழ்வானை ஸேவித்து 'உடையவர் மேல்நாட்டிலேபோய் வேதாந்தியைத்திருத்தி நம்தர்மநப்ரவர்த்தகராம்படிபண்ணென்று நியமித்தருளினாரே; அப்படியே நம்பெருமாளும் விடைஸாதித்து அனுப்பியருளினார்' என்று விண்ணப்பஞ்செய்ய, அநந்தாழ்வானும் '*எங்கள் குடிக்கரசே! வாரும்' என்று பட்டரை எடுத்து அணைத்துக்கொண்டுபோய், (௧) "யாதவாத்ரேர்ஜிமமிஷா யேஷாங்கேஷாஞ்சவித்யதே - தேஷாந்தேஶே யமபடா: நமச்சந்தி கதாசந" என்று யதுஶைலயியாஸை யாவர் சிலர்க்கு உண்டாயிருக்கும், அவர்கள் வஸிக்குந் தேசத்தில் யமபடர் மறந்தும் புகுரார்களென்றும், (௨) "ஸஹஸ்ரஶிகரஸ்ஸோயம் ஸாக்ஷாச்சேஷாத்மகோகிரி: - வைகுண்டாதபியத்ராஹம் ரமயாஸஹிதோரமே" என்று ஸஹஸ்ரபணாமண்டலமுடைய திருவநந்தாழ்வானவதாரமான யதுகிரிஶிகரத்திலே ஸமஸ்த கல்யாண குணங்களும் குன்றிலிட்டவிளக்காய் ப்ரகாஶிக்கும்படி பரமபதத்தையும் திருப்பாற்கடலையும் உபேக்ஷித்து *அரவிந்தப்பாவையுந் தானுமாய் *அல்லிமலர்மகள் போகமயக்குக்களாய் நிற்க (௩) "வைகுண்டவாஸிநஸ்ஸர்வே ஶேஷஶேஷாஶநாதய:- திர்யக்ஸ்தாவரஜந்மாநி ஶ்ரயந்தேயதுபூதரே" என்று*வைகுந்தநாட்டில் வாழும் ஸேனைமுதலியார் திருவநந்தாழ்வான் முதலான நித்யமுக்தரெல்லாரும்திருநாடு*புல்லெழுந்து போம்படி குடிவாங்கிவந்து இஸ்ஸௌஶீல்யஸௌலப்யாநுபவார்த்தமாகத் திர்யக்ஸ்தாவரஜந்மங்களைப் பரிக்ரஹித்து ஸுப்ரதிஷ்டிதராய் இங்கே வர்த்திக்கிறார்களென்றும் சொல்லும்படியானவைபவத்தையுடைய யாதவாத்ரியைக்கிட்டி, சேதநன் பாதபீடத்திலேவறும் பாவனைகொண்டு செம்பொன்யதுகிரியேறித் திருக்கல்யாணஸரஸ்ஸைக்கிட்டி,(௪) "காலேகாலேசஸேவந்தாம் கல்யாணீதீர்த்தமத்புதம்-யத்ரதீர்த்தேநிமஜ்ஜந்தோ யதயஸ்ஸம்ஶிதவ்ரதா:-உந்மஜ்ஜந்திபவாம்போதி கல்லோலகலஹாந்தராத்-புஷ்கரேநததாப்ரீதிர் நகங்காயாம்

(௧) "యాదవాద్రేర్జిగమిషా యేషాం కేషాఞ్చవిద్యతే। తేషాం దేశే యమభటాః నగచ్ఛన్తి కదాచన."(௨) "సహస్రశిఖరస్సోయం సాక్షాచ్ఛేషాత్మకోగిరిః। వైకుణ్ఠాదపియత్రాహం రమయాసహితోరమే."(௩) "వైకుణ్ఠవాసినస్సర్వే శేషశేషాశనాదయః। తిర్యక్స్థావరజన్మాని శ్రయన్తేయదుభూధరే."(௪) "కాలేకాలేచసేవన్తాం కల్యాణీ తీర్థమద్భుతం। యత్రతీర్థే నిమజ్జన్తో యతయస్సంశితవ్రతాః। ఉన్మజ్జన్తి భవాంభోధి కల్లోలకలహాన్తరాత్ ॥ పుష్కరేన తథా ప్రీతి ర్నగఙ్గాయాం నయామునే। యథాకల్యాణతీర్థస్య తీర్థే కల్యాణచేతసాం॥ తీర్థేత త్రాపులేస్నాత్వా ముచ్యన్తే సర్వకిల్బిషైః। నాస్తికశ్చ కృతఘ్నశ్చ పరివాద పరోపిచ। పరప్రశంసానిష్ఠశ్చ స్వప్రశంసాపరాయణః॥ యజ్ఞవిఘ్నకరశ్చైవ వేదాధ్యయనదూషకః। పరదారానురక్తశ్చ పాకభేదకరోపిచ॥ పరద్రవ్యాపహారీచ పాషణ్డాగమతత్పరః। శూద్రాన్నభక్షకశ్చైవ శ్వాదీనాముపలాళకః॥ ధర్మవిక్రయశీలశ్చ శ్రాద్ధభుగ్గ్రామయాజకః। దేవతాద్రవ్యహారీచ దర్పదమ్భసమన్వితః॥ గవాంక్లేశకరశ్చాపి బ్రాహ్మణానాఞ్చనిన్దకః। విష్ణుభక్తివిహీనీచ వృషలీపతిరేవచ."

நயாமுநே-யதாகல்யாணதீர்த்தஸ்ய தீர்த்தேகல்யாணசேதஸாம் - தீர்த்தேதத்ராமலேஸ்நாத்வா முச்யந்தேஸர்வகில்பிஷை꞉ - நாஸ்திகஶ்சக்ருதக்நஶ்ச பரீவாதபரோபிச - பரப்ரஶம்ஸாகிஷ்டஶ்ச ஸ்வப்ரஶம்ஸாபராயண꞉ - யஜ்ஞவிக்நகரஶ்சைவ வேதாத்யயநதூஷக꞉ - பரதாராநுரக்தஶ்ச பாகபேதகரோபிச - பரத்ரவ்யாபஹாரீச பாஷண்டாஶ்ரமதத்பர꞉ - ஶூத்ராந்நபக்ஷகஶ்சைவ ஶ்வாநாமுபலாளக꞉-தர்மவிக்ரயஶீலஶ்ச ஶ்ராத்தபுக்க்ராமயாஜக꞉-தேவதாத்ரவ்யஹாரீச தர்ப்படம்பஸமந்வித꞉ - ஶவாங்க்லேஶகரஶ்சாபி ப்ராஹ்மணாநாஞ்சநிந்தக꞉ - விஷ்ணுபக்திவிகாதீச வ்ருஷலீபதிரேவச" என்று இப்படிப் பட்டிருக்கிறவர்களுடைய பாபங்களைப் போக்கவல்ல திருக்கல்யாணியிலே நீராடிக் கேஶவாதியான பன்னிரண்டுதிருநாமஞ் சாத்தியருளி எழுந்தருள, அங்கிருந்த ஐம்பத்திருவர் முதலான அனைவரும் சடகோபன்முன்னிலையாக வந்து எதிர்கொள்ள, பட்டரும் ஸாஷ்டாங்கமாக ஸேவித்துத் திவ்யநகரிக்குள்ளேயெழுந்தருளிச் சதுராநநகோபுரத்தைஅஞ்சலித்து உள்ளேபுகுந்து, ஸ்ரீபலிபீடத்தருகே * தாளுந் தடக்கையுங் கூப்பித் தண்டன்ஸமர்ப்பித்து, உடையவர்ஸந்நிதிக்கு எழுந்தருளி (க) "யோநித்யம்" என்று தொடங்கி (உ)"ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே" என்று ஸேவித்து ராமாநுஜ திவாகரரையுந் திருவடிதொழுது வாழ்த்தித் தீர்த்தப்ரஸாதங்களும் பெற்று அவர்புருஷகாரமாக ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி (ங) "பஶ்சாதபிவிமாநஸ்ய ப்ராகாராந்தரமத்யத꞉ - ஸுதர்ஶநஞ்சலக்ஷ்மீஶ்ச வர்த்தேதேஸர்வகாமதே" என்று சொல்லப்பட்ட திருவாழியாழ்வானையும் யதுகிரிநாச்சியாரையும் ஸேவித்து, ஆநந்தமயமான திவ்யவிமாநத்தையுந் தொழுது, உள்ளேயெழுந்தருளி ஸாஷ்டாங்கமாக ஸேவித்து, நம்மாழ்வாரையும் திருமங்கையாழ்வாரையும் ஸேவித்து, செல்வப்பிள்ளையையுந் திருவடிதொழுது அவ்விக்ரஹஸௌந்தர்யத்திலே ஆழங்கால்பட்டுநிற்க, செல்வப்பிள்ளையும் உகந்து தீர்த்தம் திருமாலை சடகோபன் ப்ரஸாதித்தருளப் பெற்றுப் புறப்பட்டு, ஸேனைமுதலியாரையுந் திருவடிதொழுது, சண்டப்ரசண்டர்களான த்வாரபாலகர்களநுமதி கொண்டு உள்ளேசென்று திருப்பல்லாண்டை அநுஸந்தித்துத் திருநாராயணப்பெருமாளைப் பாதாதிகேஶாந்தமாக ஸேவித்து அஞ்சலித்துநிற்க, திருநாராயணரும் மிகவும்உகப்போடே பட்டருக்குத் திருமாலை திருப்பரியட்டம் தீர்த்தம் சடகோபனும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருள, பட்டரும் அநந்தாழ்வானுடனே புறப்பட்டு எழுந்தருளி, வேதாந்திகளிருக்கிற ஊர் ஆஸந்நமானவாறே 'ஆழ்வான்குமாரர் பட்டர் வந்தார், அணியரங்கன்குமாரர் பட்டர் வந்தார், வேதாந்தாசார்யபட்டர் வந்தார், வேதியர்கள்தனித்தலைவர் வந்தார், ஸ்ரீபராஶரபட்டர் வந்தார், பரவாதிமதஹஸ்தி பஞ்சாநநர் வந்தார்'என்று பல திருச்சின்னம் பணிமாறுகை முதலான தூர்யகோஷத்துடனே பெருந்திரளாக மஹாஸம்ப்ரமத்துடனே ஸர்வாபரணபூஷிதராய், சத்ர சாமர தாலவ்ருந்தாதிகள் ஸேவிக்க மணிப்பல்லக்கிலே எழுந்தருளாநிற்க, அவ்வளவிலே

---

(க) "యోనిత్యం." (உ) "రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే." (ங) "పశ్చాదపి విమానస్య ప్రాకారాన్తరమధ్యతః। సుదర్శనం చ లక్ష్మీశ్చ వర్తతే సర్వకామదే."

இரண்டு ப்ராஹ்மணர்கள் எதிரேவந்து பட்டரைப் பார்த்து 'நீர் ஆர்? அநேகம் ஸம்ப்ரமத்துடனே வந்தீர்; எங்கேற எழுந்தருளுகிறீர்?' என்றுகேட்க, பட்டரும் 'நாம் ஸ்ரீரங்கராஜபட்டர்; வேதாந்திகளுடனே தர்க்கிக்கப் போகிறோம்' என்ன, அந்தப்ராஹ்மணர்கள் சொன்னபடி:—'நீர் இப்படி ஸம்ப்ரமத்துடனே எழுந்தருளினால், வேதாந்திகளை உமக்குக் காணப்போகாது காணும்; அவர் க்ருஹத்துக்குள்ளே இருந்துவிடுவர்; அவருடைய ஶிஷ்யப்ரஶிஷ்யர்கள் தலைவாசலிலே யிருந்து வந்தவித்வான்களுடனே நாலாறுமாஸம் தர்க்கித்து அவர்களை உள்ளே புகுரவொட்டாதே புறம்பே தள்ளிவிடுவர்கள்' என்ன, பட்டரும் அந்தப்ராஹ்மணரைப் பார்த்து 'ஆகில், நாம் நேரே சென்று அவர்க்ருஹத்திலே புகுந்து வேதாந்திகளைக் காணும் விரகு என்?' என்று கேட்டருள, அவர்கள் சொன்னபடி:— 'வேதாந்திகள் தநவானாகையாலே † அவாரியாக ப்ராஹ்மணருக்கு ஸத்ரபோஜநமிடுவர்; அந்த ஸத்ரபுக்ப்ராஹ்மணரோடே கலசி அவர்கள்வேஷத்தையுந் தரித்துக்கொண்டு உள்ளேசென்றால், புஜிக்கவருகிற ப்ராஹ்மணரை நிரீக்ஷித்திருப்பர்; அங்கே வேதாந்திகளைக் காணலாம்; ஆகையாலே, உம்முடைய ஸம்ப்ரமங்களையெல்லாம் இங்கே நிறுத்தி நீரொருவருமே ஸத்ராஶிகளுடனே உள்ளே எழுந்தருளும்' என்று சொல்லிப் போனார்கள்.

அநந்தரம் பட்டரும் 'இவர்கள்சொன்னது கார்யமாம்' என்று திருவுள்ளம்பற்றி, தம்முடைய அனைத்துப்பரிகரத்தையும் ஊருக்குத் தூரத்திலே நிறுத்தி, தாம் சாத்தியிருந்த ஸர்வாபரணங்களையும் களைந்துவைத்து ஒரு அரசிலைக் ‡ கல்லையைக் குத்தி யிடுக்கிக்கொண்டு, காவிவேஷ்டியும் தரித்து ஒருகமண்டலமும் கையில்தூக்கிக்கொண்டு அநந்தாழ்வானும் தாமுமாய் ஸத்ராஶிகளுடனேகூடிக் கார்ப்பண்யவேஷத்துடனே உள்ளேஎழுந்தருள, வேதாந்திகளும் ப்ராஹ்மணர் புஜிக்கையைப் பார்த்துக்கொண்டு ஒருமண்டபத்திலே ஆறுஆஸநமிட்டு அதன்மேலே பெரியமதிப்புடனே இராநிற்க, ப்ராஹ்மணரெல்லாரும் ஸத்ரஶாலையிலே புகுர, பட்டர் அங்கே எழுந்தருளாமல் வேதாந்திகளைநோக்கி யெழுந்தருள, வேதாந்திகளும் 'பிள்ளாய்! இங்கு என் வருகிறீர்?' என்ன, பட்டரும் 'பிக்ஷைக்கு வருகிறேன்' என்ன, 'எல்லாரும் புஜிக்கிறவிடத்திலே போகீர், பிக்ஷைக்கு' என்ன, பட்டரும் 'எனக்குச் சோற்றுப்பிக்ஷையன்று' என்ன, வேதாந்திகளும் 'இவர் ஸத்ராஶியானாலும் கிஞ்சித் வித்வானாகக்கூடும்' என்று விசாரித்து "கா பிக்ஷா?" என்ன, பட்டரும் "தர்க்கபிக்ஷா" என்ன, வேதாந்திகள் இத்தைக்கேட்டுத் திடுக்கிட்டு 'முனமே தீர்த்தவாஸிப்ராஹ்மணன் வந்து நமக்குச்சொன்ன பட்டரல்லது நம்முன்னே வந்து கூசாமல் நின்று தர்க்கபிக்ஷை யென்று கேட்கவல்லவர் இந்தலோகத்தி லொருவரு மில்லை; வேஷம் கார்ப்பண்யமாயிருந்ததேயாகிலும் இவர் பட்டராகவேணும்' என்று நிஶ்சயித்து, 'நம்மைத் தர்க்கபிக்ஷை கேட்டீர்; நீர் பட்டரோ?' என்ன, இவரும் 'ஆம்'என்று கமண்டலம் கல்லை காவிவேஷ்டி இவற்றையெல்லாம் சுருட்டியெறிந்து எழுந்தருளி

---

† அவாரியாக - தடையில்லாமல்: தேசவழக்குச்சொல்.

‡ கல்லையைக்குத்தியிடுக்கிக்கொண்டு-தொன்னையைத் தைத்துஎடுத்துக்கொண்டு.

யிருந்து மஹாவேகமாக உபந்யஸிக்க, அவ்வளவிலே வேதாந்திகளும் பட்டர்வைபவங் கேட்டிருந்தும் 'இவர் வித்யாமாஹாத்ம்யங் காணவேணும்' என்று இவருடனே தர்க்கிக்க,இப்படி ஒருவர்க்கொருவர் மத்தவாரணம்பிணங்குமாபோலே தர்க்கிக்க, இங்ஙனே ஒன்பதுநாள் சென்றபின்பு பத்தாம்நாள் பட்டர் தர்க்கிக்கச்செய்தே மாயிஸித்தாந்தத்தை ஶததாவாகக்கண்டித்து விஶிஷ்டாத்வைதபரமாக உபந்யஸிக்க, இத்தைக்கண்ட வேதாந்திகள் எழுந்திருந்துநின்று நடுங்கி வேறொன்றுஞ்சொல்லாதே 'மநுஷ்யமாத்ரமேயென்றிருந்தேன்; நம்பெருமாளென்ன நீரென்ன பேதமில்லை; உறங்கும்பெருமாள் அவர்,உலாவும்பெருமாள் நீர்; ஆனபின்பு வாய்திறந்தொருவார்த்தைசொல்லக்கூடாது'என்று அரைகுலையத் தலைகுலையவந்து பட்டர்திருவடிகளிலே அடைவுகெடவிழுந்து ஸேவித்து 'அடியேனை இரங்கியருளவேணும்'என்று மிகவும் அநுவர்த்திக்க,பட்டரும்,தாம்எழுந்தருளின கார்யம் அதிஶீக்ரமாகப் பலித்தவாறே, மிகவுந் திருவுள்ளமுகந்தருளி வேதாந்திகளை அங்கீகரித்தருளி, அவருக்கு (க) "அர்த்தபஞ்சகதத்வஜ்ஞா: பஞ்சஸம்ஸ்காரஸம்ஸ்க்ருதா:-ஆகாரத்ரயஸம்பந்நா மஹாபாகவதாஸ்ஸ்ம்ருதா:" என்று சொல்லப்பட்ட தாபபுண்ட்ராதி பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்து அர்த்தபஞ்சகஜ்ஞாநத்தையு முண்டாக்கி, ஆகாரத்ரயஸம்பந்நரான மஹாபாகவதோத்தமராக்கி விஶேஷகடாக்ஷஞ்செய்தருளி, 'வேதாந்திகளே! நீர் ஸர்வஜ்ஞரா யிருந்தீர்; ஆகையாலே, நாம் உமக்குப் பரக்கச்சொல்லலாவதொன்று மில்லை; விஶிஷ்டாத்வைதமே பொருள்; நீர் மாயாவாதரீதியை ஸவாஸநமாக த்யஜித்து, ஶ்ரிய:பதியைப்பற்றி ஸ்ரீராமாநுஜஸித்தாந்தத்தையே நிர்வஹித்துப்போரும்' என்று அருளிச்செய்து ஆழ்வார்கள் அருளிச்செயல் நாலாயிரமும் ஓதும்படி நியமித்தருளி, 'இனி நாம் நம்பெருமாளைஸேவிக்கப்போகிறோம்' என்று உத்யோகித்துப் புறப்பட்டவளவிலே, ஊருக்குப் புறம்பே நிறுத்தின அனைத்துப் பரிகரமும் ஊரிலே வந்து அவர்கள் மஹாஸம்ப்ரமத்துடனே பட்டரைச் சூழ்ந்துஸேவித்துப் பூர்வம்போலே ஸர்வாபரணங்களாலும்பூஷித்துஒப்பித்து மணிப்பல்லக்கிலே யேற்றி உபய சாமர தாலவ்ருந்தாதிகள் பரிமாற, ஸகல வாத்யங்களும் முழங்க,திருச்சின்னம்பணிமாறிப் புறப்படக்கண்டு,வேதாந்திகள் பட்டருடைய பெருமையையும் ஸம்பத்தையும் நன்றாகக் கண்குளிர நோக்கி 'இந்தஸ்ரீமாந் இத்தனைதூரம் காடும் மலையும் கஷ்டமுங் கடந்து எழுந்தருளி, நித்யஸம்ஸாரிகளிலுங் கடைகெட்டு ம்ருஷாவாதியா யிருந்த அடியேனுடைய துர்க்கதியே பற்றாசாக அங்கீகரித்தருளுவதே!' என்று மிகவும் வித்தராய்க் கண்ணும் கண்ணீருமாய்க்கொண்டு பட்டர்திருவடிகளிலே விழுந்து க்லேஶித்து, 'பெரியபெருமாள்தாமானதன்மையாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளையுடையராய் எழுந்தருளின தேவரீர், 'அநாதிகாலம் தப்பித்திரிந்து * அலம்புரிந்த நெடுந்தடக்கைக்கும் எட்டாதபடி கைகழிந்துபோன இவ்வாத்மா இன்னும் தப்பிப்போம்' என்று திருவுள்ளம்பற்றியருளி, இப்படி அதிகார்ப்பண்யமாயிருப்பதொரு வேஷத்தையும் தரித்துக்கொண்டு

(க) "అర్థపఞ్చకతత్వజ్ఞాః పఞ్చసంస్కారసంస్కృతాః । ఆకారత్రయసంపన్నా మహాభాగవతాస్స్మృతాః"

ஸத்ராப்திகளுடனே கூட எழுந்தருளி, அதிதுர்மாநியான அடியேனை அங்கீ கரித்தருளின அந்தவேஷத்தை நினைத்தால்,அடியேனுக்குப் பொறுக்கப்போ கிறதில்லை' என்றுசொல்லி வாய்விட்டழுதுகொண்டு திருவடிகளிலேவிழுந்து கிடக்க, பட்டரும் வேதாந்திகளை முடிபிடித்தெடுத்து நிறுத்தித் தேற்றி 'நீர் இங்கே ததீயாராதனைகபரராய் ஸுகமேயிரும்' என்று அருளிச்செய்து கோ யிலைநோக்கிப்புறப்பட்டு எழுந்தருளாநிற்க, "மின்னுமாமுகில்மேவுதண்டிரு வேங்கடம்" என்கிறபடியே அம்புதரசும்பியதுபூதரஸ்ருங்கநிலயனுன நரஸி ம்ஹதிவ்யவிமாநம் தூரத்திலே தோன்றக் கண்டு அஞ்ஜலித்துப் பின்னையும் திருநாராயணபுரம் வழியாக எழுந்தருளி, அநந்தாழ்வான்முன்னிலையாக நயநம் நாரஸிம்ஹம் †கிரிபரிப்ருடஸ்தாநம் ஸீதாரண்யம் ஜ்ஞாநாஸ்வத்த மாகிற பஞ்சபாகவதஸ்தலம் ஸ்வேதம்ருத் பரிதாநசிலை ஆகிற ஸப்தக்ஷேத்ரங் களையும், வேதபுஷ்கரிணி தர்ப்பதீர்த்தம் பலாஸதீர்த்தம் பத்மதீர்த்தம் யாதவமஹாநதி வைகுண்டகங்காதீர்த்தம் நாராயணதீர்த்தம் மைத்ரேய குண்ட தீர்த்தங்களையும் ஸேவித்து அவமாஹித்து,இவற்றின் மத்யகதமான திருக்கல்யாணியிலே நீராடி, கேஸவாதித்வாதஸோர்த்வபுண்ட்ரதரராய், முன்புபோலே ஸேவாக்ரமந் தப்பாமல் ஸேவித்துத் தீர்த்தப்ரஸாதங்களும் பெற்றுப் புறப்பட்டுத் திருமலையிறங்கி எழுந்தருளி, சிறுப்புத்தூரிலே அநந்தாழ்வானை நிறுத்தி,பயணகதியிலேத்வரித்துக் கோயிலுக்குளெழுந்தருளி, திருக்காவேரியிலே நீராடியருளி த்வாதஸோர்த்வபுண்ட்ரதரராய்,ஸகலபரிஜந பரிச்சதங்களோடே 'வேதாந்தாசார்யபட்டர்வந்தார், வேதாந்திகளைவென்ற வீரகர் வந்தார்' என்று திருச்சின்னம் பணிமாற,*அணியரங்கன்திருமுற்றத் தடியார் எதிர்கொள்ள எழுந்தருளி, ஸேவாக்ரமந் தப்பாமல் ஸேவித்துக் கொண்டு உள்ளேபுகுந்து, * மாயோனை மணத்தூணேபற்றிநின்று வாயார வாழ்த்திநிற்க, பெருமாளும் பெரியபிராட்டியோடே திருமாலை திருப்பரியட்டம் தீர்த்தம் சடகோபனும் ப்ரஸாதித்துத் திருமாளிகையிலே போகவிட்டருள, பட்டரும் தம்திருமாளிகையிலே எழுந்தருளி, அங்கே ஆண்டானை ஸேவி த்து ஸ்ரீபாதத்துமுதலிகளுக்குத் தர்ஸநார்த்தம்நிர்வஹித்துக்கொண்டு எழுந் தருளியிருந்தார்.

அநந்தரம், அங்கே கங்கோஸ்ரியிலே வேதாந்திகள் * திருமாலடியார்க ளைப் பூசித்துக்கொண்டிருக்கும் நாளிலே, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் இளை த்து வேதாந்திகள்திருமாளிகைக்கு எழுந்தருளி 'க்ஷுத்து நலியாநின்றது' என்று அமுதுசெய்யத் தேட, வேதாந்திகள்தேவிக ளிருவரும் பார்த்து 'உங் கள்வேதாந்திகள் தீர்த்தமாடப் போனார்; இங்கு ஒன்று மில்லை; நீங்கள் அங் கேறப் போங்கோள்' என்றுசொல்லி உதாஸீநம்பண்ணிவிட, அந்தஸ்ரீவைஷ் ணவர்களும் வேதாந்திகள்பக்கல்சென்று இத்தை அறிவிக்க, அவரும் அது கேட்டுஅநுதபித்துத் தம்திருமாளிகையிலே எழுந்தருளித் தேவிகளிருவரை யுஞ் சீறி அப்போதே புறப்பட்டுக் கோயிலுக்கு எழுந்தருளத் தேட, அங் குள்ளவர்கள் வேதாந்திகளைப் போகவொண்ணாதென்று தகைய, இவரும் தம க்கு நிரவதிகதநமுண்டாகையாலே அத்தை மூன்றுஅம்ஸமாகப் பிரித்து இர

† 'ஹரிப்ரஹ்மமஹாஸ்தாநம்' என்று ப்ரதிபேதம்.

ண்டுதேவிகளுக்கும் இரண்டுஅம்ஶங்கொடுத்து மற்றையம்ஶத்தை ஸ்வாசார்ய ருக்காக எடுப்பித்துக்கொண்டுஅத்தேசத்தையும் ஸவாஸநமாக விட்டு, "இல் லறமல்லேல் துறவறம்" என்று அதிதிஸத்காரயோக்யையல்லாத பார்யை யை த்யஜித்து ஸந்ந்யஸிக்கக்கடவன்' என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே ஸர்வஸங்கபரித்யாகபூர்வகமாக அங்கே ஸந்யஸித்தருளிக் கோயிலைநோக்கி எழுந்தருளாநிற்கச்செய்தே திருக்காவேரிக்கரையி லுள்ள சிறுப்புத்தூரி லே அநந்தாழ்வானைக் கண்டு ஸேவித்துநிற்க, அநந்தாழ்வானும் 'வாரீர் வே தாந்திகளே! ஸுகுமாரரான நீர் இங்ஙனே செய்யலாமோ? வேர்த்தபோது நீராடிப் பசித்தபோது அமுதுசெய்து பட்டர்திருவடிகளே ஶரணமென் றிரு ருந்தால், உம்மைப் பரமபதத்தினின்றும் தள்ளிவிடுவாருண்டோ? இனியென்! திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்ட ராவீர்' என்று ஆஶீர்வதித்து, 'போம்' என்று விட்டார்; அதாவது - திருமந்த்ரம் ஆத்மஸ்வரூபபரமாகையாலே ஶேஷத்வ ஜ்ஞாநோத்பத்தியாகிற ஆபிஜாத்ய முண்டாய், த்வயத்திலும் ஸ்ரீமச்சப்தோக்தமான பெரியபிராட்டியார் புருஷ காரத்தாலே வர்த்தமாநார்த்தத்திலே வர்த்தித்து, உத்தரவாக்யோக்தங்களைப் பற்றக் கைங்கர்யைகநிஷ்டராவீ ரென்று சொன்னபடி.

வேதாந்திகளும் பயணகதியிலேபோய்க் கோயிலிலே யெழுந்தருளிப் பட்டர்திருவடிகளிலே ஸேவித்து, தாம்கொண்டுவந்த தநத்தைத் தம்மதென் கிற அபிமாநத்தை விட்டுப் பட்டருக்கு இஷ்டவிநியோகார்ஹமாம்படி அவர் திருவடிகளிலே ஸமர்ப்பித்து நிர்மமராய் நிற்க, அவ்வளவிலே பட்டரும் மிக வும் உகந்தருளி 'நம்முடைய சீயர் வந்தார்' என்று வாரியெடுத்துக் கட்டிக் கொண்டருளி ஒருக்ஷணமும் பிரியாமல் தம்முடையஸந்நிதியிலே வைத்துக் கொண்டு ஸகலார்த்தங்களையும் ப்ரஸாதித்தருள, சீயரும் பட்டரையல்லது மற்றொரு தெய்வம் அறியாதிருந்தார்.

பட்டரும் நம்முடைய சீயரென்றுசொல்லி அணைத்துக்கொண்ட அன்று தொடங்கி வேதாந்திகளுக்கு 'நஞ்சீயர்' என்று திருநாம முண்டாய்த்து.

நஞ்சீயர் பட்டரைப் பார்த்து 'பெருமாள் சந்த்ரபுஷ்கரிணிக்கரையிலே கண்வளர்ந்தருளுகிறதற்குத் திருவுள்ளக்கருத்து என்?' என்று விண்ணப் பஞ்செய்ய, பட்டரும், '*நாராயணாவோ! மணிவண்ணா! நாகணையாய்!' என்று கூப்பிட்டபின்பிறே அந்தமடுவின்கரையிலே எழுந்தருளினது; இங்குக் கண் வளர்ந்தருளுகிறது நான் கூப்பிடுவதற்குமுன்னே என்னை எடுக்கைக்காக, நான் அகப்பட்ட பொய்கைக்கரையிலே ஏற்கவேவந்து கண்வளர்ந்தருளுகிறு ணித்தனை; நீர் இவ்வர்த்தம்கேட்டது, உம்முடைய வசத்தாலே யன்றுகாணும்; உம்மைக்கொண்டு நம்பெருமாள் என்னினைவை வெளியிட்டருளினார்' என்று அருளிச்செய்தார்; அதாவது - பகவதவதாரங்களடங்க ஸ்வார்த்தமாக என்றிறே ஜ்ஞாநாதிகர் அநுஸந்திப்ப ரென்றபடி.

நஞ்சீயர் பட்டரை ஸ்ரீபாதந்தாங்குவதாகத் தோளிலே தண்டை வைக் கப்புக, பட்டரும் 'உம்முடை யவேஷத்திற்கு இது விருத்தங்காணும்' என்று அருளிச்செய்ய, சீயரும் 'அங்குத்தையடிமைக்கு ஏகாந்தமென்று இவ்வேஷ த்தைப் பரிக்ரஹம்பண்ணினேன்; அதுதானேஇதற்குவிரோதமாகில், பழைய

வெள்ளையை யுடுக்கிறேன்' என்று விண்ணப்பஞ்செய்தார்; அதாவது-ஆசார்ய கைங்கர்யத்திற்கு அநுரூப மாகாத வர்ணாஶ்ரம தர்மமும் பரித்யாஜ்ய மென்றபடி.

பட்டர் குடும்பஸஹிதமாகக் கூரகுலோத்தமனிலே எழுந்தருளியிருக்கிறவளவிலே திருநந்தவநத்தில் அல்பம் உபஹதியுண்டாக, திருநந்தவநஞ் செய்கிற ஏகாங்கிகள் சிலவார்த்தைகள் சொன்னார்களென்று நஞ்சீயர் கேட்டருளி, ஏகாங்கிகளை யழைத்து 'நம்பெருமாள்திருக்குழற்கற்றை சிக்கு நாறுகிறதென்றோ நான் திருநந்தவநஞ் செய்கிறது? பட்டருடைய குடும்பத்திற்கு இஷ்டவிநியோகார்ஹ மாகவேணு மென்று திருநந்தவநவ்யாஜேந கோலினே னித்தனையன்றோ!' என்று அவர்களைச் சீறி விட்டருளினார்; இத்தால், ஆசார்யபரதந்த்ரன் பகவத்கைங்கர்யம்பண்ணக் கோலுவதும் ஆசார்ய கைங்கர்யார்த்தமாக வித்தனை யென்று கருத்து.

அநந்தரம் பட்டர் திருவணையாட எழுந்தருளுகிறபோது, பகலெல்லாம் வழிநடந்தருளின ஆயாஸத்தாலே விட்டதொரு தூற்றடியிலே நஞ்சீயர்மடியிலே திருமுடியைவைத்துக் கண்வளர்ந்தருள, ஓரிரவெல்லாம்துடைமாறுதல் அசைத்தல் செய்யாதே இருந்தருளினார்; ஆகையாலே, ஆசார்யவிஷயத்திலே சைதந்யம் மூச்சற்றுப் படுக்கையாய் அடிமைசெய்கை ஶிஷ்யஸ்வரூபஸித்தி யென்கிறது.

திருவணையாடி மீண்டு எழுந்தருளுகிறபோது ஸாயங்காலமானவாறே பாதிரியென்கிற க்ராமத்திலே போய் ஒருவேடனகத்தே எழுந்தருளப்புக்கவாறே, அவனும் தானிருந்த ஆஸநத்தையும் வாங்கிப்போகட்டு இவர்க்கு ஒருகட்டிலே அமைத்துக்கொடுக்க, அதின்மேலே எழுந்தருளியிருந்து 'இவன் நம்முடைய வைபவ மறிந்து செய்தா னல்லன்; க்யாதிபரனாய்ச் செய்தா னல்லன்; நம்மால் உபக்ருதனாய்ச் செய்தா னல்லன்; தன்னுடைய க்ருஹத்திலே புகுந்தோமென்னும் அபிமாநமிறே இவன் இவ்வளவுசெய்யவேண்டிற்று. ஈஶ்வரன் தன்அபிமாநத்திலே ஒதுங்கினாரை என்னநினைத்திருக்கிறானோ?' என்று அநுஸந்தித்தருளி, பின்பு அந்தக்ருஹமுடையவனைக்குறித்து 'இங்கு விஶேஷம் ஏது?' என்று கேட்டருள, அவனும் 'நாயன் தே! நான் காட்டிலே வேட்டைக்குப் போனேன்; அங்கே ஒருமுசல்குட்டியைப் பிடித்தேன்; அதனுடைய தாயானது எம்முன்னேவந்து வழியிலே எதிரே கும்பிட்டுக்கொண்டு கிடந்தது; அத்தைக்கண்டு எனக்குத் தயைபிறந்து அதின்குட்டியை விட்டுப்போந்தேன்' என்றான். அத்தைக்கேட்டு இவரும் 'ஒருசேதநனுக்கு இல்லாததொன்று, பரமசேதநனுக்கு உள்ளதொன்று! (க) "மாமேகம்ஶரணம் வ்ரஜ" என்று அம்முசலுக்கு உபதேஶித்தாருமில்லை; (உ) "அரி:ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:க்ருதாத்மநா" என்று இவ்வேடனுக்கு உபதேஶித்தாருமில்லை; அவ்வ்யவதாநேந ஶரணாகதி பலிப்பதே! இதொரு ப்ரமாணஸித்தி இருந்தபடியே!' என்று நஞ்சீயர்க்கு அருளிச்செய்து, கோயிலுக்குளெழுந்தருளிப் பூர்வம்போலே வ்யாக்யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

---

(க) "మామేకం శరణం వ్రజ." (உ) "అరిః ప్రాణాన్ పరిత్యజ్య రక్షితవ్యః కృతాత్మనా."

அக்காலத்திலே வீரஸுந்தரப்ரஹ்மராயன் பெருமாளுக்குத் திருமதிள் கட்டுவிக்கிற நேரிலே பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகை யகப்பட, 'அவர் திருமாளிகையை யிடித்துத் திருமதிள்கட்டவேணும்' என்று வீரஸுந்தரன் சொல்ல, பட்டரும் 'உம்திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம்? அவர்மங்களாஶாஸநமிறே ரக்ஷகம்; ஆகையாலே, முன்பு திருமங்கையாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலைகட்டுகிற ஸ்தாநத்தைத் தப்ப ஒதுங்கத் திருமதிள் கட்டவில்லையோ? நீரும் இப்போதும் அப்படியே அவர் திருமாளிகையை விட்டு ஒதுங்கத் திருமதிள்கட்டிவையும்' என்றுசொல்ல, வீரஸுந்தரனும்ஆசார்யபுத்ரரென்று அஞ்சாதே அவர்வார்த்தையை அதிக்ரமித்து ஆழ்வான்திருமாளிகையை யிடித்துத் திருமதிள் கட்டிவைத்துப் பட்டரைத் தந்மூலமாகக் கோயிலிலேயிருக்கவு மொட்டாதே மிகவும் உபத்ரவிக்க, பட்டர் கோயிலினின்றும் புறப்பட்டுத் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளும்போது வழியிலே இளைத்தருளி 'நஞ்சீயர் இப்போது வருவதுங் காணேன்' என்ன, நஞ்சீயரும் 'சீயா! சீயா!' என்று அழைத்துக்கொண்டு கட்டுத்திருப்போனகமும் தண்ணீரமுதும் கொண்டு ஓடிவந்து சடக்கென அமுதுசெய்யப்பண்ணிவைத்து இளைப்பாற்றிவைக்க, பட்டரும் நஞ்சீயருக்கு அப்போதும் ஒருவிஶேஷகடாக்ஷஞ் செய்தருளினார்; ஆகையாலே, அநுவர்த்தநவிஶேஷங்களாலே ஆசார்யாநுக்ரஹத்திற்குப் பாத்ரமாகவேணுமிறே.

அநந்தரம் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருந்து (க) "பூகீகண்டத்வயஸஸரஸஸ்நிக்தநீரோபகண்டா மாவிர்மோதஸ்திமிதஶகுநாநூதிதப்ரஹ்மகோஷாம் - மார்க்கேமார்க்கேபதிகநிவஹை ருஞ்ச்யமாநாபவர்க்காம் பஶ்யேயந்தாம்புநரபிபுரீம்ஸ்ரீமதீம்ரங்கதாம்நஃ" என்று சொல்லிக்கொண்டு, கோயிலையும் பெருமாளையும் விட்டுப் பிரிந்திருக்கையாலே மிகவும் க்லேஶப்பட்டு, '* என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே!' என்றுகொண்டு எழுந்தருளியிருக்கிற காலத்திலே: ஒருஸ்ரீவைஷ்ணவர் பட்டரைஸேவித்து 'அடியேனுக்குத் திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருரு ப்ரஸாதித்தருளவேணும்' என்று மிகவும் அநுவர்த்திக்க, பட்டரும் நஞ்சீயரைப் பார்த்து 'சீயா! எனக்குக் கோயிலையும் பெருமாளையும் விட்டுப்பிரிந்த க்லேஶாதிஶயேந செவிகள் சீப்பாயாநின்றது; ஆகையாலே, எனக்கு வாய்திறந்து வார்த்தைசொல்லப்போகிறதில்லை; நீர் திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருரு இந்தஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்'என்று அவரைச் சீயர்ஸ்ரீபாதத்திலே காட்டிக்கொடுத்து இங்ஙனே நடந்துசெல்லுகிற நாளிலே, கடலைக் கலக்கினாற்போலே பட்டர்திருவுள்ளத்தைக் கலக்கி விரோதித்த வீரஸுந்தரன் மரித்துப்போக,

அவ்வளவிலே கோயிலிலே பட்டர்திருத்தாயார்ஆண்டாளை ஸேவித்திருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் 'பட்டருடைய விரோதி போனான்'என்று தங்கள் திருப்பரியட்டங்களை முடிந்து ஆகாஶத்திலே யெறிந்து நின்றார் நின்ற

---

(க) "పూగీకణ్ఠద్వయసరసస్నిగ్ధనీరోపకణ్ఠా మావిర్మోదస్తిమితశకునానూదిత బ్రహ్మఘోషామ్ । మార్గేమార్గేపథిక నివహైరుఞ్ఛ్యమానాపవర్గాం పశ్యేయంతాంపునరపిపురీం శ్రీమతీంరఙ్గధామ్నః"

செய்யவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் 'கடற்கரைவெளி யை நினைத்திருங்கோள்' என்று அருளினார். அவர்களும் 'மணற்குன்றையும், நாவல்காட்டையும் நினைத்திருக்கவோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளை யும்*புன்முறுவல்செய்து அருளிச்செய்தபடி:—'சக்ரவர்த்தித்திருமகன் கடற் கரையிலே விட்டிருக்கச்செய்தே ஸ்ரீவாநரவீரர்கள் ராகவார்த்தே பராக்ராந்த ராய்த் தங்களையுபேக்ஷித்துப் பெருமாளையேநோக்கிக்கொண்டு கிடக்க, இவர் கள் கண்ணுறங்குந்தனையும் தான் உறங்கி, இவர்கள்கண்ணுறங்கினவாறே அம்பறுத்தூணியை முதுகிலேகட்டித் திருக்கையிலே பிடித்த ஶார்ங்கமும் திருச்சரமுமாய் இராமுற்றும் நோக்கின சக்ரவர்த்தித்திருமகனுடைய திரு வடிகளை தஞ்சமென் றிருங்கோள்'என்றருளினார்; ஆகையாலே,ஸ்வரக்ஷண சிந்தையற்று நியதனாகவே ஸர்வரக்ஷகன் கைக்கொண்டுரக்ஷிக்கு மென்கிறது.

பிள்ளையை ஒருவன் 'எம்பெருமானையொழிந்த தேவதாந்தரங்களை பஜிக்க லாகா தென்கிற நீங்கள் நித்யநைமித்திகாதிகளிலே அக்நீந்த்ராதி தேவதை களைப் பஜிப்பானென்? ஆலயங்களைப் பஜியாதொழிவா னென்?'என்ன,பிள்ளை யும் 'வாராய், அக்நிஹோத்ராக்நியை உபாஸித்தும் ஶ்மஶாநாக்நியை நிவர்த் தித்தும் போருகிறாப்போலே,இரண்டுக்கும் வாசி; எங்ஙனேயென்னில்:—நித் யாதிகளில் பகவத்ப்ரகாரபுத்யா பண்ணுகிற உபாஸநம் பகவதுபாஸநமே யாகவிஶேஷஶாஸ்த்ரம் விதிக்கையாலும்,ஆலயப்ரதிஷ்டைகளில் பராவரதத்வ வ்யத்யயம் பண்ணியிருக்கும் தாமஸபுருஷர்களாலே விருத்தாமமமந்த்ரதந் த்ரப்ரக்ரியையாலே ஸ்வதந்த்ரபுத்யாதேவதாந்தரங்கள் க்ருதப்ரதிஷ்டாகாரங் களாகையாலும்,இவ்விடத்திற்குப் பகவத்ப்ரகாரபுத்யாஉபாஸிக்க விதியில்லா மையாலும்; அதுவுமன்றியே, தேவதாந்தரவர்க்கந்தன்னில்தூரதோவர்ஜநீய த்வம் ருத்ரனுக்குமிகவும்உண்டிறே:எங்ஙனேயென்னில்;—ஸத்வகுணாத்யந்த விரோதியான தமோகுணப்ரசுரனாகையாலே, நித்யாதிகளைப்போலே ஆலயங் களிலும் பகவத்ப்ரகாரபுத்யா உபாஸிக்க லாகாது; த்யாஜ்யதயா ஜ்ஞாதவ்யங் களான பகவத்வ்யதிரிக்தவிஷயங்கள் ஸ்வீகாரத்திற்கு உடலாகவும், உபா தேயதயா ஜ்ஞாதவ்யமான பகவத்விஷயம் த்யாகத்திற்கு உடலாகவும் கடவ தோ?' என்று அருளிச்செய்தார்; ஆகையாலே, வேதாந்தவிஹித பகவத்ப்ர காரபூத ஆலயஸ்த அந்யதேவதா பஜநமும் அநர்த்தகர மென்கிறது.

நம்பிள்ளையை ஒருஸ்ரீவைஷ்ணவர் வந்து ஸேவித்து 'திருமேனி அற இளைத்திருந்தது' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் 'ஒன்று தேய்தல், ஒன்று வளருதலன்றோ?' என்று அருளினார்; இத்தால், ஜ்ஞாநபக்திவைரா க்யங்கள் வளர *நினைந்து நைந்துஉள்கரைந்துருகி ஶரீரம் தேயு மென்றபடி.

பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்து கண்டு 'ஆரோக்யமொன்று மில் லையோ?' என்று கேட்க, பிள்ளையும் 'யுத்தம்பண்ணப்போகிறோமோ? பெரு மாளை ஸேவித்திருக்கைக்குவேண்டும் ஆரோக்ய முண்டு; ஒருகுறையு மில்லை' என்றுஅருளினார்; ஆகையாலே, ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆரோக்யாபேக்ஷை வேண்டா வென்கிறது.

நம்பிள்ளை திருமேனிநோவுசாத்தியிருந்தமை கேட்டு,ஒருஸ்ரீவைஷ்ணவர் சென்று ஸ்ரீபாதத்திலேஸேவித்துநோயைக்கண்டுவெறுக்க,பிள்ளையும்அவரை

க்குறித்து 'இஶ்ஶரீரத்தில் வந்த வ்யாதியை நல்விருந்து வந்ததாகக்காணும் நான் நினைத்திருப்பது' என்று அருளினார்; இத்தால், (க) "க்ருதக்ருத்யா×ப்ர தீக்ஷந்தே ம்ருத்யும்ப்ரியமிவாதிதிம்"என்கிற இதுவிறே திருவுள்ளக்கருத்து.

நம்பிள்ளை திருமேனியிலேநோவுசாத்தியெழுந்தருளியிருக்கச்செய்தே, பிள்ளையெங்களாழ்வாரும் அம்மங்கியம்மாளும் அறிவதாக எழுந்தருளி, எங்களாழ்வான்நியமநத்தாலே அம்மங்கியம்மாள் பிள்ளைபக்கல் பரிவாலே ஒருயந்த்ரத்தைத் திருக்கையிலேயிட்டுத் தொடப்புக, பிள்ளை திருமேனியை இருய்த்தருள, அவர்களும் விஷண்ணராய் 'உம்முடைய விஷயமாக நீர் ப்ர வர்த்திக்கிலன்றோ ஸ்வரூபஹாநி? உம்முடையவிஷயமாக நாங்கள் ப்ரவர்த் தித்தால் உமக்கு ஸ்வரூபஹாநி யில்லைகாணும்' என்று சிலவசநங்களைப் படிக்க, 'எனக்கும் போம்: சிலவசநங்களையன்றோ நீங்கள் விஶ்வஸித்திருக் கிறது? நானும் ஒருவசநத்தைத் தஞ்சமென்றிருப்பன் காணுங்கோள்'என்ன, அவர்களும், 'அதுவென்? சொல்லிக்காணீர்' என்ன, பிள்ளையும் 'சீயர் தம் சாமதஶையிலே த்வயமொழிந்த மந்த்ரங்களோடு ஶிவபஞ்சாக்ஷரம்முதலான க்ஷுத்ரமந்த்ரங்களோடு ஒருவாசியில்லை யென் றருளினர்' என்ன, அவர்க ளும் 'பிள்ளை! திருமந்த்ரம் செய்வதென்?' என்ன, பிள்ளையும் 'அதுதான் செய்வதென்? விவரண விவரணீயாவேந த்வயார்த்தமதம்' என்ன,அவர்களும் 'ஆகில், த்வயத்தைக்கொண்டு செய்யக் குறை என்?' என்ன, இவரும் 'விடா ய்த்தவன் *விலவறத் தண்ணீர்குடிக்குமாபோலே யிருப்பதொன்றிறே யிது; ஆகையாலே, ஸ்வவ்யாதிஶாந்த்யர்த்தமான ப்ரபதநமும் ஸ்வரூபஹாநி: பர விஷயவ்யாதிஶாந்த்யர்த்த ப்ரபதநமும் ஸ்வரூபஹாநி; எங்ஙனே யென்னில்:- ஸ்வவிஷயமாக ப்ரவர்த்திக்கில் ஸ்வஸ்வரூபபாரதந்த்ர்ய தூஷணமாயித்தனை; பரவிஷயமாக ப்ரவர்த்திக்கில் பரஜ்ஞாநபரஶக்திகளுக்குத் தூஷணமாம்' என்று அருளினர்; ஆகையால், தொடக்குழையும் பூப்போலே மந்த்ராந்தர ஸ்பர்ஶம் பொறாத த்வயைகநிஷ்டாதிஶயமும், த்வயத்தை மற்றொன்றுக்கும் ஸாதநமாக்கிப் பிசக்கி முசிக்கப் பெறாமையும், ஸ்வபரவிஷயவ்யாதிஶாந்த்யர் த்தப்ரபதநதோஷவிஶேஷமும் சொல்லப்பட்டதிறே.

அநந்தரம் பிள்ளைக்குத் திருமேனிவாட்டந் தீர்ந்து பண்டுபோலே ஆரோக்யமுண்டாய் ஸ்ரீபாதத்தில் முதலிகளுக்குத் தர்ஶநதாத்பர்யங்களை ப்ரஸாதித்துக்கொண்டு ஸுகமேஎழுந்தருளியிருக்கும் நாளிலே, கூரத்தாழ் வானுடைய திருப்பேரனரான நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர், நம்பிள்ளை யுடைய ஜ்ஞாநபக்திவைராக்யங்களையும், பாகவதஸம்ருத்தியையும், லோக பரிக்ரஹத்தையும், ஶிஷ்யஸம்பத்தையும் கண்டு பொறுக்கமாட்டாமல் கடி கடி யென்றுகொண்டு போருவாராயிருப்பர். அக்காலத்தில் அந்தப் பட்டர் ராஜாஸ்தாநத்திற்கு எழுந்தருளாநிற்க, வழியிலே பின்பழகியபெருமாள்சீய ரைக் கண்டு'சீயா! நாம் ராஜகோஷ்டிக்குப் போகிறோம்; கூடவாரும்' என்று அழைக்க, இவரும் 'நம் பரமாசார்ய வம்ஶ்யரன்றோ?' என்று பட்டருடனே ராஜாஸ்தாநத்தேற எழுந்தருள, ராஜாவும் பட்டரை எதிர்கொண்டு பஹு மாநம்பண்ணி ஆஸநத்திலே எழுந்தருளுவித்து ஸேவித்துக்கொண்டு பெரிய

(க) "க்ருதக்ருத்யா:ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்."

திருவோலக்கமாகவிருந்து, தான் பஹுச்ருதனுகையாலும் வ்யுத்பந்நனுகையாலும் பட்டருடையவைதுஷ்யமோதநார்த்தமாக 'பட்டரே! (க) "ஆத்மாநம் மாநுஷம்மந்யே ராமந்தஸரதாத்மஜம்" என்று பரத்வந்தோன்ருமல் வர்த்திக்கிற பெருமாள் ஜடாயுவைக்குறித்து (உ) "மச்சலோகாநநுத்தமாந்" என்று மோக்ஷங்கொடுத்தபடி எங்ஙனே?' என்றுகேட்க, பட்டரும் அதற்கு உத்தரமருளிச்செய்யச் சிறிதுவிசாரிக்கவேண்டியிருக்க, அவ்வளவிலே ராஜாவுக்கு வேறே பராக்காக, பட்டரும் சீயரைப்பார்த்து 'சீயா! பிள்ளை பெரியவுடையாருக்குப் பெருமாள்மோக்ஷங்கொடுத்தருளினதை எப்படி நிர்வஹிப்பர்?' என்ன, சீயரும் (ங) "ஸத்யேநலோகாந்ஜயதி" என்ற ஶ்லோகங்கொண்டு நிர்வஹித்தருளுவர்' என்ன, பட்டரும் 'ஆமோ!' என்று அத்தைத் திருவுள்ளத்திலே யோஜித்து 'ஒக்கும்' என்று எழுந்தருளியிருக்க, ராஜாவும் அபிமுகமாகத் திரும்பி 'பட்டரே! நாம்கேட்டதற்கு உத்தரம் அருளிச்செய்தீரில்லையே!' என்ன, பட்டரும் 'நீர் பராக்கடித்திருக்க, நான்சொல்லலாவதொரு அர்த்தமுண்டோ? ஸமாஹிதமநாவாய்க் கேளீர்' என்று '(ச) "ஸத்யேநலோகாந்ஜயதி தீநாந்தாநேநராகவஃ - குரூந்ஶுஶ்ரூஷயாவீரோ தநுஷாயுதிஶாத்ரவாந்" என்கிற ஶ்லோகத்தைப் பட்டர் அருளிச்செய்ய, ராஜா கேட்டு ஸுதராம் ப்ரீதனாய் 'தேவரீர் அருளிச்செய்தது ஒக்கும்' என்று ஶிரஃகம்பம்பண்ணி வணங்கி அடிக்கடி கொண்டாடி, அநர்க்கங்களான அநேகஆபரணங்களும் அநேகவஸ்த்ரங்களும் பஹுதநங்களும் எல்லாவற்றையும் கொடுத்துப் பஹுமதித்து, தான் நிருத்தரனாய்ப் பட்டர்திருவடிகளிலேவிழுந்துஸேவித்து 'கோயிலேற எழுந்தருளும்' என்று ஸத்கரித்து விட, பட்டரும், ராஜாகொடுத்த வஸ்த்ர பூஷணங்களையும் தநங்களையும் அங்கீகரித்து, அங்கிலும் புறப்பட்டுச் சீயர் திருக்கையைப்பிடித்துக்கொண்டு 'சீயரே! என்னையும் இந்தத்தநத்தையும் பிள்ளைதிருவடிகளிலே கொண்டுபோய்க் காட்டிக்கொடும்' என்று போரஆர்த்தியோடே அநுவர்த்தித்துச் சொல்ல, சீயரும் பட்டர் அருளிச்செய்தபடியே பிள்ளைகோஷ்டியிலே கொண்டுபோய்க் காட்டிக்கொடுக்க, பிள்ளையும் தம்பரமாசார்யவம்ஶ்யரான நடுவில்திருவீதிப்பிள்ளையை ஸேவித்து மிகவும் ஆதரித்து 'இது ஏது ஐயா?' என்று கேட்டருள, பட்டரும் பிள்ளை திருமுகமண்டலத்தைப் பார்த்து 'தேவரீருடைய திவ்யஸூக்தியில் பதினுயிரங்கோடியிலே ஒன்றுக்குப்பெற்ற தநம் இது; ஆகையாலே, அடியேனையும் இந்தத்ரவ்யங்களையும் அங்கீகரித்தருளவேணும்' என்ன, பிள்ளையும் 'ஆகிறது என்? கூரத்தாழ்வான்திருப்பேரனுரான நீர் இப்படிசெய்ய ப்ராப்தமன்றுகாணும்' என்ன, பட்டரும் 'நித்யஸம்ஸாரியான ராஜா தேவரீருடையதிவ்யஸூக்தியிலே சிந்தின சொல்லுக்குத் தோற்றுக் கொடுத்த கொடை இது; ஆனபின்பு, கூரத்தாழ்வான்குடல்துடக்கிற் பிறந்த அடியேன் அந்தப்ரஸாவத்திற்குத் தகுதியாகத் தேவரீருக்கு ஸமர்ப்பிக்கலாவது ஒன்றுமில்லையேயாகிலும், அசலகத்தேயிருந்தும் இத்தனைநாள் தேவரீர் திருவடிகளை இழந்துகிடந்தமாத்ர மன்றிக்கே

(க) "ఆత్మానం మానుషం మన్యే రామం దశరథాత్మజం." (உ) "గచ్ఛ లోకాననుత్తమాన్." (ங) "సత్యేన లోకాన్ జయతి." (ச) "సత్యేన లోకాన్ జయతి దీనాన్ దానేన రాఘవః । గురూన్ శుశ్రూషయా వీరో ధనుషా యుధి శాత్రవాన్."

தேவரீர்வைபவத்தைக் கண்டு (க) "அஸூயாப்ரஸவபூ:" என்கிறபடியே அஸூயையபண்ணித் திரிந்த இவ்வாத்மாவைத் தேவரீருக்கு ஸமர்ப்பிக்கையல்லது வேறே எனக்கு ஒருகைம்முதலில்லை; ஆகையாலே,அடியேனை அவஶ்யம் அங்கீகரித்தருளவேணும்' என்று கண்ணுங்கண்ணீருமாய்க்கொண்டு பிள்ளைதிருவடிகளிலேஸேவித்துக்கிடக்க, பிள்ளையும் பட்டரைவாரியெடுத்து அணைத்துக்கொண்டு விஶேஷகடாக்ஷஞ் செய்தருளி, தம்திருவுள்ளத்திலே தேங்கிக்கிடக்கிற அர்த்தவிஶேஷங்களெல்லாவற்றையும் ஒன்றுந்தப்பாமல் இவர்க்கு ப்ரஸாதித்தருள,பட்டரும் க்ருதார்த்தராய்ஒருக்ஷணமும்பிரியாமல் பிள்ளைஸந்நிதியிலே ஸதாநுபவம்பண்ணிக்கொண்டு ஸேவித்துக்கொண்டு ஸந்துஷ்டராய் எழுந்தருளியிருந்தார்.

அக்காலத்திலே பட்டருக்கு ஒருரு திருவாய்மொழிக்கு அர்த்தம் ப்ரஸாதித்தருள, பட்டரும் பிள்ளை அருளிச்செய்தது ஒன்றுந் தப்பாமல் பதருமல்கேட்டுத்தரித்து இராமுற்ற எழுதித் தலைக்கட்டினவாறே, பட்டர் தாம் எழுதின க்ரந்தங்களைப் பிள்ளைஸந்நிதியிலேகொண்டுபோய் வைக்க, பிள்ளையும்'இதுஎன்?' என்றுகேட்க, பட்டரும்'தேவரீர் இந்தஉரு திருவாய்மொழிக்கு நிர்வஹித்த கட்டளை' என்ன, பிள்ளையும் 'ஆமோ!' என்று க்ரந்தங்களை அவிழ்த்துப் பார்த்தவளவில் ஸபாதலக்ஷம்க்ரந்தமாய்மஹாபாரதஸங்க்யையாயிருக்க, அத்தைக்கண்டு பிள்ளை பெருக்கவ்யாகுலப்பட்டுப் பட்டரைப்பார்த்து'நம்முடைய அநுமதியின்றிக்கே நாட்டுக்குப் பாட்டுரையாம்படி நீர்நினைத்தபடியே திருவாய்மொழியை வெளியிடுவானென்?'என்ன, பட்டரும்'தேவரீர்அருளிச்செய்த திவ்யஸூக்தியை எழுதினேன்;அதொழியக் கால் கொம்பு சுழிவற எழுதினதுஉண்டாகில் பார்த்தருளவேணும்' என்ன, பிள்ளை பட்டரைப்பார்த்து 'வாரீர்! திருவாய்மொழிநிமித்தமாக நாம் வாக்காலே சொன்னத்தைஎழுதினீராகில், நம்முடைய சித்தஸ்தமானபொருளை எழுதப்பெற்றீரோ?' என்று வெறுத்து அருளிச்செய்து, 'உடையவர்காலத்திலே திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவாய்மொழிக்கு ஸ்ரீவிஷ்ணுபுராணப்ரக்ரியையாலே ஆறாயிரமாகஇடுகைக்கு உடையவரை அநுமதிகொள்ளப் பட்ட யத்நத்திற்கு மட்டுமுடிவில்லை; ஆனபின்பு, நம்முடைய காலத்திலே நம்மையுங்கேளாமல் லக்ஷத்திருபத்தையாயிரங் க்ரந்தமாக இப்படி பரக்கஎழுதினால், ஒரு ஶிஷ்யாசார்யக்ரமத்துக்கு அஸம்ப்ரதாயமாய்ப் போங்காணும்' என்று அருளிச்செய்து, அவர்கையிலும் க்ரந்தங்களை வாங்கிக்கொண்டு நீரைச்சொரிந்து கறையானுக்குக் கொடுக்க, அவை அன்றே மருத்தாய்ப்போய்த்து.

அநந்தரம்,பிள்ளை தமக்குப்ரியஶிஷ்யராய்த் தம்பக்கலிலே அகிலார்த்தங்களையும் அலகலகாகக் கற்றிருக்கும் பெரியவாச்சான்பிள்ளையை 'திருவாய்மொழிக்கு ஒருவ்யாக்யாநம்பண்ணும்' என்று நியமித்தருள,பெரியவாச்சான்பிள்ளையும் ஸ்ரீராமாயணஸங்க்யையிலே ஒருவ்யாக்யாநஞ் செய்தருளினார்.

பின்னையும் நம்பிள்ளை ஒருரு திருவாய்மொழிக்கு அர்த்தம் நிர்வஹிக்கிற கட்டளையை, அந்தரங்கஶிஷ்யரான வடக்குத்திருவீதிப்பிள்ளை பகலெல்லாங் கேட்டுத் தரித்து ராத்ரியிலே எழுதித் தலைக்கட்டினவாறே, அத்தைப் பிள்ளை

(க) "అసూయాప్రసవభూః."

ஸந்நிதியிலே கொண்டுபோய் வைக்க, பிள்ளையும் 'இது என்?' என்று கேட்டருள, அவரும் 'தேவரீர் இந்தவுரு திருவாய்மொழி நிர்வஹித்த கட்டளை' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் ஸ்ரீகோஶத்தை அவிழ்த்துப்பார்த்தருள, அதிஸங்க்ஷேபமுமன்றிக்கே அதிவிஸ்தரமுமன்றிக்கே ஆனை கோலஞ்செய்து புறப்பட்டாப்போலே மிகவும் அழகாய் ஶ்ருதப்ரகாஶிகைகட்டளையிலே முப்பத்தாறாயிரமா யிருக்கையாலே, பிள்ளையும் அத்தைக்கண்டு போர ப்ரீதராயருளி, வடக்குத்திருவீதிப்பிள்ளையைப் பார்த்து 'நன்றாக எழுதினீர்; ஆகிலும், நம்முடையஅநுமதியின்றிக்கே எழுதினீர்; ஆகையாலே,க்ரந்தங்களைத் தாரும்' என்று அவர் திருக்கையிலும்வாங்கிக்கட்டி உள்ளேவைத்தருளினார். இத்தைக்கண்டு ஈயுண்ணி மாதவப்பெருமாள், நெடுநாள் நம்பெருமாளை ப்ரதக்ஷிணநமஸ்காரஞ்செய்து வேண்டிக்கொள்ள,ஒருநாள் பெருமாள் அர்ச்சகமுகேந ஈயுண்ணிச்சிறியாழ்வானப்பிள்ளையை அருளப்பாடிட்டருளி 'ஏன் காணும் நம்மைப் பஹுவாகஉபாஸியாநின்றீர்?'என்றுகேட்டருள,ஈயுண்ணி மாதவப்பெருமாளும் 'ஸ்வாமீ! நம்பிள்ளைதிருக்கையிலே திருவாய்மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிர மென்று ஒருவ்யாக்யாந க்ரந்தம் இருக்கிறது; அத்தை அடியேனுக்கு அவர் இரங்கி ப்ரஸாதிக்கும்படி நியமித்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க, பெருமாளும் 'அப்படியே செய்கிறோம்' என்று திருவுள்ளம் பற்றியிருக்கச்செய்தே, நம்பிள்ளையும் முதலிகளுமாகப் பெருமாளைத் திருவடிதொழச் சென்றவாறே, பெருமாள் பிள்ளையைக் குறித்து, தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் சடகோபனும் ப்ரஸாதித்தருளி, அர்ச்சகமுகேந 'பிள்ளை! ஈடு முப்பத்தாறாயிரத்தை ஈயுண்ணிச் சிறியாழ்வானப்பிள்ளைக்கு ப்ரஸாதியும்' என்று திருவுள்ளமாக, பிள்ளையும் மஹாப்ரஸாத மென்று பெருமாள்அருளப்பாட்டை ஶிரஸாவஹித்துக்கொண்டு புறப்பட்டுத் தம்திருமாளிகையிலே எழுந்தருளி, தமக்கு அபிமதஶிஷ்யரான ஈயுண்ணிமாதவப் பெருமா ளென்கிற சிறியாழ்வானப்பிள்ளைக்கு ஈடு முப்பத்தாறாயிரமுங் கொடுத்து வாழ்வித்தருளினார்.

பிள்ளைவைபவத்தை,

"இந்திரன்வார்த்தையும் நான்முகன்வார்த்தையு மீசனுடன்
கந்தன்சொல்வார்த்தையுங் கற்பவரா ரிந்தக்காசினிக்கே
நந்தினமுத்தெறிநம்பூர்வரதர்தம்மாளிகையிற்
சிந்தினவார்த்தைகொண்டேசிலநாடுதிறைக்கொள்வரே"

என்று ஸ்ரீபாதத்துமுதலிகள் அநுஸந்தித்தார்களிறே.

## குருபரம்பராப்ரபாவம்
### ஸம்பூர்ணம்.

---

"வாழி பதின்மருட னாண்டாள் மதுரகவி
வாழிய நாதன்முதலா மாமறையோர்—வாழி
யொருக்கோலரை நெருக்கி யோட்டு மெதிராசன்
திருத்தாள் வணங்கினார் சீர்."

---

ஸ்ரீ

# குருபரம்பராவிவரணம்.

ஸ்ரீயஃபதியாய் ஸ்ரீவைகுண்டநிகேதநனாய் நித்யமுக்தாநுபாவ்யனாய் நிரதிஶயாநந்தயுக்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், அந்தநித்யஸூரிகளோபாதி தன்னைஅநுபவித்துநித்யகைங்கர்யரஸராய்வாழுகைக்குப்ராப்தியுண்டாயிருக்கச்செய்தேயும்அத்தையிழந்து(க)"அஸந்நேவஸஹவதி" என்கிறபடியே அஸத்கல்பராய்ஹேயமமோக்ஷஶூந்யராய்(உ)"ஸம்யுக்தமேகம்க்ஷரமக்ஷரஞ்ச" என்கிறபடியேதிலதைலவத்தாருவஹ்நிவத்துர்விவேசத்ரிகுணத்ரவ்யயாநாத்யசித்ஸம்பந்ததிரோஹிதஸ்வப்ரகாஶராய்க்கிடக்கிற ஸம்ஸாரிசேதநருடைய இழவை அநுஸந்தித்து, (௩)"ஸஏகாகீநரமேத" என்றும், (௪) "ப்ருஶம்பவதிது:கித:" என்றும்சொல்லுகிறபடியே அத்யந்தவ்யாகுலசித்தனாய்,இவர்கள்கரணகளேபரங்களையிழந்து (௫)"லூநபக்ஷஇவாண்டஜ:" என்கிறபடியேஇறகொடிந்தபக்ஷிபோலேகிடக்கிறதஶையிலே (௬)"நாமரூபேவ்யாகரவாணி" என்றும், "அந்நாள்நீதந்த ஆக்கையின்வழி" என்றும்சொல்லுகிறபடியே இவர்களுக்குக் கரணகளேபரங்களைக்கொடுத்து,அவற்றைக்கொண்டுவ்யாபரிக்கைக்குஈடான ஶக்திவிஶேஷங்களையுங்கொடுத்து, தேஹாத்மாபிமாநமும்அந்யஶேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமுமானபடுகுழியிலேவிழுந்துஅநர்த்தப்படாதேதன்னைஆஶ்ரயித்துஉஜ்ஜீவிக்கைக்கு உடலாக(௭)"அபதோஷமபும்பவம்" என்கிறபடியே அபௌருஷேயமாய் அதஏவ புருஷஶேமுஷீதோஷமாலிந்யவிநிர்முக்தமாய் (௮)"வேதஶாஸ்த்ராத்பரம்நாஸ்தி" என்கிறபடியே தனக்குமேற்பட்டதொரு ஶாஸ்த்ரமின்றிக்கே யிருப்பதாய் ஸ்வதஃப்ரமாணமான வேதத்தை (௯)"யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதி" என்றும் "அருமறையை வெளிப்படுத்த வம்மான்" என்றும் சொல்லுகிறபடியே நாராயணத்வப்ரயுக்தமான தன்உதாரத்தெறிப்பாலே தானேப்ரவர்த்திப்பித்தவிடத்திலும் தத்தர்த்தநிர்ணயந்தான் ஸர்வஶாகாப்ரத்யயந்யாயாதி ஸாபேக்ஷமாயிருக்கையாலே,'அல்பமதிகளுக்கு அர்த்தநிர்ணயம்பண்ணுகை அரிது'என்றும்,'இம்முகத்தாலே இவர்கள்திருந்திக் கரைமரஞ்சேருகைஅரிது'என்றும்,'உபதேஶபரம்பரையாலே இவர்களைத்திருத்தி உஜ்ஜீவிப்பிக்கை எளிது'என்றும் திருவுள்ளம்பற்றி,(க௦) "ஆசார்யாணாமஸாவஸாவித்யாபகவத்த:" என்று உபதேஶந்தான் பகவான்தான் அடியாக வந்ததாயிருக்குமதாகையாலேஅதுக்காக"முன்னைவண்ணம்பாலின்வண்ணம்" என்றும், (கக)"ஶஶிவர்ணம்" என்றும்,"வல்லனெம்பிரான்விட்டுவே" என்றும் சொல்லுகிறபடியே ஒருமந்த்ரத்தை உபதேஶிக்குமிடத்தில் ததுபதேஷ்டா

---

(க) "అసన్నేవసభవతి." (உ) "సంయుక్తమేకంక్షరమక్షరఞ్చ." (௩) "సఏకాకీ నరమేత." (௪) "భృశంభవతిదుఃఖితః." (௫) "లూనపక్షఇవాణ్డజః." (௬) "నామరూపేవ్యాకరవాణి." (௭) "అపదోషమపుంభవం." (௮) "వేదశాస్త్రాత్పరంనాస్తి." (௯) "యోవై వేదాంశ్చప్రహిణోతి." (க௦) "ఆచార్యాణామసావసావిత్యాభగవత్తః." (கக) "శశివర్ణం."

வுக்குவடிவாயிருந்துள்ளஸமஸ்தகல்யாணகுணங்களையுடையனும், (௧) "பஹுதாவிஜாயதே" என்றும் "செய்ம்மம்பலபலசெய்து" என்றும் சொல்லுகிறபடியே பலவகைப்பட்டிருந்துள்ள விபவங்களில் வைத்துக்கொண்டு (௨) "மத்யேவிரிஞ்சிகிரிஶம் ப்ரதமாவதார:" என்னும்படி ப்ரதமாவதாரமானமஹாவிஷ்ணுவாய்க்கொண்டு,இவ்வண்டாந்தர்வர்த்தியான ஸர்வலோகத்துக்கும்அவ்வருகாயிருந்துள்ளஸ்ரீவிஷ்ணுலோகத்திலே(௩)'ஜகதுபக்ருதயேஸோயமிச்சாவதார:" என்கிறபடியே இந்தஜகத்தை வாழ்விப்பதாக (ச) "ஶ்ரோணநக்ஷத்ரம் விஷ்ணுர்தேவதா" என்னும்படி விஷ்ணுதேவதாகமான திருவோணமென்கிற திருநக்ஷத்ரத்திலே ஸ்வேச்சையாலே ஸ்வயமேவ திருவவதரித்தருளி, உடனே "இறையு மகலகில்லேன்" என்றிருக்கும் பெரியபிராட்டியாரையும் அந்தஸ்ரீவிஷ்ணுலோகத்திலேதானே (ரு) "பத்மேஸ்திதாம்"என்றும்,"தேனமரும் பூமேல்திரு" என்றும், (சு) "விஷ்ணுபத்நீ" என்றும் சொல்லுகிறபடியே அப்போதுஅலர்ந்த தாமரைப்பூவிலே மஹாலக்ஷ்மியென்கிற திருநாமத்தையுடையளான ஸ்வமஹிஷியாகத் தானே திருவவதரிப்பித்தருளி,(எ)"தாப:புண்ட்ரஸ்ததாநாம மந்த்ரோயாகஶ்சபஞ்சம:" என்றுரஹஸ்யத்ரயோபதேஶந்தான் தாபோர்த்வபுண்ட்ரதாஸ்யநாமபூர்வகமாயிருக்கிற வோபாதி (அ)"பரம்பராமுபதிஶேத் குரூணாம்ப்ரதமோகுரு:-ஆத்மவித்யாவிஶுத்த்யர்த்தம் ஸ்வாசார்யாத்யாம்த்விஜோத்தம:"என்றும், (௯)"ஸஹஸ்ரபுருஷம்வாபி ஶதபூருஷமேவவா - த்ரிஸப்தபுருஷம்வாபி த்விஸப்ததஶபூருஷம்" என்றும், (௧0)"ஆதாவுபதிஶேத்வேதேகிலருக்வாகஸம்ஜ்ஞகம்-அஸ்மத்குருப்ய இத்யாதி வாக்யத்ரயமரிந்தம" என்றும் இத்யாதிகளில் குருபரம்பராஸங்க்ரஹமாயிருந்துள்ள"அஸ்மத்குருப்யோநம:"இத்யாதிவாக்யத்ரயோபதேஶபூர்வகமாயிருக்கு மாகையாலே (௧௧) "ஸ்ரீவிஷ்ணுலோகேபகவாந் விஷ்ணுர்நாராயணஸ்ஸ்வயம்-ப்ரோக்தவாந்மந்த்ரராஜாதீந்லக்ஷ்ம்யாஸ்தாபாதிபூர்வகம்"என்றும்(௧௨)"விஷ்ணுமாதிகுரும்லக்ஷ்ம்யா:மந்த்ரரத்நப்ரதம்பஜே" என்றும்சொல்லுகிறபடியே அவளுக்குத் தாபோர்த்த்வபுண்ட்ரதாஸ்யநாமப்ரதாந புரஸ்ஸரமான இந்தவாக்யத்ரயோபதேஶபூர்வகமாக ஸ்வரூபோபாய புருஷார்த்தயாதாத்ம்யப்ரதிபாதகமான ரஹஸ்யத்ரயத்தைத் தானே நேராக உபதேஶித்தருளி,அப்படியே(௧௩)"ஸோபதிஷ்டவதீப்ரீத்யாதாபபுண்ட்ராதி

---

(௧) "బహుధావిజాయతే." (௨) "మధ్యేవిరిఞ్చిగిరిశం ప్రథమావతారః." (௩) "జగదుపకృతయేసోయమిచ్ఛావతారః." (ச) "శ్రోణానక్షత్రంవిష్ణుర్దేవతా." (ரு) "పద్మేస్థితాం." (சு) "విష్ణుపత్నీ". (எ) "తాపఃపుణ్డ్రస్తథానామమన్త్రోయాగశ్చపఞ్చమః." (அ) "పరమ్పరాముపదిశేద్గురూణాంప్రథమోగురుః। ఆత్మవిద్యావిశుద్ధ్యర్థంస్వాచార్యాద్యాంద్విజోత్తమః." (௯) "సహస్రపురుషంవాపిశతపూరుషమేవవా। త్రిసప్తపురుషంవాపిద్విసప్తదశపూరుషం." (௧0) "ఆదావుపదిశేద్వేదేఖిలఋగ్వాకసంజ్ఞకం। అస్మద్గురుభ్యఇత్యాదివాక్యత్రయమరిన్దమ." (௧௧) "శ్రీవిష్ణులోకేభగవాన్విష్ణుర్నారాయణస్స్వయం। ప్రోక్తవాన్మన్త్రరాజాదీన్లక్ష్మ్యాస్తాపాదిపూర్వకం." (௧௨) "విష్ణుమాదిగురుంలక్ష్మ్యాఃమన్త్రరత్నప్రదంభజే." (௧௩) "సోపదిష్టవతీప్రీత్యాతాపపుణ్డ్రాదిపూర్వకం। విష్ణులోకేఽవతీర్ణాయప్రియాయసతతంహరేః। సేనేశాయప్రియావిష్ణోర్మూలమన్త్రద్వయాదికం."

பூர்வகம்-விஷ்ணுலோகேऽவதீர்ணாய ப்ரியாய ஸததம் ஹரே:-ஸேநேஶாய ப்ரியா விஷ்ணோர் மூலமந்த்ரத்வயாதிகம்” என்கிறபடியே அவனைக்கொண்டு அந்த விஷ்ணுலோகத்திலேதானே அவதீர்ணரான ஸேனைமுதலியாருக்கு இந்த க்ரமத்திலே இந்த ரஹஸ்யத்ரயோபதேஶத்தைப் பண்ணுவித்து, பின்னையும் அப்படியே (௧) “ஸேநேஶஸ்ஸ்வயமாகத்ய ப்ரீத்யா ஸ்ரீநகரீம் ஶுபாம் - ஶடகோபாய முநயே திந்த்ருணீமூலவாஸிநே - தாபாதிபூர்வகம் மந்த்ர த்வயம் ஶ்லோகாந் பராந் க்ரமாத் - விஷ்ணுபத்ந்யா மஹாலக்ஷ்ம்யா: நியோகாதுபதிஷ்டவாந்” என்கிறபடியே இந்தக்ரமத்திலேதானே ஸேனைமுதலியாரைக்கொண்டு திருநகரியிலே திருப்புளியாழ்வாரடியிலே எழுந்தருளியிருக்கிற ஆழ்வாருக்கு ரஹஸ்யத்ரயோபதேஶத்தைப் பண்ணுவித்து, உடனே அவர்க்கு மயர்வறமதிநலமருளி, (௨) “புநஶ்ச நாதமுநயே பஞ்சஸம்ஸ்காரபூர்வகம்-பட்டநாதப்ரப்ருதிபிர் நிர்மிதைர் திவ்யயோகிபி: - திவ்யைர் விம்ஶதிஸங்க்யாகை: ப்ரபந்தைஸ்ஸஹ தேஶிக: - ஸ்வோக்தத்ராவிடவேதாநாம் சதுர்ணாமுபதேஶக்ருத்” என்கிறபடியே ஆழ்வாரைக்கொண்டு அத்திருநகரியில் திருப்புளியாழ்வாரடியிலேதானே நாதமுநிகளுக்கு இந்தக்ரமத்திலே ரஹஸ்யத்ரயோபதேஶத்தைத் திவ்யப்ரபந்தோபதேஶஶிரஸ்கமாகப் பண்ணுவித்து, பின்னையும் அப்படியே அந்நாதமுநிகளைக்கொண்டு உய்யக்கொண்டார் தொடக்கமானோர்க்கும், உய்யக்கொண்டாரைக்கொண்டு மணக்கால்நம்பி தொடக்கமானோர்க்கும், மணக்கால்நம்பியைக்கொண்டு ஆளவந்தார் தொடக்கமானோர்க்கும், ஆளவந்தாரைக்கொண்டு பெரியநம்பி தொடக்கமானோர்க்கும், பெரியநம்பியைக்கொண்டு உடையவர்க்கும் இந்தக்ரமத்திலே ரஹஸ்யத்ரயோபதேஶத்தைப் பண்ணுவித்து, பின்னையும் அப்படியே உடையவரைக்கொண்டு ஆழ்வான் ஆண்டான் முதலான எழுபத்துநாலுமுதலிகளுக்கும் எம்பார் அருளாளப்பெருமாளெம்பெருமானார் தொடக்கமான எழுநூறுசீயர்களுக்கும் மற்றும் அநேக ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் இந்தக்ரமந்தப்பாமே ரஹஸ்யத்ரயோபதேஶத்தைப் பண்ணுவித்து, பின்னையும் அப்படியே உடையவர் தாம் தர்ஶநத்தை நிர்வஹித்துக்கொண்டு போராநிற்கிறகாலத்திலே ‘(௩) “ப்ரீத்யா ப்ருதக்ப்ருதக் ஶிஷ்யா: ப்ரணமேதீஶ்வராவதி - ஸ்வாசார்யாத்யாந்யாவதாஜ்ஞாதும் ஶக்யந்தாவ தநுஸ்மரேத்” என்றும், (௪) “ப்ரத்யஹம் ப்ரணதைஶ்ஶிஷ்யை: ப்ரபாதே பத்மஸம்பவ - தத்யதாவிதிவந்நித்யம் ப்ரவக்தவ்யங்குரோ: குலம்” என்கிறபடியே இம்மூன்றுவாக்யத்துடனே “ஸ்ரீமதே ராமாநுஜாய நம:” என்கிற வாக்யந்தொடங்கி “ஸ்ரீதராய நம:” என்கிற வாக்யத்தளவான பத்துவாக்யத்தையுஞ்சேர்த்

---

(௧) “సేనేశస్స్వయమాగత్య ప్రీత్యా శ్రీనగరీం శుభాం। శఠకోపాయ మునయే తింత్రిణీమూలవాసినే ॥ తాపాదిపూర్వకం మన్త్రద్వయం శ్లోకాన్పరాన్ క్రమాత్ । విష్ణుపత్న్యా మహాలక్ష్మ్యాః నియోగాదుపదిష్టవాన్.” (௨) “పునశ్చ నాథమునయే పఞ్చసంస్కారపూర్వకం। భట్టనాథప్రభృతిభి ర్నిర్మితై ర్దివ్యయోగిభిః॥ దివ్యై ర్వింశతిసఙ్ఖ్యాకైః ప్రబన్ధైస్సహ దేశికః। స్వోక్తద్రావిడవేదానాం చతుర్ణాముపదేశకృత్.” (௩) “ప్రీత్యా పృథక్పృథక్ శిష్యాః ప్రణమేదీశ్వరావధి। స్వాచార్యాద్యా యావతా జ్ఞాతుం శక్యం తావదనుస్మరేత్.” (௪) “ప్రత్యహం ప్రణతైశ్శిష్యైః ప్రభాతే పద్మసమ్భవ। తద్యథావిధివన్నిత్యం ప్రవక్తవ్యం గురోః కులం.”

துப்†பதின்மூன்றுவாக்யமாக்கி இத்தைமேலோரான நம்ஆசார்யர்கள் தந்தாமுக்கும் தஞ்சமாக அநுஸந்திப்பதும் தந்தாமை ஆஶ்ரயித்தார்க்கும் உபதேஶிப்பதும் செய்யக்கடவர்கள்' என்று தாமே ஆழ்வானைக்கொண்டு நியமித்தருளி, இப்புடைகளிலே சேதநஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கியும் புஷ்பிதமாக்கியும் பலபர்யந்தமாக்கியும் செய்ததுவாய்த்த செல்வனாய், * துளக்கற்றமுதமாய், (க) "விஜ்வரப்ரமுமோதஹா" என்கிறபடியே உள்வெதுப்புத்தீர்ந்து நிர்வ்ருதனாயிருந்தான்.

(உ) "அந்வயாதபிசைகஸ்ய ஸம்யங்ந்யஸ்தாத்மனோஹரௌ-ஸர்வஏவப்ரமுச்யேரந் நராꣷபூர்வேபரேததா" என்றும், (ங) "அர்வாஞ்சோயத்பதஸரஸிஜத்வந்த்வமாஶ்ரித்யபூர்வே மூர்த்நாயஸ்யாந்வயமுபகதா தேஶிகாமுக்திமாபுஃ" என்றும் சொல்லுகிறபடியே முன்புள்ள முதலிகளுக்கும் பின்புள்ளமுதலிகளுக்கும் ஒக்க உத்தாரகரான உடையவர், ஸர்வஜ்ஞராயிருக்கச்செய்தேயும் (ச) "ததாபிஸமயாசாரம் ஸ்தாபயந்ஸாம்ப்ரதாயிகம்" என்கிறபடியே தமக்கு ஸத்ஸம்ப்ரதாயபரிஶுத்தி உண்டென்னுமிடந் தோற்ற அஸ்மத்குருப்ய இத்யாதி வாக்யத்ரயத்தையும் தாம் அநுஸந்திக்கும்போது, முந்தினவாக்யத்தில் குருபதப்ரதிபாத்யர்-பெரியநம்பி யென்றும், அதில் பஹுவசநப்ரதிபாத்யர்-திருக்கச்சிநம்பியும் பேருளாளப்பெருமாளு மென்றும், இரண்டாம்வாக்யத்தில் பரமகுருபதப்ரதிபாத்யர்-ஆளவந்தா ரென்றும், அதில் பஹுவசநப்ரதிபாத்யர் - தத்ஸப்ரஹ்மசாரிகளான பெரியோர்களென்றும், மூன்றாம்வாக்யத்தில் குருபதஸர்வஶப்தபஹுவசந ப்ரதிபாத்யர் - மணக்கால்நம்பிதொடக்கமான மேலோரெல்லாரு மென்றும் கண்டுகொள்வது.

அப்படியே உடையவர்க்குமுன்புள்ள முதலிகளில் வைத்துக்கொண்டு பெரியநம்பி இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, முந்தினவாக்யத்தில் குருபதப்ரதிபாத்யர்-ஆளவந்தா ரென்றும், இரண்டாம்வாக்யத்தில் பரமகுருபதப்ரதிபாத்யர் - மணக்கால்நம்பி யென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர்-இவர்களுக்குக் குருபஸத்தியிலே ருசியை ஜநிப்பித்த ஸ்ரீவைஷ்ணவர்களும் அவர்களோடு ஸங்கதியையுண்டாக்கின ஈஶ்வரனு மென்றும், மூன்றாம்வாக்யத்தில் குருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர்-உய்யக்கொண்டார்தொடங்கிஸ்ரியꣷபதியளவாயுள்ளஅனைவரு மென்றும்கண்டுகொள்வது.

---

(க) "విజ్వరꣷప్రముమోదహ." (உ) "అన్వయాదపిచైకస్యసమ్యఙ్న్యస్తాత్మనోహరౌ। సర్వఏవప్రముచ్యేరన్ నరాꣷపూర్వేపరేతథా." (ங) "అర్వాఞ్చోయత్పదసరసిజద్వన్ద్వమాశ్రిత్యపూర్వే మూర్ధ్నాయస్యాన్వయముపగతా దేశికాముక్తిమాపుః." (ச) "తథాపిసమయాచారంస్థాపయన్సామ్ప్రదాయికం."

† பதின்மூன்று வாக்யங்களாவன:— (க) அஸ்மத்குருப்யோநமஃ, (உ) அஸ்மத்பரமகுருப்யோநமஃ, (ங) அஸ்மத்ஸர்வகுருப்யோநமஃ, (ச) ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ, (ரு) ஸ்ரீபராங்குஶதாஸாயநமஃ, (சு) ஸ்ரீமத்யாமுநமுநயேநமஃ, (எ) ஸ்ரீராமமிஶ்ராயநமஃ, (அ) ஸ்ரீபுண்டரீகாக்ஷாயநமஃ, (கூ) ஸ்ரீமந்நாதமுநயேநமஃ, (க0) ஸ்ரீமதேஶடகோபாயநமஃ, (கக) ஸ்ரீமதேவிஷ்வக்ஸேநாயநமஃ, (கஉ) ஸ்ரியைநமஃ, (கங) ஸ்ரீதராயநமஃ,

அப்படியே ஆளவந்தார் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, குருபதப்ரதிபாத்யர் - மணக்கால்நம்பி யென்றும், த்விதீயவாக்யத்தில் பரமகுருபதப்ரதிபாத்யர்-உய்யக்கொண்டாரென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர்-யதாஸம்பவம் இதில் ருசியைப் பிறப்பித்த ஸ்ரீவைஷ்ணவர்களும் ஈஶ்வரனு மென்றும், மூன்றும்வாக்யத்தில் குருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர் - ஸ்ரீமந்நாதமுநிகள் தொடங்கி ஸ்ரீதரனளவாயுள்ள அனைவரு மென்றும் கண்டுகொள்வது.

அப்படியே மணக்கால்நம்பி இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது,ப்ரதமத்விதீயவாக்யஸ்த குருபரமகுருபதப்ரதிபாத்யர் - உய்யக்கொண்டாரும் நாதமுநிகளுமென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர்-யதாஸம்பவம் இத்தை இசைவித்த ஸ்ரீவைஷ்ணவர்களும் ஈஶ்வரனுமென்றும்,த்ருதீயவாக்யஸ்தகுருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர் - ஆழ்வார்தொடக்கமானாரெல்லாரு மென்றும் கண்டுகொள்வது.

அப்படியே உய்யக்கொண்டார் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, ஆதிமத்யவாக்யகத குருபரமகுருபதப்ரதிபாத்யர் - நாதமுநிகளும் ஆழ்வாரு மென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர் - யதாஸம்பவம் இதில் ப்ரேமத்தை ஜநிப்பித்த பெரியோர்களும் எம்பெருமானு மென்றும், த்ருதீயவாக்யகத குருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர் - ஸேனைமுதலியார் தொடக்கமான மேலோரனைவரு மென்றும் கண்டுகொள்வது.

அப்படியே நாதமுநிகள் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, ப்ரதமத்விதீயவாக்யகத குருபரமகுருபதப்ரதிபாத்யர் - ஆழ்வாரும் ஸேனைமுதலியாரு மென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர் - தத்ஸம்பந்தகடகரான ஸ்ரீவைஷ்ணவர்களும் எம்பெருமானு மென்றும்,த்ருதீய வாக்யகத குருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர்-பிராட்டியும் எம்பெருமானும் மற்றும் அங்குள்ளாரனைவரு மென்றும் கண்டுகொள்வது.

இப்படியே ஆழ்வார் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, குருபரமகுருபதப்ரதிபாத்யர்-ஸேனைமுதலியாரும் பிராட்டியு மென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர் - இவ்விருவர்க்கும் உயிர்நிலையாயிருப்பாரில ரென்றும், த்ருதீயவாக்யகதகுருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர்-ஸர்வேஶ்வரனும் வ்யூஹமும் விபவமும் நித்யஸூரிகளு மென்றும் கண்டுகொள்வது.

இப்படியே ஸேனைமுதலியார் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, ப்ரதமத்விதீயவாக்யகத குருபரமகுருபதப்ரதிபாத்யர் - பிராட்டியும் விஷ்ண்வவதாரமான எம்பெருமானு மென்றும், இரண்டிலும் பஹுவசநப்ரதிபாத்யர்- அவளுக்குஸ்தநபாஹுத்ருஷ்டிஸ்தாநீயரான மற்றைப்பிராட்டிமாரும் அவன் அடிமைகொள்ளுகிற மற்றையவர்கள்தாங்களு மென்றும்,த்ருதீயவாக்யகதகுருபதஸர்வஶப்தபஹுவசநப்ரதிபாத்யர்-இவ் வவதாரத்துக்கு நாற்றங்காலான க்ஷீரார்ணவநிகேதநனும் மற்றும் வ்யூஹாவதாரங்களும் ஶ்வேதத்வீபவாஸிகளு மென்றும் இப்புடைகளிலே இவற்றுக்குப் பொருள் சொல்லக்கடவது.

அப்படியே பிராட்டி இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது,ஆதி மத்யவாக்யகதகுருபரமகுருபதப்ரதிபாத்யர்-விஷ்ண்வவதாரமான எம்பெரு மான்தானும் அவ்வவதாரகந்தமானவ்யூஹவாஸுதேவனுமென்றும்,இரண்டி லும் பஹுவசநப்ரதிபாத்யர்-பெரியதிருவடிதொடக்கமானரும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களுமென்றும், த்ருதீயவாக்யகதகுருபதஸர்வஶப்த பஹுவசநப்ரதிபாத்யர் - *வானிளவரசுவைகுந்தக்குட்டனும் ஓடும்புள்ளே றிப்படியே இச்சேதநனுக்காக அவ்விபூதியிலே அவன்பரிக்ரஹிக்குஞ் சில அவதாரங்களும் நித்யஸித்தரும் என்றும் யதாஸம்பவம் இப்புடைகளிலே இவற்றுக்குப் பொருள் சொல்லக்கடவது.

ப்ரதமாவதாரமான விஷ்ண்வவதாரமும்,அவ்வவதாரகந்தமான * பாற் கடலுள்பையத்துயின்ற பரமனும்,நிதாநமான வைகுந்தநாட்டிலிருக்கும் பர வாஸுதேவனும் தர்மைக்யத்தாலே பேதமின்றிக்கே ஏகதத்வமாயிருந்தார் களேயாகிலும், பெரியபெருமாளுக்கும் பெருமாளுக்கும் தர்மைக்யமிருக் கச்செய்தே (க) "ஸஹபத்ந்யாவிஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" என்று விக்ரஹபேதத்தாலே உபகந்தவ்யஉபகந்த்ருத்வங்களைச் சொன்னவோபாதி, இவ்விடத்திலும் விக்ரஹபேதத்தையிட்டு இம்மூவர்க்கும் இங்ஙன் குருத்வ பரமகுருத்வ ஸர்வகுருத்வங்களைச் சொல்லக் குறையில்லை.

உடையவருக்குப்பின்புள்ள முதலிகளில் வைத்துக்கொண்டு (உ) "ராமா நுஜபதச்சாயா" என்னும்படி அவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்து அவருக்கு*நிழ லும்அடிதாறுமாய்க்கொண்டு குருபரம்பராநுப்ரவிஷ்டரான எம்பார் இவ் வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, குருபரமகுருஸர்வகுருபதபஹுவ சந ப்ரதிபாத்யர்-கோபலீவர்தந்யாயத்தாலே பிள்ளானும் ஆழ்வானும் ஆண் டானும் அநந்தாழ்வானும் அவர்களுக்குஅபிமதராயிருந்துள்ள ஸ்ரீவைஷ்ண வர்களும் என்று இங்ஙனே விபஜித்துப் பொருள்சொல்லக்கடவது.

அப்படியே எம்பார்திருவடிகளிலே ஆஶ்ரயித்த பட்டர் இவ்வாக்யத்ர யத்தை அநுஸந்திக்கும்போது, குருபரமகுருஸர்வகுருபதபஹுவசநப்ரதி பாத்யர் - அடைவே எம்பாரும் பிள்ளானும் ஆழ்வானும் ஆண்டானும்அவர் களுக்குஅந்தரங்கராயிருந்துள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் என்று பூர்வம்போலே இங்ஙனே விபஜித்துப் பொருள்சொல்லக்கடவது.

பின்னையும் அப்படியே பட்டர்திருவடிகளிலேஆஶ்ரயித்த நஞ்சீயர் இவ் வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, குருபரமகுருஸர்வகுருபதபஹு வசநப்ரதிபாத்யர் - பட்டரும் எம்பாரும் பிள்ளானும் ஆழ்வான் ஆண்டான் தொடக்கமானரு மென்று பூர்வம்போலே யதாஸம்பவம் இங்ஙனே விபஜித் துப் பொருள்சொல்லக்கடவது.

பின்னையும் அப்படியே நஞ்சீயர்திருவடிகளிலே ஆஶ்ரயித்த நம்பிள்ளை இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, குருபரமகுருஸர்வகுருபத பஹுவசநப்ரதிபாத்யர்-நஞ்சீயரும் பட்டரும் எம்பாரும் பிள்ளானும் அவர்

(க) "సహపత్న్యావిశాలాక్ష్యా నారాయణముపాగమత్." (உ) "రామానుజపదచ్ఛా యా."

களுக்கு ஸப்ரஹ்மசாரிகளாய்ப் பஹுமந்தவ்யராயிருந்துள்ள * இராமாநுசனைத் தொழும் பெரியோர்களுமென்று இங்ஙனே விபஜித்துப் பொருள் சொல்லக்கடவது.

இக்குருபரம்பரைதான் ஆரோஹக்ரமத்திலே (க) "ஆபகவத்த:" என்று பகவானளவுஞ்சென்று அவர்களுக்குச் செல்லக்கடவதொன்று: இங்ஙனேயிருந்தாலும் அவரோஹக்ரமத்திலே வந்தால் "இராமாநுசன்தாள்பிடித்தார் பிடித்தாரைப் பற்றி" இத்யாதிப்படியே மேன்மேலே*கொழுந்துவிட்டுப்படர்ந்துசெல்லக்கடவதொன்றுகையாலே, நம்பிள்ளைதிருவடிகளிலே ஆஶ்ரயித்த வடக்குத்திருவீதிப்பிள்ளையும் அவர்திருவடிகளிலே ஆஶ்ரயித்த பிள்ளைலோகாசார்யர் தொடக்கமானாரும் இவ்வாக்யத்ரயத்தை அநுஸந்திக்கும்போது, இவ்வாக்யத்ரயகத குரு பரமகுரு ஸர்வகுருபதப்ரதிபாத்யர் - இன்னாரின்னாரென்னுமிடம் ஆசார்யர்களுடைய திருநாமங்களிலே கண்டுகொள்வது. அப்படியே பஹுவசநப்ரதிபாத்யர் - அவர்களுக்கு உயிர்நிலையாய்த் தந்தாமுக்குப் பஹுமந்தவ்யராய்க்கொண்டு,கொடியைக் கொள்கொம்பிலே துவக்கும் சுள்ளிக்கால்போலே தந்தாமை அவரவர்கள் திருவடிகளிலே சேர்க்கும் ஸ்ரீவைஷ்ணவர்களென்று கண்டுகொள்வது.

இனி, "ஸ்ரீமதேராமாநுஜாயநம:" இத்யாதி வாக்யதஶகத்திலும் வைத்துக்கொண்டு"ஶ்ரியைநம:","ஸ்ரீதராயநம:"என்கிற வாக்யத்வயத்தில் (உ)"ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:" என்றும், (ங) "ஶ்ரீரித்யேவசநாமதே" என்றும் சொல்லுகையாலே ஸ்ரீஶப்தம் பெரியபிராட்டியாருக்கு வாசகமாயிருக்கும்; மற்றை எட்டுவாக்யத்திலும் ஸ்ரீஶப்தம், (ச) "நஜ்ஞாநதுல்யம் தநமஸ்திகிஞ்சித்" என்றும், (ரு) "பகவத்பக்திரேவாத்ர ப்ரபந்நாநாம்மஹாதநம்"என்றும் சொல்லுகையாலே ஜ்ஞாநபக்திகளாகிற மஹாஸம்பத்துக்கு வாசகமாயிருக்கும்.

இதில் சிலவாக்யங்களில் ஸ்ரீஶப்தம் ஸவிபக்திகமதுப்ப்ரத்யயோபேதமாயும், சிலவாக்யங்களில் லுப்தவிபக்திகமதுப்ப்ரத்யயோபேதமாயும்,சிலவாக்யங்களில் மதுப்ப்ரத்யயரஹிதமாயும் இங்ஙன் வைரூப்யேண நிர்த்தேஶிக்கைக்கு நிபந்தநம் - சிலருடைய ஜ்ஞாநபக்திகள் விஶததமங்களாய், சிலருடைய ஜ்ஞாநபக்திகள் விஶததரங்களாய்,சிலருடைய ஜ்ஞாநபக்திகள் விஶதங்களாயிருக்கையாலே; அது எங்ஙனேயென்னில்:—பங்கயத்தாள்திருவடியைப் பற்றின ஸேனைமுதலியாருடையவும், அவ*ரடிக்கண்ணிசூடிய ஆழ்வாருடையவும், அவ*ரடிபணிந்துய்ந்த உடையவருடையவும் ஜ்ஞாநபக்திகள் விஶததமங்களாயிருக்கும். திருக்குருகூர்நம்பிக்கு அன்பரான நாதமுனிகளுடையவும், தத்விஷயீகாரபாத்ரபூதரான யமுனைத்துறைவருடையவும் ஜ்ஞாநபக்திகள்விஶததரங்களாயிருக்கும். சீலமிகுநாதமுனிசீருரைக்கும்ப்ரியஶிஷ்யரான உய்யக்கொண்டாருடையவும், தச்சிஷ்யரான மணக்கால்நம்பியுடையவும், தத்ப்ரியஶிஷ்யரான பெரியநம்பியுடையவும் ஜ்ஞாநபக்திகள் விஶதங்களாயிருக்கும்.

---

(க) ఆభగవత్తః." (உ) "శ్రీరితిప్రథమన్నామలక్ష్మ్యాః" (ங) "శ్రీరిత్యేవచనామతే."
(ச) "నజ్ఞానతుల్యం ధనమస్తికిఞ్చిత్." (ரு) "భగవద్భక్తిరేవాత్ర ప్రపన్నానాంమహాధనం."

இவர்களுடைய ஜ்ஞாநபக்திகள் ஏகரூபமாயிராதே இங்ஙன் தரதமபா வோ இருக்கைக்கு ஹேது என்னென்னில்:—ஸேநைமுதலியாருடையவும் நம்மாழ்வாருடையவும் ஜ்ஞாநபக்திகள்தாம் - ப்ரபத்திமார்க்கத்தை விஷ்வக்ஸேநஸம்ஹிதையிலே பரக்கத் தர்ஶிப்பிக்கைக்கும், ப்ரபத்தவ்யனான எம்பெருமான்படிகளை உள்ளபடி அனைவர்க்கும் அறிவிக்கைக்கும், அப்படியே (க) "ப்ரியேண ஸேநாபதிநாந்யவேதிதத் ததாநுஜாநந்தமுதாரவீக்ஷணை:" என்று மதிப்புடையார் சொல்லும்படிக்கும் அவனடியாகப் பிறந்தவையாயிருக்கையாலும்; திருவாய்மொழிமுகத்தாலே "தந்தனன் தனதாள் நிழலே," "கழல்களன்றி மற்றோர்களைகணிலங் காண்மின்களே", "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று ப்ரபத்திமார்க்கத்தைப் பலபடியாலும் தம்முடைய உக்த்யநுஷ்டாநங்களாலே ஸ்பஷ்டமாக்குகைக்கும், "உயர்வறவுயர் நலமுடையவன்," "மயர்வறமதிநலமருளினன்", "தேவர்க்குந்தேவாவோ" என்று ப்ரபத்தவ்யனுடையபடிகளைப் பத்தும்பத்தாக ஏற்றியெடுக்கைக்கும், "உம்முயிர்வீடுடையான்", "யானேநீ யென்னுடைமையும் நீயே", "தொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்" என்று ப்ரபத்தாவின்படிகளைப் பலவகையாகத் தர்ஶிப்பிக்கைக்கும், "பேரமர்காதல்கடல்புரையவிளைவித்த", "கொண்டஎன்காதலுரைக்கிற்றோழி, மண்திணிஞாலமு மேழ்கடலும் நீள் விசும்புங் கழியப்பெரிதால்", "சூழ்ந்ததனிற்பெரிய என்னவா" என்று பிராட்டிமார் பேச்சாலும் தம்பேச்சாலும் தம்முடைய ஆற்றாமையை அறிவிக்கைக்கும் உறுப்பாயிருக்கையாலும் விஶததமங்களாயிருக்கும். உடையவருடைய ஜ்ஞாநபக்திகள் - (உ) "பவது மம பரஸ்மிந் ஶேமுஷீ பக்திரூபா" என்று தாமும் (ங) "அச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம வ்யாமோஹத:" என்று ஆழ்வானும் அருளிச்செய்யலாம்படி அவனடியாகப்பிறந்தவையாய் மத்யத்ரய ஸ்ரீபாஷ்யாதிமுகத்தாலே ஶரணாகதிபக்திஶாஸ்த்ரங்களை அடைவே வெளியிடுகைக்கும், "அவ்வெழில்மறையிற்சேராதவரைச்சிதைப்பது அப்போதொரு சிந்தைசெய்தே" என்கிறபடியே தம்முடைய தாதாத்விகப்ரதிபையாலே ப்ரதிவாதிவாரணப்ரகடாடோபவிபாடநத்துக்கும், *நூறுதடாவில் வெண்ணெயையும்*நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலையும் நாச்சியார்மனோரதித்தபடியே பரமஸ்வாமியான அழகர்க்குத் தாம் அமுதுசெய்தருளப்பண்ணுகைக்கும், துருஷ்கன்படைவீட்டிலேசென்று அவன்மகள்மாளிகையிலேயிருந்த ராமப்ரியரை "வருக வருக வருக விங்கே" இத்யாதிப்படியே தாமே அழைத்தருளி அவர்தம்அருகேஓடியோடிவந்தவாறே '*என்செல்வப்பிள்ளாய் வாராய்' என்று அவர்க்குத் திருநாமஞ்சாத்தித் தம்மார்பிலே அணைத்துக் கொள்ளுகைக்கும், புழுவன்பட்டவ்ருத்தாந்தத்தைத் திருக்கல்யாணிக்கரையிலே தம்ஸந்நிதியிலே சென்று மாறொன்றில்லாமாருதியாண்டான் விண்ணப்பஞ்செய்யக் கேட்டுப் பெரியப்ரீதியோடே *செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரான பெரியபெருமாளை மங்களாஶாஸநம்பண்ணுவதாகக் கோலிக் கோயிலுக்குளெழுந்தருளும்போது தாமேஐம்பத்திருவரைச்*செயல்நன்றாகத்

(க) "ప్రియేణ సేనాపతినాన్యవేదిత త్తథానుజానన్తముదారవీక్షణైః." (உ) "భవతుమమపర స్మిన్ శేముషీభ క్తిరూపా." (ங) "అచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మవ్యామోహతః."

திருத்தித் தத்விஷயத்திலே பரிவராயிருக்கும்படி நியமிக்கைக்கும், கரை கட்டாக் காவிரிபோலே கரைபுரண்டு ஆஸ்ரயத்தளவன்றிக்கே யிருக்கைக்கும் உடலாயிருக்கையாலே விஸததமங்களாயிருக்கும். ஸ்ரீமந்நாதமுநிகளுடையவும் ஆளவந்தாருடையவும் ஜ்ஞாநபக்திகள் - இந்நன் விஸ்ருங்கலமாய்க் கரைபுரண்டிராதே அளவுபட்டு அரையாறுபட்டுத் தந்தாமை ஆஸ்ரயித்தவரளவிலே தானே அடங்கி ஒன்றிரண்டு ப்ரபந்தங்களை இட்டருளுகைக்கு உடலாயிருக்கையாலே, விஸததரங்களாயிருக்கும். உய்யக்கொண்டாருடையவும் மணக்கால்நம்பியுடையவும் பெரியநம்பியுடையவும் ஜ்ஞாநபக்திகள் - கீழ்ச்சொன்னபடியிராதே சிறியாறுபட்டுப் பரிமிதங்களா யிருக்கையாலே, விஸதங்களாயிருக்கும்.

இப்பதின்மூன்றுவாக்யங்களிலும் முந்தினவாக்யங்கள்மூன்றும், வேதமாகிற ஸாஸ்த்ருருசிபரிக்ருஹீதங்களா யிருக்கும்; மற்றைவாக்யங்கள்பத்தும், ஆசார்யருசிபரிக்ருஹீதங்களா யிருக்கும்.

அபௌருஷேயமாயும் பௌருஷேயமாயு மிருக்கிற ரஹஸ்யத்ரயத்துக்கு ஏகாவ்யவித்வஞ் சொன்னவோபாதி, இப்படி அபௌருஷேயமாயும்பௌருஷேயமாயு மிருந்துள்ள இப்பதின்மூன்றுவாக்யத்துக்கும் ஏகாவயவித்வம் சொல்லத் தட்டில்லை. அப்படியே (க)"நமருஷிப்ய:" என்று அபௌருஷேயமானுப்போலே நமஸ்ஸப்தம் முன்னாக இவ்வாக்யத்ரயத்தையும் நிர்த்தேஸியாதே அஸ்மத்ஸப்தம்முன்னாக நிர்த்தேஸித்தது, (உ)"அகிலபுவந" என்கிற இடத்தில் மாங்களிகமான அகாரத்தைப்போலே மாங்களிகமான அகார உபக்ரமஸித்யர்த்தமாக. அப்படி முந்தினவாக்யத்தை அகாரோபக்ரமஸித்யர்த்தமாக அஸ்மத்ஸப்தத்தை முன்னிட்டு நிர்த்தேஸித்தவோபாதி, மற்றையிரண்டுவாக்யங்களையும் அஸ்மத்ஸப்தத்தைத்தானே முன்னிட்டுநிர்த்தேஸித்தது, (ங)"ஸந்நோமித்ரஸ்ஸம்வருண:, ஸந்நோஹவத்வர்யமா" என்னுமாபோலே.

த்ரயோதஸவாக்யாத்மகமான இக்குருபரம்பராரூபமந்த்ரந்தான், ஸ்ரீஸஹஸ்ரநாமமாலாமந்த்ரம்போலே அநேகநமஸ்ஸப்தஸரீரகமாய், த்வாரஸேஷிகளுக்கும் ப்ரதாநஸேஷிகளுக்கும்அடைவே ப்ரதிபாதகமாய், ப்ரதமமத்யமசரமாவதிரூபமான பர்வத்ரயப்ரகாஸகமாய், உபதேஷ்ட்ரு உபதேஸ உபதேஸ்ய ரூப மூன்றுவர்க்கத்துக்கும் ஸாம்ப்ரதாயிகத்வ ஸாத்குண்ய போக்யதைகளுக்கும் ஸம்பாதகமாய், 'வக்தவ்யம் குருபரம்பரையும் த்வயமும்' என்கையாலே த்வயத்தோபாதி ஸதாநுஸந்தேயமாய், தன்னைமுன்னிட்டு ரஹஸ்யத்ரயத்தை அநுஸந்திப்பாரை "நாவகாரியஞ்சொல்லிலாதவர்" என்று * மயர்வறமதிநலமருளப்பெற்றவர் கொண்டாடும்படி பண்ணக்கடவதாய், "அஸ்மத்" என்று அகாராதியாக உபக்ராந்தமாய், அப்படியே ஸ்ரீநமஸ்ஸப்தங்களைப் பலவிடங்களிலும்இடையிலேயுடைத்தாய், "ஸ்ரீதராயநம:" என்றுமாங்களிகமான நமஸ்ஸப்தத்தோடே நிகமிக்கப்பட்டதா யிருக்கையாலே, கார்த்ஸ்ந்யேந மங்களாத்மகமா யிருக்கும்.

குருபரம்பராவிவரணம் ஸம்பூர்ணம்.

---

(க)"నమఋషిభ్యః" (உ)"అఖిలభువన." (ங)"శన్నో మిత్రశ్శం వరుణః, శన్నో భవత్వర్యమా."

# பிரகடன பத்திரம்.



பின்பழகியபெருமாள்சீயர் அருளிச்செய்த ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (திருத்தமான புதிய பதிப்பு: உயர்ந்த கடிதத்தில் அச்சிட்டது.) குருபரம்பராவிவரணமென்கிற அருமையான கிரந்தத்துடன் விலை ரூபா - உ.

பிள்ளைலோகார்யசீயர் அருளிச்செய்த யதீந்த்ரப்ரவணப்ரபாவம் (திருத்தமான புதிய பதிப்பு:) சீக்கிரத்தில் வெளியாகும்.



இவைவேண்டியவர்கள், திருவல்லிக்கேணி தெளிசிங்கப்பெருமாள்கோவில்வீதி எஅ - ஆவது கிருகத்தில் (சென்னை ராயபேட்டை வெஸ்லிகாலெஜ் தமிழ்ப் பிரதமபண்டிதர்) சே. கிருஷ்ணமாசாரியாரிடத்திலும், ஷை வீதி கஎ - ஆவது கிருகத்தில் (சென்னை ஸி. யஸ். யம். காலெஜ் தமிழ்ப்பண்டிதர்) வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியாரிடத்திலும், கும்பகோணம்காலெஜ் தமிழ்ப்பண்டிதர் வை. மு. சடகோபராமானுஜாசாரியாரிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

